# சூபித்துவ தரீகாக்கள் அன்றும் இன்றும்...

தயாரிப்பு : ஏ.சீ முஹம்மது ஜலீல் ( மதனீ )

இரங்கலுரை.

இந்தியாவின் தமிழகத்திலே நெய்வேலி எனும் ஊரைப் பிறப் பிடமாகக் கொண்டவர்தான் சகோதரர் எம் .யூஸுப் பாய் அவர்கள். சிறுபிராயத்திலிருந்தே தஃவாப்பணியில் தம்மை ஈடு படுத்திக் கொண்டவர்கள். மிக நீண்டகாலமாகவே தப்லீக் ஜமாஅத் அமைப்பில் இணைந்து செயற்பட்டு பல்வேறு இடங்களுக்கெல்லாம் நீண்ட வக்துக்களில் சென்று, பல தப்லீக் பெரியார்களைச் சந்தித்து அளவலாவிய அனுபவங்கள் அவர்களுக்கு நிறையவே உண்டு. தப்லீக் அமைப்பிலுள்ள பல விடயங்கள் குர்ஆன் ஹதீஸுக்கு முரணாவதாக அவரது மனம் உறுத்தவே பெரியார்களிடம் அது பற்றிக்கேட்க அவர்கள் சொன்ன பதில் திருப்தியளிக்காததால் அதிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு குர்ஆன் ஹதீஸின் பிரகாரம் தஃவத்துச் செய்யும் அமைப்புகளோடு இணைந்து கொண்டார். அல்ஜுபைல் தஃவா நிலையத்தில் நீண்ட காலமாகவே தன்னார்வத் தொண்டராக தஃவாப் பணியில் ஈடுபட்டு வந்த இவர் தாயிகளுக்கு ஒரு முன்மாதிரியானவராக பல அருங்குணங்கள் மிக்கவராயிருந்தார். அவர் தான் மேற்படி தலைப்பில் ஒரு நூல் எழுதும் எண்ணம் இருப்பதாக நான் சொன்னபோது என்னை ஊக்கப்படுத்தி இப்படியான ஒரு நூல் எழுதப்பட வேண்டியதன் அவசியத்தையும் உணர்த்தி அதற்கான உஷாத்துணை நூல்கள் பலவற்றையும் தேடியெடுத்துத் தந்து உதவியவர். பின்னர் அவரே இந்த நூல் முற்றுப் பெற்றதும் அதனைப் பெற்று சரிபார்த்தும் தந்தார். அன்னார் கடந்த சில நாட்களுக்கு முன் நடந்த சாலை விபத்தொன்றில் திடீர் மரணமடைந்து விட்டார்கள. இன்னாலில்லாஹி வஇன்னா இலய்ஹி ராஜிஊன். அல்லாஹ் அன்னாரின் பாவங்களை மன்னித்து அவர்களுக்கு ஜன்னத்துல் பிர்தவ்ஸைக் கொடுப்பானாக. ஆமீன் யா ரப்பல் ஆலமீன் .

## பொருளடக்கம்

## முன்னுரை

புகழனைத்தும் ஒரே இறைவனாகிய அல்லாஹ்வுக்கே உரித்தாகட்டும். சாந்தியும் சமாதானமும் இறுதித் தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் மீதும் அவர்களது தோழர்கள், குடும்பத்தவர்கள், அவர்களின் வழி நடந்தோர் அனைவர் மீதும் உண்டாகட்டுமாக . ஆமீன்

தரீக்காக்களின் வரலாறு என்பது மிக நீண்ட காலம் தொட்டே முஸ்லிம் மக்களின் மனதிலே புரையோடிப் போய் தவறானதொரு கணிப்பில் பவனி வந்து கொண்டிருக்கின்றதென்றால் அது மிகையாகாது. இந்தத் தரீக்காக்களின் சுயரூபம் பற்றி அறிவதற்கு முன் இதன் ஸ்தாபகர்களும் இயக்குனர்களுமான சூபிகள் பற்றி - இவர்களது கொள்கை கோட்பாடுகள் பற்றி அறிவது இன்றியமையாததாகும் .

இன்றைய முஸ்லிம் சமுதாயத்தில் 'தரீக்காக்கள்,சூபித்துவம், சூபிகள்' போன்ற சொற்பிரயோகங்கள் அனைவருக்கும் மத்தியில் பரிச்சயமானதொன்றாகும். ஆனால் இதன்

கருத்தோட்டம் எவ்வாறு இவர்கள் மத்தியில் புரிந்து வைக்கப்பட்டிருக்கின்றது என்பதைப் பார்க்கும் போதே ஆச்சரியம் கலந்த வேதனையை எமக்கு அது அளிக்கின்றது. ஆமாம் சாதாரண முஸ்லிம் சமூகத்தினர் பண்டிதர் முதற்கொண்டு பாமரர் வரைக்கும் 'சூபிகள் எனப்படுவோர் இறைநேசச் செல்வர்கள். தொழுகை, நோன்பு, திக்ர், போன்ற இன்ன பல வணக்கங்களில் தம்மை அதிகமாக ஈடுபடுத்திக் கொண்டவர்கள். இதனால் சாதாரண மக்களை விட ஒருபடி மேலேசென்று அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெற்றவர்கள் என்றும், முழுக்க முழுக்க இஸ்லாமிய அனுஷ;ட்டானங்களைப் பின்பற்றி நடப்பவர்கள் இவர்கள் தான்' என்பது போன்ற ஒரு போலியான கருத்துக் கண்ணோட்டமும் அதிகப்படியான முஸ்லிம் மக்களின் உள்ளங்களில் புரையோடிப் போயிருப்பதை வருத்தத்துடன் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டி யுள்ளது. எனவே சூபித்துவம் என்றால் என்ன? இது எங்கிருந்து தோற்றம் பெற்றது? இதற்கும் இஸ்லாத்திற்கும் என்ன சம்பந்தம்? இதுபற்றி இஸ்லாத்தின் நிலைப்பாடு என்ன? இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகளுக்கு இது எந்தளவு முரண்பட்டு நிற்கின்றது போன்ற விடயங்களைச் சுருக்கமாகத் தெளிவு படுத்துவதே இப்பிரசுரத்தின் நோக்கமாகும்.

அதே போன்று இன்று நவீன சூபித்துவமாக விஷபரூபமெடுத்து இதே சூபித்துவத்தின் அடிப்படைக் கொள்கைகளின் நிழலில் கட்டியெழுப்பப்பட்டிருக்கும் ஒரு அமைப்புதான் தப்லீக் ஜமாஅத் எனும் அமைப்பாகும். இது இன்று பாமர மக்கள் மத்தியில் மிகுந்த செல்வாக்குப் பெற்று தீன் வழி நடக்கும் ஒரே அமைப்பு என்றும், இதிலே தம்மை ஈடுபடுத்திக் கொள்ளாதவர்கள் தீனை விட்டும் தூரமானவர்கள் என்றும் தப்புக்கணக்குப் போட்டுப் பிரச்சாரம் செய்து கொண்டிருக்கும் அமைப்பாகும். இவ்வமைப்பின் அடிப்படை விதிகள் எப்படி சூபித்துவக் கருத்துக்களைச் சார்ந்திருக்கின்றன என்றும், இதன் ஆரம்ப ஸ்தாபகர்கள், சமகால முக்கியஸ்த்தர்களுக்கு சூபித்துவத்துடன் இருக்கும் தொடர்பு பற்றியும் முடிந்தளவு சுட்டிக் காட்டுவதும் இப்பிரசுரத்தின் நோக்கமாகும்.

அத்துடன் உலகிலுள்ள முக்கிய மார்க்க அறிஞர்கள், முப்தீகள் போன்றோர் இவ்வமைப்புப் பற்றி வெளியிட்டுள்ள பத்வாக்கள் சிலவற்றையும் எடுத்துக் காட்டுவதுடன் நபியவர்களுடைய தூய ஸுன்னாவுக்கு எந்ததெந்த வகையில் இவ் வியக்கத்தின் செயல்முறைகள் பல முரண்பட்டு நிற்கின்றன என்றும் முடிந்தளவு சுட்டிக் காட்ட விரும்புகின்றேன்.

எனவே அல்லாஹ் எம்மனைவருக்கும் இஸ்லாத்தை அல்குர்ஆனின், தூய ஸுன்னாவின் ஒளியில் நபித் தோழர்களும், தாபியீன்களும் விளங்கியது போல் அதே வழியில் விளங்கி அதன்படி செயற்பட்டு ஈருலகிலும் வெற்றிபெற்றிட அருள் பாலிப்பானாக ஆமீன்..

## உள்ளே செல்லுமுன்... .

சூபித்துவத் தரீக்காக்கள்பற்றி தமிழக, இலங்கை முஸ்லிம்கள் மத்தியில் மட்டுமின்றி அரபுலக முஸ்லிம்களில் கணி சமானோரிடம் கூட இன்று வரைக்கும் சரியான கருத்துக் கண்ணோட்டம் வரவில்லையென்றே சொல்லவேண்டும் . காரணம் காலாதி காலாமாக இவர்களைப் பற்றிய உண்மை அறிமுகம் உலமாக்ளாலோ தமிழுலக எழுத்தார்களாலோ அதன் தூய வடிவில் முன்வைக்கப்படவில்லை என்பதை ஏற்றுக் கொண்டுதான் ஆக வேண்டியுள்ளது .

எனவே இதுபற்றிய உண்மைகளை அல்குர்ஆன் அல்ஹதீஸின் ஒளியில் தோலுரித்துக் காட்டுவதே இச்சிறு நூலின் நோக்கமாகும். இதன் மூலம் இஸ்லாத்தை அதன் தூய வடிவில் மக்கள் விளங்க உதவுவதுடன் இந்தத் தரீக்காக் களுக்கும், சூபிகளுக்கும் - தூய இஸ்லாமியக் கோட்பாடுகளுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லையென்பதை எடுத்துக் காட்டுவதும் என் நோக்கமாகும் .

எனவே முடிந்தளவு ஆதாரப்பூர்வமான தகவல்களுடன் இதைத் தொகுத்துள்ளேன். இருந்தபோதிலும் மனிதன் தவறிழைப்பவன் எனும் வகையில் எனக்கும் பல தவறுகள் ஏற்படலாம். அவ்வாறு உங்களுக்குப் புலப்படுமிடத்து அதனை என் கவனத்துக்குக் கொண்டு வருமாறு வாசக சகோதரர்களான உங்களைக் கேட்டுக் கொள்கின்றேன்.

-உங்கள் சகோதரன்...

## இஸ்லாத்தில் மெஞ்ஞானமா ?

நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள் முழு மனித சமு தாயத்துக்குமே நபியாக அனுப்பப்பட்டவர்கள். அவர்களுக்கு அல்லாஹ் மக்கள் நேர்வழி பெறவேண்டும் என்பதற்காக அல்குர்ஆனை அருளினான் . நபியவர்களும் உலக மக்கள் அனை வருக்கும் இவ்வுலகில் ஒருமனிதன் பிறந்ததிலிருந்து மரணிக்கும் வரை அவன் எதிர் நோக்கும் தேவைகள், பிரச்சினைகள் அனைத்திற்கும் தீர்வினை இனிதே கூறிச் சென்றிருக்கின்றார்கள் . அவர்களது வழிமுறையினை நாம் 'ஸுன்னா' என்று அழைக்கின்றோம். நபியவர்கள் இவ்வுலகை விட்டு மறைந்து செல்லும் போது இவ்வாறு கூறினார்கள்.

*'மக்களே நான் உங்களைத் தெட்டத் தெளிவானதொரு பாதையிலே விட்டுச் செல்கின்றேன் அதன் இருள் சூழ்ந்த இரவுப்பகுதி கூட பட்டப்பகலைப் போல் பிரகாசமிக்கதாய் விளங்குமளவுக்கு அவ்வழி மிகத் தெளிவான வழியாகும். தன்னைத் தானே அழிவின் பக்கம் போட்டுக் கொள்ளும் துரதிஷ்டமிக்கவனைத் தவிர வேறு எவரும் இவ்வழியை விட்டும் தடம் புரண்டு செல்ல மாட்டார்கள்'* (இப்னு மாஜா 43)

மேலும் கூறியுள்ளார்கள் *'நான் உங்கள் மத்தியில் இரண்டு விடயங்களை விட்டுச் செல்கின்றேன் . அவ்விரண்டையும் பலமாகப் பற்றிப் பிடித்திருக்கும் காலமெல்லாம் நீங்கள் வழிதவறி விட மாட்டீர்கள் , அவைதான் ஒன்று அல்குர்ஆன் அடுத்தது எனது குடும்பத்தினரின் வழிமுறையாகும்'* என்றார்கள் .
(முஸ்லிம் 2137)

நபித்தோழர் இப்னு மஸ்ஊத் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். *'ஒரு முறை நபியவர்கள் நீண்டதொரு கோட்டினை வரைந்தார்கள். பின் அக்கோட்டுக்கு வலது இடது புறமாகப் பலகோடுகளை வரைந்தார்கள். பின்பு இதோ இருக்கும் நேர்கோடு (போன்றது) தான் நான் உங்களுக்குக் காட்டிய வழி முறையாகும். அதற்குக் குறுக்கே இரு மருங்கிலும் இருக்கும் பாதைகள் ஷைத்தானுடைய பாதைகளாகும் . அவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு ஷைத்தான் இருந்து கொண்டு அதன் பக்கம் அழைப்பு விடுத்துக் கொண்டிருக்கின்றான் என்று கூறி விட்டுப் பின்வரும் வசனத்தை ஓதிக் காட்டினார்கள் .*

'நிச்சயமாக இது தான் எனது நேரான பாதையாகும் , எனவே இதையே நீங்கள் பின்பற்றுங்கள் (இதுவல்லாத) வேறு பாதைகளைப் பின்பற்ற வேண்டாம். ஏனெனில் அவை நேரான வழியை விட்டும் உங்களைப் பிரித்துத் தடுத்திடும். நீங்கள் நல்லறிவு பெறவேண்டுமென்பதற்காக அல்லாஹ் உங்களுக்கு இந்த உபதேசத்தைச் செய்கின்றான். (அல்அன்ஆம்153 )

.

எனவே மேற்படி நபிமொழிகளிலிருந்து நபியவர்கள் அனைத்து முஸ்லிம்களையும் அல்குர்ஆன் அல்ஹதீஸ் வழியிலேயே நடக்க வேண்டுமென்று வலியுறுத்தியிருப்பதுடன் அதைப் புறக்கணித்து வேறு வழியில் நடக்க முற்படும் போது நிச்சயமாக அது வழிகேட்டின் பக்கமே இட்டுச் செல்லும் என்றும் எச்சரித்திருப்பதை அறிய முடிகின்றது.

## ஸூபித்துவம் என்றால் என்ன ?...

ஸூபித்துவம் என்றால் என்ன என்பது பற்றிய தெளிவான வரை விலக்கணத்தை ஸூபித்துவ வாதிகளின் நூல்களில் கூட விரிவாகக் காணமுடியவில்லை. எனினும் அவர்களது கருத்துக்கள் சிந்தனைப் போக்குகளிலிருந்து இவ்வாறு விளங்க முடிகின்றது.

ஸூபித்துவம் என்பது 'இஸ்லாமியப் போர்வையில் உருவாக்கப்பட்ட யூத, கிருஸ்த்தவ, கிரேக்கம் போன்ற மாற்று மத தத்துவங்களிலிருந்து காப்பியடிக்கப்பட்ட சித்தார்த்தங்களை அடிப்படையாக வைத்து துறவரம் பூண்டு ஆத்மீகவழி நடப்பதாகக் கூறிக் கொள்ளும் ஒரு கொள்கைக்கே ஸூபித்துவம் எனப்படும்' இதன் வழி நடப்பவர்கள் ஸூபிகள் என அழைக்கப்படுவார்கள் .

எனவே பாமர மக்கள் நம்புவதைப் போன்று உலக ஆசாபாசங்களைக் கட்டுப்படுத்தி ஆத்மீகப் பாதையின் பக்கம் அழைக்கும் ஒரு அமைப்பே ஸூபித்துவம் , ஸூபிகள் அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெற்ற இறைநேசச் செல்வர்கள் என்பதெல்லாம் உண்மைக்குப் புறம்பான அப்பட்டமான மூடத்தனமான கருத்தாகும். ஸூபித்துவம் பற்றி எடுத்துக் கூறிய தமிழ் நூல்கள் கூட இவர்களின் யதார்த்த நிலை பற்றிப் பெரிதாக ஆராயாது இதைப் பற்றி நல்லபிப்பிராயம் தெரிவித்திருப்பதன் விளைவே இந்த இறை மறுப்புச் சித்தாந்தம் இன்று பாமர மக்கள் மத்தியில் பரவி நன்மதிப்பைப் பெற்றுள்ளது. எனவே இதற்கும் இஸ்லாத்துக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. இதற்கும் நபிகளுக்கும் எவ்வித தொடர்பும் இல்லை. மாறாக நபியவர்கள் கூறியது போல் சீரிய நபி வழியை விட்டும் நெறி தவறிய வழிகெட்ட கூட்டங்களில் மிகமிக வழிகெட்ட கூட்டத்தினரே இந்த ஸூபித்துவ வாதிகள் என்பதை ஒவ்வொரு முஸ்லிமும் அறிந்து வைத்திருப்பது அவசியமாகும் .

## ஸூபித்துவத்தின் தோற்றம் .

இவ்விடத்தில் முக்கியமான ஒரு விடயத்தை அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். அதாவது அல்லாஹ்வின் பகிரங்க விரோதியான ஷைத்தான் மனித சமூகத்தை நேர்வழியை விட்டும் திசை திருப்பி நரகத்தில் வீழ்த்துவதற்காக இரண்டு விதமான யுக்திகளைக் கையாள்வான். ஒன்று இஸ்லாமியக் கோட்பாடுகள் சட்ட திட்டங்களைக் கடைப்பிடிப்பதில் வெறுப்பை ஏற்படுத்தி அதன் மூலம் இஸ்லாத்தை விட்டும் தூரமாக்கி வெளியேற்றி பாவச் செயல்களில் ஈடுபடச் செய்து வழிகெடுத்து விடுவான். கொஞ்சம் இறை பக்தி ஆத்மீகப் பற்று வணக்க வழிபாடுகளில் ஆர்வம் செலுத்துவோரை வழிகெடுப்பதற்கு மற் றொரு வழிமுறையைக் கடைப் பிடிப்பான் . அதாவது அவர்களின் மார்க்க அறிவின்மையைப் பயன்படுத்தி இஸ்லாத்தில் இல்லாத, இஸ்லாம் தடுத்த விடயங்களை அவைதான் இஸ்லாமிய அனுஷ்ட்டானங்கள் என நம்ப வைத்து அதன் வழியில் நடக்க வைத்து வழிகெடுத்து விடுவான். இந்த வகையில் ஷைத்தானால் சூழ்ச்சி செய்யப்பட்டு ஆத்மீகத்தின் பெயரால் வழிகெடுக்கப்பட்டவர்களே ஸூபித்துவ வாதிகள் எனும் உண்மை ஆரம்ப கால ஸூபிகளில் வரலாற்றைப் படிக்கும் போது தெளிவாகும்.

உண்மையைச் சொல்லப் போனால் ஸூபித்துவ வாதிகள் தமக்கு இருப்பதாக வாதிடும் மறைவான அறிவு, கஸ்பு, தரீக்கத், ஹக்கீக்கத், மஃரிபத் ஞானம், ஜத்பு ( தன்னை மறந்த நிலை), பனாஃ (கடவுளோடு சஞ்சரித்தல்) இவை போன்ற அனைத்து விவகாரங்களும் இவர்கள் மீது ஷைத்தான் ஆதிக்கம் செலுத்தி இவர்களை வழி கெடுப்பதற்காக இவர்களின் சிந்தனையில் ஏற்படுத்தும் குழப்பங்களேயாகும். இவையனைத்தும் அவனின் மா யாஜால யுக்திகளே என்பதை முதலில் தெளிவாக நாம் அறிந்து கொள்ள வேண்டும் .

சரி விடயத்துக்கு வருவோம்.

ஸூபித்துவம் எப்போது ஆரம்பமானது என்று ஆராயும் போது நபி (ஸல்) அவாகளின் காலத்திலோ அவர்கள் உருவாக்கி விட்டுச் சென்ற ஸஹாபாச் சமூகத்தினர் மத்தியிலோ, அதன் பின் சிறந்த காலத்தினரென நபியவர்கள் விதந்துரைத்த தாபியீன்களது காலத்திலோ இவ்வாறான ஒரு வாசகமே உபயோகத்தில் இருந்ததில்லையென்று அடித்துச் சொல்ல முடியும். ஆனால் நபியவர்களின் காலத்திலும் அதற்கு முந்திய காலத்திலும் கூட இன்றைய வழிகெட்ட ஸூபிகள் கொண்டுள்ள கருத்துக்களும், சித்தாந்தங்களும் அக்கால யூத ,கிறிஸ்த்தவ, இந்து, கிரேக்க, யூனானிய தத்துவங்களில் நிறைந்து காணப்பட்டதையும், அவை அந்தந்த சமூகத்தில் உள்ள ஒரு பிரிவினரிடம் செல்வாக்குப் பெற்று வெவ்வேறு பெயர்களில் அழைக்கப்பட்டு வந்ததையும் தெளிவாக அறிய முடியும்.

எனினும் ஆரம்ப கட்டமாக இஸ்லாமிய சமூகத்தின் மத்தியில் நபியவர்கள் ஏற்கனவே கூறி வைத்தது போல் பிரச்சினைகளும் குழப்பங்களும் ஏற்பட்ட வேளை இஸ்லாமிய சமூகத்தில் வாழ்ந்த சில நல்ல மக்கள் கூட இப்பிரச்சினைகளிலிருந்து ஒதுங்கி எவற்றிலுமே சம்பந்தப்படாமல் வாழமுற்பட்டது உண்மை. ஆனால் அவர்கள் முழுக்க முழுக்க இஸ்லாமிய வரையறைக்குள் இருந்தார்கள். இஸ்லாம் துறவரத்தைப் போதிக்கவில்லை. அதை எதிர்க்கின்றது. ஆனால் அதேவேளை உலக மாயைகளில் அதன் ஆசாபாசங்களில் வீழ்ந்து அதன் அலங்கா ரங்களில் மயங்கி தனது மறுமை வாழ்வை அழித்துக் கொள்ளக் கூடாது என்று எச்சரிக்கின்றது .

அல்குர்ஆன் கூறுகின்றது ...

அறிந்துகொள்ளுங்கள்!!. இவ்வுலக வாழ்க்கையானது வீண்விளையாட்டும், கேளிக்கையும், ஆடம்பர - அலங்காரமும், செல்வத்தையும் பிள்ளைகளையும் வைத்துப் பெருமையடித்துக் கொள்வதுமேயன்றி வேறில்லை . எப்படி ஒரு மழையின் மூலம் பயிர்கள் செழித்து வளர்வது கண்டு விவசாயிகள் ஆச்சரியப்பட்ட வேளை பின்னர் அது காய்ந்து மஞ்சள் நிறமாகி பின் சருகாகி விடுகின்றதோ .(இவ்வாறுதான் உலக வாழ்க்கையும்) . மறுமையில் (இவ்வுலகில் தீமை புரிந்தோருக்கு) மிகக் கடுமையான வேதனையும், (நல்லோருக்கு) அவனது கருனையும் மன்னிப்பும் காத்திருக்கின்றன. இவ்வுலக வாழ்க்கை (மனிதனை) மயக்கும் சொற்ப இன்பமேயன்றி வேறில்லை .
(ஸூரா அல்ஹதீத் : 20)

நீ உலக வாழ்வில் ஒரு வழிப்போக்கனைப் போன்று அல்லது அநாதரவானவனைப் போன்று வாழ்ந்து கொள். எனக்கும் இவ்வுலக ஆடம்பரத்திற்கும் என்ன சம்பந்தம்? நான் இளைப்பாறுவதற்காக ஒரு மர நிழலில் தங்கியிருக்கும் வழிப்போக்கனைப் போன்றே இவ்வுலகில் வாழ்கின்றேன் என் நபியவர்கள் இப்னு உமர் (ரழி) அவர்களுக்கு உபதேசித்திருக்கின்றார்கள் .

இப்னு உமர் அடிக்கடி இப்படிக் கூறுவார்கள்... காலையில் நீ விழித்தெழுந்தால் மாலை வரை உயிரோடிருப்போமென்று உறுதி கொள்ளாதே. மாலைப் பொழுதை அடைந்து விட்டால் மறுநாள் காலை விழித்தெழுவோமென உறுதி கொள்ளாதே. இவ்வுலகில் வைத்தே மறுமைக்குத் தேவையானதைச் சேகரித்துக் கொள் . (ஆதாரம்: புகாரி 5937 திர்மிதி 2299 இப்னு மாஜா 4099)

எனவே இஸ்லாமிய சமூகத்தின் மத்தியில் உதுமான் (ரழி) அவர்களது படுகொலைக்குப் பின் குழப்பங்களும் பிளவுகளும், அரசியல் அராஜகங்களும் தோன்ற ஆரம்பித்தபோது ஸூபித்துவம் என்ற பெயரில்லாவிட்டாலும் - முஸ்லிம் சமூகத்தின் மத்தியில் அறிமுகமான ஒரு இறைபக்தி மிகு கூட்டத்தினர் இஸ்லாமிய வரையறைக்குட்பட்ட இஸ்லாம் போதித்த விடயங்களை மாத்திரம் சமூகத்தின் மத்தியில் முன்வைத்து மக்களை உலக ஆசையிலிருந்து விடுவித்து ஆத்மீகத்தின் பக்கம் அழைத்துக் கொண்டிருந்தனர் என்பது உண்மை . அதன் காரணமாகவே அக் காலப் பகுதியில் வாழ்ந்த உலமாக்கள் இமாம்கள் கூட இந்தப்

பிரிவினருக்கு ஆதரவு நல்கியதும் உண்மை. ஆனால் காலப் போக்கிலேதான் அதாவது நபியவர்கள் சிறப்பித்துக் கூறிய மூன்று தலைமுறையினரின் காலத்தின் பின்னரே அன்னிய இந்து, கிரேக்க, யஹூதிய நச்சுக் கருத்துக்கள், விஷமத்தனமான சிந்தனைகளையெல்லாம் பின்வந்த ஸூபிகள் அவர்களது நூல்களின் மொழிபெயர்ப்பிலிருந்து இரவல் பெற்று அவற்றுக்கு இஸ்லாமியச் சாயம் பூசி சமூகத்தின் மத்தியில் ஸூபித்துவம் எனும் பெயரில் உலவ விட்டு விட்டார்கள். தாம் கோர்வை செய்த நூற்களிலும் இந்த சிந்தார்த்தங்களை விபரித்து அதற்கு உரமூட்டும் விதமாக ஒரு சில குர்ஆன் வசனங்களையும், நபி மொழிகளையும் அவற்றின் விளக்கத்தைத் திரிபுபடுத்திக் கூறி இந்த நச்சுக் கருத்துக்களும் அல்குர்ஆன் ஹதீதுகளில் கூறப்பட்டவைகள்தான் எனப் பாமரர்களையும் நம்பச் செய்து விட்டார்கள் .

இதன் பின்பு வாழையடி வாழையாக இந்த வழிகெட்ட கொள்கையைத் தத்தெடுத்த ஸூபித்துவ வாதிகள் அதிலுள்ள தவறான வழி கெட்ட சித்தார்த்தங்களை நியாயப்படுத்தி அதற்கு வலுவூட்டும் விதமாக குர்ஆன் ஹதீஸ் வசனங்களை வளைப்பதிலும் திரிபு படுத்துவதிலுமே தம்மை ஈடுபடுத்திக் கொண்டார்கள். அதுமட்டுமின்றி அப்பாஸிய ஆட்சியில் அனேக கிரேக்க தத்துவ நூல்கள் அறபியில் மொழி பெயர்க்கப்பட்டிருந்தன. இவற் றிலுள்ள தமது கொள்கைக்குச் சார்பான விடயங்களையும் அவற்றிலிருந்து திருடி அவற்றைத் தமது சொந்தக் கருத்துக்களாக மெஞ்ஞானம் என்ற பெயரில் பாமர மக்களுக்கும், தமது நூல்களிலும் அறிமுகப்படுத்தினார்கள். இங்கு ஒரு கவலைக்குரிய விடயம் யாதெனில் உண்மையாகவே, சமூகத்தின் மத்தியில் மதிக்கப்பட்ட கஸ்ஸாலி போன்ற சில பேரறிஞர, உலமாக்கள் சிலரும் இந்த வழிகெட்ட சிந்தனையால் உந்தப்பட்டு கவரப்பட்டு, சிந்தனைக் குழப்பத்துக்குற்பட்டு பின்னர் இக்கொள்கையை ஒருவகையில் அங்கீகரிக்கும் நிலைக்கு வந்து விட்டா ர்கள். அன்றைய முஸ்லிம் சமூகமே போற்றி வந்த இது போன்ற நல்ல உலமாக்களின் திடீர் மாற்றமே இவ்வழிகெட்ட கொள்கை மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெறுவதற்கு உரமாக இருந்தது என்பதே உண்மை. கஸ்ஸாலி இமாம் சிந்தனைக் குழப்பத்தில் இருந்த காலப்பகுதியில் கோர்வை செய்த 'இஹ்யா உலூமுத்தீன்' எனும் ஆத்மீகப் பயிற்சிக்குரிய விடயங்களை விளக்கும் இந்த நூலில் இந்த ஸூபித்துவ அத்வைதக் கொள்கை பற்றி ஆங்காங்கே பகிரங்கமாகக் குறிப்பிட்டிருப்பதையும், இக்கொள்கையுள்ள வழிகேடர்களுக்கு இடம் பெற்ற ஷைத்தானிய சேட்டைகள் சிலதைக் 'கராமத்' எனும் பெயரில் தம் நூலில் குறிப்பிட்டிருப்பதையும் அவதானிக்க முடியும். எனவே சமூக ஆதரவுள்ள இவரின் இச்செயல் சமூகத்தின் வழிகேட்டுக்கே பாலம் அமைத்துக் கொடுத்து விட்டது. 'இஹ் யா உலூமித்தீன்' மார்க்க அறிவுகளுக்கு உயிரூட்டல் எனும் பெயரில் வெளி வந்த இந்நூல் தூய இஸ்லாமிய மார்க்கத்தையே சாவடிக்கக் கூடியதாக - நஞ்சாக ஆகி விட்டதென்றால் மிகையாகாது .

எனவே அக்கால ஸூபித்துவ வாதிகளின் வழிகெட்ட சித்தாந்தங்களைச் சுருக்கமாகச் சொல்லப் போனால் இவர்கள் தமது அடிப்படைக் கொள்கைகளை நான்கு பிரிவுகளாக வகுக்கின்றனர். இஸ்லாத்தை இவ்வாறு கூறு போட்டு எந்த ஷிர்க்கையும் பித்அத்தையும் அழித்தொழிப்பதற்காக நபியவர்கள் அனுப்பப்பட்டார்களோ அந்தக் குறிக்கோளையே இடித்துத் தரைமட்டமாக்கும் வகையில் இஸ்லாத்தில் விளையாடியிருக்கின்றனர். அவர்களது வழிகெட்ட கொள்கைப்படி பின்வருமாறு இஸ்லாத்தைக்கூறு போட்டிருக்கின்றார்கள் .

சூபித்துவத்தின் அடிப்படைக் கொள்கைகள் .

ஷரீஅத் - (மார்க்கம்)
தரீக்கத் -- (ஆன்மீகப் பயிற்சி பெறல்)
ஹக்கீக்கத் -- (யதார்த்தத்தை அறிதல்)
மஃரிபத்-- (மெஞ்ஞான முக்தியடைதல்)

என இவர்கள் இஸ்லாத்தை நான்காக வகுத்திருப்பதை அறிந்து கொள்ள முடியும். இவை பற்றிச் சுருக்கமாகத் தெரிந்து வைத்திருப்பது நல்லது .

## ஷரீஅத்

ஸூபிகளிடத்தில் ஷரீஅத் எனப்படுவது தொழுகை, நோன்பு, ஜக்காத், ஹஜ் போன்ற சாதாரண மார்க்க அனுஷ்ட்டானங்களைக் குறிக்கும். இவர்களின் கருத்துப்படி ஆரம்ப நிலையிலுள்ள, உண்மை தார்த்தத்தை அறியாத பண்படாத சாதாரண பாமர மக்களுக்குரிய ஆத்மீகப் பயிற்சி நெறிகளே இவ்வகை வணக்கங்களாகும். இவற்றால் மனிதனுக்கு எவ்வித பயனும் ஏற்படப் போவதில்லை, நெல்லை மூடியிருக்கும் உமி போன்றதே ஷரீ அத் சட்டங்கள். உள்ளேயிருக்கும் அரிசியைப் போன்றதுதான் ஹக்கீக்கத். ஆரம்பப் பருவத்தில் உள்ளிருக்கும் அரிசியைக் கெடாமல் காக்க உமி அவசியம்தான் . எனினும் காலப் போக்கில் கதிர் முற்றியதும் அறுவடையின் பின் உமியை நீக்கித் தூர வீசி விடுவது போன்று ஹக்கீக்கத்தை அறிந்தவுடன் ஷரீஅத்தை - மார்க்க அனுஷ்ட்டானங்களைத் தூக்கி எறிந்துவிட வேண்டும் என்பதே இவர்களின் கோட்பாடு. ஆரம்பத்தில் ஒரு பயிற்சி நோக்கிலேயே இவற்றை ஒருவன் செய்கின்றான். நெல்லின் உள்ளிருக்கும் அரிசியை அடைய விரும்புபவன் உமி யைத் தூக்கி வீசி விடுவது அவசியம் போன்று ஒருவன் எதார்த்தத்தை அறிந்ததும் வெளிப்படையான அமல்களை மார்க்க அனுஷ்ட்டானங்களை விட்டு விட வேண்டும் என்பதே இவர்களது கோட்பாடு.

பிரபல ஸூபியான கஸ்ஸாலி இமாம்தான் இவ்வாறான ஒரு கொள்கையை அப்பாவி சமூகத்தின் மத்தியில் புகுத்தி லட்சக்கணக்கான மக்களின் வழிகேட்டுக்குக் காரணமாயிருந்தவர். இவர் ஒரு மார்க்க அறிஞரும் கூட. எனினும் ஸூபித்துவத்தால் கவரப்பட்டு இந்நிலைக்கு ஆளாகி விட்டார். இவர் இறுதித் தருவாயில் இவ்வழிகெட்ட கொள்கைகள் அனைத்தையும் விட்டு மீண்டு தவ்பாச் செய்து விட்டதாகவும், ஸூன்னத் வல் ஜமாஅத்தினரின் கொள்கைக்கு மாறி விட்டதாக வாக்குமூலம் கொடுத்ததாகவும் வரலாறு உண்டு என்பது தனி விடயம். இவர் எழுதிய' இஹ்யா உலூமுத்தீன்' எனும் நூல் பிரபலமானது. இதை இவர் நான்கு பகுதியாகப் பின்வருமாறு வகுத்திருக்கின்றார் .

அ- இபாதாத் - வணக்கங்கள் .
ஆ- ஆதாத் - பழக்க வழக்கங்கள் .
இ- முஹ்லிகாத்- மனிதனை அழித்துவிடத்தக்க பாவங்கள் .
ஈ- முன்ஜியாத் - நரகை விட்டும் பாதுகாக்கக் கூடியவைகள் .

இப்படி நான்கு பகுதிகளாகப் பிரித்து விட்டு நான்காவது பகுதி இருக்கின்றதே அதாவது முன்ஜியாத் - நரகை விட்டும் பாது காக்கக் கூடியவைகளின் பட்டியலில் அவர் குறிப்பிடுவது என்ன தெரியுமா? நரகை விட்டும் பாதுகாக்கும் ஒரே வழி தரீக்கத் மாத்திரமே!! தரீக்கத்தை -அதாவது ஆத்மீகப் பாதையை அடைய வேண்டுமா? ஷைக்கிடம் பைஅத் செய், அவருக்கு அடிமையாகு, அவரிலே அல்லாஹ்வைக் காண், அவர் சொல்வதைச் செய். அப்படி நீ தரீக்கத்தின் வழி நடந்தால்தான் உன்னால் ஹக்கீக்கத்தை அடைய முடியும். ஹக்கீக்கத்தை அறிவதுதான் நரகை விட்டும் உன்னைக் காக்கும் என்பதே அதன் விளக்கம். இதன் படி இபாதத்கள் , தொழுகை நோன்பு , ஹஜ் போன்ற வணக்கங்கள் செய்வது எதுவுமே ஒரு முஸ்லிமை நரகை விட்டும் காப்பாற்றாது. மாறாக ஹக்கீக்கத்தைத் தெரிந்தால்தான் சுவர்க்கம் என்பது தான் கஸ்ஸாலியின் கொள்கை என்பது தெளிவாகின்றது .

ஆனால் அல்குர்ஆனிலோ அல்லாஹ் கூறுகையில் ...

நரக வாதிகளைப் பார்த்து சுவர்க்க வாதிகள் நீங்கள் நரகத் துக்கு வரக் காரணம் என்ன என்று கேட்ட போது அவர்கள் என்ன பதில் கூறுவார்கள் என்று இவ்வாறு கூறுகின்றான் ..

சுவன வாதிகள் நரகுக்குச் சென்ற பாவிகளிடம் 'நீங்கள் நரகம் வரக் காரணம் யாது' என்று வினவுவார்கள். அதற்கு அவர்கள் நாங்கள் தொழக் கூடியவர்களில் இருக்கவில்லை, ஏழைகளுக்கு உணவளிக்கவில்லை, வீணர்களுடன் கூடித்திரிந்தோம், நியாயத் தீர்ப்பு நாளைப் பொய்ப்பித்துக் கொண்டிருந்தோம்' என்பார்கள். (ஸூரா முத்ததிர் 41)

*நபி (ஸல் ) அவர்களிடம் ஒருவர் வந்து அல்லாஹ்வின் தூதரே.. நான் கடமையான தொழுகையைத் தொழுது, ரமழானில் நோன்பு நோற்று, ஹலாலானவற்றை எடுத்தும், ஹராமானவற்றைத் தவிர்ந்தும் வாழ்கின்றேன். இது தவிர வேறு எதுவுமே நான் செய்யவில்லை. இப்படியிருக்க நான் சுவர்க்கம் செல்வேனா? என்று கேட்க நபியவர்கள் ஆம் என்று கூறினார்கள்.* (ஆதாரம் முஸ்லிம் 18)

இவ்விரு ஆதாரங்களின் மூலமாகத் தொழாதிருத்தல், இபாதத் செய்யாதிருத்தல் தான் ஒருவன் நரகம் செல்லக் காரணமாகின்றது என்பதும் தொழுவதும் இதர இபாதத்களைச் செய்வதும் சுவனம் சேர்க்கும் என்பதும் தெளிவாகின்றது. ஆனால் கஸ்ஸாலியோ தரீக்காவில் சேராவிட்டால் சுர்க்கமே கிடையாது என்கின்றாரே??

இவ்வாறே கஸ்ஸாலி இமாமவர்கள் அறிவை இரண்டு வகையாகப் பிரிக்கின்றார்கள். உலக அறிவு, மறுமையின் அறிவு என்று. மேலோட்டமாகப் பார்ப்பவர்கள் சரிதானே.. இதிலென்ன தவறு என்பார்கள். ஆனால் கஸ்ஸாலி அதற்குக் கூறும் வியாக் கியானத்தைப் பாருங்கள்...

'உலக அறிவென்பது உலகில் செய்யும் இபாதத், நல்ல கெட்ட காரியங்கள் ஹராம் ஹலால் பற்றிய அறிவாகும். மறுமையின் அறிவென்பது ஹக்கீகத்துடைய அறிவாகும். அதாவது அல்லாஹ் தான் இப்பிரபஞ்சமாக வெளியாகியுள்ளான் எனும் ஹக்கீக்கத்தை எதார்த்தத்தை சூபித்துவப் பாசறையில் தரீக்காவின் வழியில் பயின்று அறிவதே மறுமையின் அறிவாகும். இந்த அறிவு அதாவது (ஹகீக்கத்தை அறிதல்) மறுமை அறிஞர்களின் (சூபியாக்களின்) தீர்ப்புப்படி ஒவ்வொருவருக்கும் பர்ழு ஐன் - கட்டாயக் கடமையாகும். எப்படி ஒருவன் உலக அறிவைச் சார்ந்த இபாதத்களைச் செய்யாதவிடத்து உலக உலமாக்களின் தீர்ப்புப் பிரகாரம் அப்பகுதி அரசனின் வாளுக்கு இரையாக நேரிடுமோ அதே போன்று மெஞ்ஞான அறிவான இவ்வறிவைக் கற்காது புறக்கணிப்பவர்கள் மறுமையில் அரசருக்கெல்லாம் அரசனான அல்லாஹ்வின் தண்டனைக்குள்ளாகி அழிந்துவிட (நரகம் செல்ல) வேண்டியேற்படும் என்று கஸ்ஸாலி சொல்கின்றார்கள்.. (இஹ்யாஉலூமுத்தீன் பக்கம் 1-114)

இவ்வாறு முதல்க் கட்டமாக இஸ்லாத்தைத் தெரிந்து கொள்ள வந்த எதுவுமறியா அப்பாவி முஸ்லிமை அழைத்து அவனுக்குக் குழையடித்து, மூளையைச் சலவை செய்து இவ்வாறான ஷைத்தானிய சிந்தனைகளை ஊட்டி அவர்களைத் தமது தரீக்காவுக்குள் (தரீக்கத்துன்நார் நரகத்துகின் பாதை என்பதே மிகப் பொருத்தம்) அழைத்துச் செல்கின்றனர். இனி அங்கே என்ன நடைபெறுகின்றது என்று பார்ப்போம். ...

## தரீக்கத் الطريقة

அன்றைய புராதன ஸூபித்துவ வாதிகள் முதல் இன்றுள்ள நவீன ஸூபிகள் உட்பட அனைவரிடமும் புரையோடிப் போயுள்ள ஒரு விடயம்தான் இந்த தரீக்காவாகும். இதிலே பல படித்தரங்கள் உள்ளன. சுருங்கக் கூறின் யதார்த்தத்தை அறிந்து கொள்ள விரும்புபவர் முதலில் ஒரு ஷைக்கிடத்தில் பைஅத்செய்து அவர்சொல்லும் வழியில் நடை பயில்வதை இவர்கள் தரீக்கத் என்றழைக்கின்றனர். அதாவது ஒரு ஆத்மீகப் பயிற்சி பெறும் சீடர் தனது உணர்வுகள், புலன்களையெல்லாம் மரணிக்கச் செய்யுமளவு தன்னைச் சிரமத்துக்குள்ளாக்கி தன்னைத்தானே வருத்தி 'அதஹ்' எனும் பைத்தியம் போன்ற சுய நினைவிழந்த நிலைக்குக் கொண்டு வருதல் வேண்டும். இதற்கான பயிற்சிகளை அந்த தரீக்காவின் ஷைக்கே முன்னின்று சொல்லிக் கொடுப்பார். இது பற்றி கஸ்ஸாலி இவ்வாறு கூறுகின்றார்...

'தரீக்கத்தினை அடைவதற்கு கல்வத் (தனித்திருத்தல்), ஜூஉ (பசித்திருத்தல்), ஸஹர் (விழித்திருத்தல்), ஸூம்து (மௌனமாயிருத்தல்) போன்றன அவசியமாகும். (இஹ்யா உலூமுத்தீன் 2-243)

அத்துடன் தனது உடலைத் தானே சிலவேளை வதைத்துக் கொள்ளவும் வேண்டும். இதற்காக நீண்ட நேரம் ஒற்றைக் காலில் நிற்றல், தலைகீழாக நிற்றல், முள்ளின் மீது அமர்தல், நெருப்பால் உடலைப் பொசுக்கல் போன்ற பயிற்சிகளையும் ஷைக்கானவர் மேற்கொள்வார்.

இவர் கூறும் அனைத்தையும் முரீது (சீடர்) எவ்வித மறுப்போ, வெறுப்போ இன்றி மேற்கொள்ள வேண்டுமென்பது ஸூபித்துவத்தின் பொதுவிதி. சுருங்கக் கூறின் அவர்கள் கூறுவது போல் 'ஒரு (முரீது) சீடனானவன் தனது ஷைக்கின் முன்னால் மய்யித்தைக் குளிப்பாட்டுபவன் முன் வைக்கப்பட்ட சடலத்தைப் போல் நடந்து கொள்ள வேண்டும். அவனுக்கு எந்தவித விருப்பு வெறுப்போ சுய சிந்தனையோ இருக்கக் கூடாது. அவரின் முன் நின்றால் இவனுக்குப் பேச்சே வரக் கூடாது, அவரது அனுமதியின்றி இவன் (தன் மனைவி உட்பட) எவரிடமும் தொடர்பு கொள்வதோ, குர்ஆன்ஓதல், திக்ர்; அறிவைத்தேடல் போன்ற எவற்றிலுமோ ஈடுபடக் கூடாது. (அல் அன்வாருல் குத்ஸிய்யா 1- 187)

அபூ யஸீத் அல் புஸ்தாமி எனும் ஸூபி கூறுகின்றார் ...

'ஒரு ஷைக்கானவர் தனது முரீதை ஒரு வேலையின் நிமித்தம் வெளியே அனுப்பினால் அவன் போகும் வழியிலேயே தொழுகைக்காக பாங்கு சொல்லப்பட்டால் - இந்த முரீதானவன் இப்போது உடனடியாகத் தொழுது விட்டு அதன்பின் அந்த வேலையை முடிக்கலாம் தானே என்று எண்ணிவிட்டால் கூட அவன் ஆழமறியாத ஒரு பாதாளக் கிணற்றினுள் வீழ்ந்தவனைப் போலாவான் என்கின்றார். ( ஸத்ஹாத்துஸ் ஸூபிய்யா ப 343 )

ஷைக் றிபாயிஃ கூறுவதைப் பாருங்கள்.

'ஒரு முரீதுக்கு இருக்க வேண்டிய பண்புகளிலொன்றுதான் தனது ஷைக் எப்போதும் நேரிலும், மறைவிலும் தன்னைப் பார்த்துக் கொண்டிருப்பதாக உணர வேண்டும். அவருக்கும் அவரது குடும்பத்தினருக்கும் ஊழியஞ் செய்வதில் தன்னை முழுமையாக ஈடுபடுத்த வேண்டும். எந்த வேலையைச் செய்யும் போதும் அவரது நினைவு மனதில் வர வேண்டும். அவர் செய்யும் எந்தவிதமான மோசமான காரியங்களையும் கண்டு அதைக் கண்டிக்கக் கூடாது. ஒரு முறை இப்படித்தான் ஒரு ஷைக்கின் வீட்டுக்கு அவரது முரீதானவர் சென்ற போது தனது ஷைக் ஒரு அழகிய பெண்ணிடம் சல்லாபித்து, அவளைக் கட்டிப்பிடித்து, முத்தமிட்டு உடலுறவில் ஈடுபட்டிருக்கக் கண்டார். இதைக் கண்டதும் அதிர்ச்சியுற்ற அவர் அவசரப்பட்டு 'என்ன காரியம் பண்ணிவிட்டீர்'!! என ஷைக்கைக் கண்டித்து விட்டார். உடனே அவர் ஷைக்கிடமிருந்து கற்ற அனைத்து நெறிகளும் அவரிடமிருந்து அந்த இடத்திலேயே பறிக்கப்பட்டுவிட்டன. (நூல்: கிலாததுல் ஜவாஹிர்; பக்கம்: 278)

பிரபல ஸூஃபி இப்னு அஜீனா கூறுகின்றார் ...

ஷைக்குக்கு சிஷயன் செய்யும் மரியாதை யாதெனில் அவன் ஷைக்கின் கைகளையும் கால்களையும் முத்தமிட வேண்டும். அவரின் முன் இருக்கும் போது தலை தாழ்த்தி வாய்மூடியிருக்க வேண்டும். முரீதுக்கு ஏதேனும் நோய் ஏற்பட்டு விட்டால் அவனது மனக்கண் முன் ஷைக்கை முன்னிறுத்தி அவரிடமே தனது நோயை நீக்குமாறு முறையிட வேண்டும். ஏனெனில் இவ்வாறு செய்தால் அல்லாஹ்வின் உதவியால் சந்தேகமின்றி நிச்சயம் சுகம் கிடைக்கும். (புதூஹாத்துல் இலாஹிய்யா : 308-309)

வழிகெட்ட ஸூபி ஸஃரானி சொல்வதைக் கேளுங்கள் ....

ஒரு ஷைக்கின் மீது உண்மையான அன்பு கொள்வது எப்படியெனில் அல்லாஹ்வுக்காகவே ஒன்றை நேசித்து அவனுக்காகவே ஒன்றை வெறுப்பது போன்றே இந்த ஷைகுக்காகவே எதையும் நேசிக்க வேண்டும். அவருக்காகவே எதையும் வெறுக்கவும் வேண்டும் . அவ்வாறே ஷைக்கின் கப்ரைத் தரிசிக்கச் சென்றால் அவர் மய்யித், மரணித்து விட்டவர் நாம் பேசும் எதையும் செவியுற மாட்டார் என எண்ணிவிடக் கூடாது. எனினும் அவர் திரையுலகில் உயிருடன் இருப்பதாகவே நம்ப வேண்டும். அப்போதுதான் அவரது பரக்கத் - அருளைப் பெற முடியும். ஏனெனில் முரீதானவர் ஷைக்கின் கப்ரை ஸியாரத் செய்து அல்லாஹ்வை திக்ர் செய்தால் அந்த ஷைகும் கப்ரில் எழுந்து உற்கார்ந்து கொண்டு இவருடன் திக்ர் செய்கின்றார். இதை நாங்கள் பல தடவைகள் நேரடியாகவே கணகளாலேயே பார்த்திருக்கின்றோம். (அன்வாருல் குத்ஸிய்யா 1-169)

அப்துல் காதிர் ஜீலானி கூறுகின்றார்...

ஷைக்- குருவானவர் வெளிப்படையாகச் செய்யும் எக்காரியத்துக்கும் முரீத் மாற்றஞ் செய்யக் கூடாது. மறைமுகமாகச் செய்யும் விடயங்களில் குறுக்கீடு செய்து எதிர்க் கேள்வி கேட்கவும் கூடாது . (அல்குன்யஹ் 2- 164 )

தொடர்ந்து முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி கூறுகையில்...

'நிச்சயமாக ஷைக்கின் மூலம் ஒருவனுக்கு நன்மையுமுண்டு, தீமையுமுண்டு. தனது ஷைக்கை நேசிப்பது மறுமையில் ஒருவன் நல்லடியார்களின் கூட்டத்தில் சேர்ந்து கொள்ளக் காரணமாகி விடும். இது அவரில் மூலம் கிடைக்கும் நன்மையாகும், அவருடன் முறண்பட்டு வாதம் செய்வது அவனின் நாசத்திற்குக் காரணமாகி விடும். இது அவரினால் ஏற்படும் தீங்கு. நீ என் கரத்தைப் பிடிப்பதன் மூலமாக வெற்றிபெற வில்லையென்றால் உனக்கு ஒரு போதும் வெற்றியே கிடையாது. (அல்பத்ஹுர் ரப்பானி )

ஒரு தடவை ஷகீக் பல்கீ, அபூதுராப் ஆகிய இரு ஸூஃபிகளும் அபூ யஸீத் அல்புஸ்தாமி எனும் ஸூஃபியிடம் வந்தனர். இருவருக்கும் உணவு பரிமாறப்பட்டது. அங்கு ஒரு வாலிபன் அவர்களுக்குப் பணிவிடைக்காக இருந்தான். அவ்விருவரும் வாலிபரே.. எம்முடன் வந்து சாப்பிடு என்று கூற அதற்கவன் 'நான் நோன்பு' என்றான். அதற்கவர்கள் பரவாயில்லை ஒரு மாத நோன்பின் நன்மையைத் தருகின்றோம் வா.. எனக்கூற அதற்கும் அவன் மறுத்து விட்டான். சரி ஒரு வருடகால நோன்பின் நன்மையைத் தருகின்றோம் வா என்று கூறினர். அவன் அதற்கும் மறுத்து விடவே ஆத்திரமடைந்த அவர்களில் ஒருவர் 'அல்லாஹ்வின் பார்வையை விட்டும் விழுந்து விட்ட அவனை அவன் பாட்டுக்கு விட்டு விடுங்கள்' என கோபத்துடன் கூறினார். இதன் காரணத்தால் அவ்வாலிபர் திருட்டுக் குற்றமொன்றில் பிடிபட்டு அவன் கை துண்டிக்கப்பட்டது. (ரிஸாலா குஷைரிய்யா ப :151 )

ஒரு சீடன் தன் ஷைக்கை நேசிப்பது சரத் - நிபந்தனையாகும் என்பது அனைத்து சூபிகளும் ஏகோபித்த விடயமாகும். எந்தளவுக்கு நேசிக்க வேண்டுமென்றால் தனது ஷைக் அல்லாத எவரும் எதைக் கூறினாலும் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாது செவிடனைப் போல நடந்து கொள்ள வேண்டும். யார் விமர்சித்தாலும் அதை ஏற்றுக் கொள்ளக் கூடாது . அந்தப் பகுதியிலுள்ள மக்கள் அனைவருமே ஒன்று கூடி முயற்சித்தாலும் அவர்களால் இவனை அந்த ஷைக்கை விட்டும் தடுக்க முடியாதளவுக்கு அவனது குருப்பற்று இருக்க வேண்டும். ஷைக்குடைய மகத்துவத்தை மனதில் நிறுத்தி மனக்கண்ணால் அவரைப் பார்த்துக் கொண்டிருந்தால் அவனுக்குப் பசி, தாகம் எதுவுமே ஏற்படக் கூடாது. ஒரு சீடருக்கு இவ்வாறான நிலை ஏற்பட்டது. அவர் எதுவும் உண்ணாமல் குடிக்காமல் சதா தன் ஷைக்கையே நினைத்துக் கொண்டிருந்தார். ஆனாலும் அவர் இருந்ததை விடக் கொளுத்து விட்ட்டார். (அன்வாருல் குத்ஸிய்யா 1-168)

இது போன்ற ஸூஃபித்துவ வாதிகளின் தரீக்கத் விதிகளையும் நிபந்தனைகளையும் அடுக்கிக் கொண்டே போகலாம். இவ்வாறான அபத்தமிக்க பைத்தியகாரத்தனமான இஸ்லாத்திற்கு முரணான, இஸ்லாத்தின் அடிப்படையையே தகர்த்தெறியக்கூடிய கதைகளையும் புராணங்களையும் லட்சக்கணக்கில் ஸூபித்துவ நூல்களில் நீங்கள் காணலாம். விரிவஞ்சி அவற்றைக் குறைத்துக் கொள்கின்றேன். இக்கட்டுக் கதைகளில் பொதிந்திருக்கும் அபத்தங்களை விமர்சிக்க, விபரிக்க முற்பட்டால் புத்தகம் நீண்டு விடும். எனவே அதை வாசகர்களான உங்களின் ஆய்வுக்கு விட்டு விடுகின்றேன். மிகக் குறைந்தளவு இஸ்லாமிய அறிவுடைய ஒரு பாமரன் கூட இக் கருத்துக்கள் இஸ்லாத்தைத் தகர்க்கக் கூடிய மிகப் பெரிய வெடி குண்டு, இதற்கும் இஸ்லாத்துக்கும் எள் முனையளவு கூட சம்பந்தம் கிடையாது என்பதை அடித்துச் சொல்வான் என்பது மட்டும் உண்மை .

சுருக்கமாகச் சொல்வதாயின் ஸூஃபிகளின் தரீக்கத் எனும் இந்த மாயையின் பின்னணியில் ஒரு பெரிய சதிவலையே பின்னப் பட்டிருக்கின்றது. அதாவது அப்பாவிப் பாமரர்கள் மத்தியில் தம்மை விலாயத் பெற்ற இறை நேசச் செல்வர்கள், ஷைக்மார்கள் என அறிமுகப்படுத்தி அப்பாமரர்களை இஸ்லாத்தின் பெயரைக் கூறி ஏமாற்றித் தமது சீடர்களாக்கி ஆத்மீகம் எனும் பெயரில் பொய்களையும் புருடாக்களையும், அதிசயமிக்க கற்பனைச் சம்பவங்களையும் கூறி மூளைச்சலவை செய்து தன்னைப் பின்பற்றாவிட்டால் வழி கேட்டில் வீழ்ந்து நரகத்துக்குத்தான் செல்ல வேண்டும் எனும் அளவுக்குப் பயமுறுத்தி தாமும் வழி கெட்டு எதுவுமறியா அப்பாவி மக்களையும் வழிகெடுக்கும் ஒரு ஷைத்தானிய ஊடகம் தான் இந்த தரீக்கத் ஆகும்.

இதை விட முக்கியமான பயங்கர விடயம் யாதெனில் இந்தத் தரீக்கத் வாதிகள் அனைவரினதும் மிக முக்கிய குறிக்கோள் யாதெனில் இஸ்லாத்தையே அழித்து இடித்து வீழ்த்திவிடக் கூடிய இரு கொள்கைளின் பக்கம் தம் சீடர்களை அழைத்து அவற்றைப் போதித்து அதன் மூலம் சுயலாபம் தேடுவதே இவர்களின் அடிப்படை நோக்கமாகும். அவையாவன...

வஹ்தத்துல் வுஜூத் - அத்வைதக் கொள்கை அதாவது படைப்பினங்களான நாமும் படைத்தவனான அல்லாஹ்வும் ஒன்றுதான். அவன்தான் பல வடிவங்களில் இப்பிரபஞ்சமாகவும், அதிலுள்ள வஸ்த்துக்களாகவும் காட்சி தருகின்றான் எனும் கொள்கை.

அல்ஹுலூல் வல்இத்திஹாத்: அதாவது இறைவன் படைப்பினங்களின் மீது இறங்கி சஞ்சரிக்கின்றான் பின் இறண்டறக் கலந்து விடுகின்றான் எனும் இந்துத்துவ, கிருஸ்த்தவக் கொள்கை .

அல்லாஹ் கூறுகின்றான் ...

'அல்லாஹ் மூன்று கடவுள்களில் மூன்றாவது கடவுளெனக் கூறிய (அதாவது அல்லாஹ் இயேசுவிலும் அவர் தாயிலும் இறங்க அவர்களும் கடவுளாகி விட்டார்கள் எனக் கூறிய கிருஸ்த்தவர்கள்) காபிர்களாகி விட்டார்கள். (உண்மைக்) கடவுள் ஒரே கடவுளேயன்றி வேறில்லை. அவர்கள் தாம் சொல்வதை விட்டும் விலகிக் கொள்ளாவிடில் அவர்களில் (இக் கொள்கை மூலம்) காபிர்களாகி விட்டவர்களை கடுமையான வேதனை பிடித்துக் கொள்ளும். அவர்கள் அல்லாஹ்விடத்தில் (தமது இக்கொள்கையை விட்டு விட்டு) தவ்பாச் செய்து பாவ மீட்சி பெற வேண்டாமா? அல்லாஹ் மிக்க மன்னிப்பவனும் கிருபையுடையவனுமாக இருக்கின்றான். (அல்குர்ஆன்: மாயிதா 73.)

எனவே சூபிகள் உருவாக்கிய தரீக்கத் எனும் ஷைத்தானியக் கோட்டையிலே ஷைக் எனப்படுபவர் தான் அல்லாஹ்வின் அனைத்து ஆற்றல்கள், சக்திகள், வல்லமைகளும் பெற்றவராகக் கருதப்படுவார். அவரின் சீடர்களுக்கு அவர் குருநாதர் மாத்திரமல்ல கடவுளும்

அவர்தான். ஷைகுக்கு தெய்வீகத் தன்மைகள் - கடவுளின் சக்திகள் இருப்பதை ஏற்றுக் கொள்ளாத சிஷ்யன் நிச்சயமாக உண்மையான வெற்றிப் பாதையை அடைந்து கொள்ள மாட்டான். வெற்றிப் பாதையெனப்படுவது இவர்களிடத்தில் வஹ்தத்துல் வுஜூத்-கண்ணால் காண்பதெல்லாம் கட வுளே எனும் கொள்கையைக் குறிக்கும். ஆம் நரகத்துக்குரிய இலவச நுழைவுச் சீட்டை வென்று தரும் பாதை இதுதான் சந்தேகமேயில்லை. தனது ஷைக் கடவுளின் வல்லமைகள் பெற்றவர், சக்திமிக்கவர் என எண்ணும் சீடனுக்குக் காலப் போக்கில் 'ஜத்பு' (பைத்தியம் போன்ற சுய நினைவற்ற) நிலை ஏற்படும். அதன் பின் அவன் தனது ஷைக்கையே கடவுளாகக் காண்பான் என்பதே தரீக்கத் போதிக்கும் தத்துவமாகும்.
இந்தப் பேருண்மையை? விளங்கிக் கொள்ளவே தரீக்காவிற்குப் பிரவேசிப்பது அவசியம் அங்கிருந்து நேரே நரகம்தான்!!!. இதைப் பகிரங்கமாக மக்கள் மத்தியில் சொன்னால் ஷைக்மார்களுக்கு அவர்கள் பைத்தியக் கிறுக்கர்கள் என்று பட்டம் சூட்டி விடுவார்கள் என்பது மட்டும் உண்மை.

## الحقيقة ஹகீக்கத். (ரகசியம்)

ஹகீக்கத் எனப்படுவது சூபிகளின் ஷைத்தானிய அடிப்படை விதிகளில் மூன்றாவது இடத்தை வகிக்கின்றது. தன் வழியில் முஃமினாக வாழ்ந்து கொண்டிருந்த அப்பாவி மனிதன் மார்க்க விளக்கம் பெற ஷைத்தானிய தோழர்களாகிய சூபிகளை நாடும் போது முதலில் ஷரீஅத் சட்டங்களை முடிந்தளவு கடைப்பிடித்து முஸ்லிமாக இருந்த அவனை தரீக்கத் எனும் பாதாளக் குழியில் தள்ளி தம்மைத் தவிர வேறு யார் எது சொன்னாலும் கேட்கக் கூடாது எனும் பைத்திய நிலைக்கு அவனை ஆளாக்கி அவனிடம் பைஅத் - ஞான தீட்சை? பெற்ற பின்னர் அவனுக்கு சூபிகள் கற்றுக் கொடுக்கும் ஒரு இரகசியம்தான் இந்த ஹகீக்கத் எனும் சமாச்சாரம். அவர்களின் கருத்துப்படி இது ஒரு ரகசியம் இது தான் உண்மை தார்த்த நிலை . ஆனால் இவ்வுண்மை அனைவருக்கும் தெரிவதில்லை. அவர்களிடம் ஞானதீட்சை பெறாதவர்களுக்குத் தெரிவிப்பதுமில்லை. காரணம் இவர்கள் கூறும் பைத்தியகாரத் தனமான உளறல்களையும், சாத்தானிய வசனங்களையும், பகுத்தறிவுக்குப் பொருந்தாத கற்பனைக் கட்டுக் கதைகளையும் நம்பி ஏமாறும் நிலையில் எந்தப் பாமரனும் இல்லை. எனவே இவனால் எழுப்பப்படும் கேள்விகளுக்குக் கூட இவர்களால் விடையளிக்க முடியாது. ஒன்றுமறியாத பாமரனும் இவர்கள் கூறுவதைக் கேட்டால் இவர்களின் குடுமியைப் பிடித்து ஆதாரம் கேட்பான். ஆப்பிழுத்த குரங்கு போல அவனிடம் மாட்டித் தவிக்க நேரிடும். ஆதாரம் இருந்தால் தானே சமர்ப்பிக்க முடியும். இந்துப் புராணங்களில் யூத, கிருஸ்த்தவ, கிரேக்க தத்துவங்களில் வேண்டுமானால் ஆதாரம் கிடைக்கலாம். குர்ஆன் ஹதீதில் கிடைக்குமா? அதனால்த்தான் தமது சூபித்துவ வலையில் வீழ்ந்து தீட்சை பெற்று -- மூளையை அடகு வைத்து மூடனாகி விட்டவர்களிடம் மாத்திரமே இந்த ஹகீக்கத்தைச் சொல்லிக் கொடுப்பார்கள். அதுவும் அவனாக குருவின் அனுமதியின்றி எவரிடத்திலும் இது பற்றி வாய் திறக்கக் கூடாது எனும் நிபந்தனையுடன்... அது என்ன ரகசியம்? என்ன ஹகீக்கத்? என்று பார்ப்போம்.

அதாவது இப்பிரபஞ்சமே அல்லாஹ்தான். அவனின் வெளிப்பாடே இப்பிரபஞ்சம் என்பதைத் தெரிந்து கொள்வதே ரகசியம். நாம் பார்க்கும், கேட்கும், தொடும் அனைத்துமே, நான், நீ, அவன், அவள், அது, வானம், பூமி, சந்திரன், சூரியன், ஆடு, மாடு, ஏன் நாய், பன்றி அனைத்துமே அல்லாஹ்தான். கடலிலுள்ள நீர்தான் அலையாகவும், நுரையாகவும், உப்பாகவும் பரிணமித்திருப்பது போல் அல்லாஹ்தான் இப்பிரபஞ்சமாகத் தோற்றம் தருகின்றான். அனைத்துப் பொருள்களுக்கும் சேர்த்துத்துத்தான் அல்லாஹ் எனப்படும் என்பதே இப்பைத்தியக்காரர்களின் மஃரிபத் எனும் மூடத் தத்துவம். இதை அறிந்தவர் தான் ஞானி, ஆரிப் என இவர்களிடம் அழைக்கப்படுவார்.

பிரபல சூபி கஸ்ஸாலி சொல்கின்றார்...

அல்லாஹ்வை அறிந்து கொண்ட ஒரு ஞானி அனைத்துப் பொருட்களிலும் அல்லாஹ்வைக்

காண்பார். ஏனெனில் அனைத்து வஸ்துக்களுமே அவனிலிருந்தே, அவனை நோக்கியே, அவன் மூலமாகவே, அவனுக்காகவே உருவாகியிருக்கின்றன. தீர்க்கமான முடிவின்படி எல்லாம் அவனே... (இஹ்யாஉலூமுத்தீன். 1 — 254)

தொடர்ந்து கஸ்ஸாலி சொல்கின்றார்..

மெஞ்ஞானிகள் (ரகசியம்) ஹகிக்கத் எனும் வானில் உயர்ந்து அங்கே சஞ்சரிக்கும் போது உலகிலே அவர்கள் ஒரே (அல்லாஹ்வான) ஒருவனைத் தவிர வேறு எதையுமே காணவில்லையென ஏகோபித்து ஒருமித்துத் கூறுகின்றனர். எனினும் சிலருக்கு இந்நிலை தெட்டத்தெளிவாக அறிவியல் ரீதியாகப் புலப்படும். (அவர்கள் இந்த ரகசியத்தால் குழம்பிப் போகமாட்டார்கள்.) இன்னும் சிலருக்கோ அவர்கள் இதன் உச்ச இன்பத்தையே சுவைத்து விடுவார்கள். அப்படியானவர்கள் எல்லாம் ஒன்றே எனும் ஓர்மையில் மூழ்கித் திளைத்து ஒன்றுக்குள் ஒன்றாகக் கலந்து (غيرية) வேறொன்று என்ற வார்த்தை - பன்மை என்பதே அவர்களிடமிருந்து அடியோடு நீங்கி விடும். அவர் களின் விழிகளுக்கு அல்லாஹ்வைத் தவிர வேறு எதுவும் புலப்படாது. அனைத்துமே அல்லாஹ்வாகவே தென்படும். இதனால் ஏற்பட்ட அதிர்ச்சியால் ஒருவகை போதையேற்பட்டதன் காரணத்தினாலேயே அவர்களில் சிலர் 'நான் தான் அல்லாஹ்' என்றும், வேறு சிலரோ 'நானே அல்லாஹ் நான் தூய்மை மிக்கவன், வல்லமை மிக்கவன்' என்றும், வேறு சிலர் 'எனது ஜுப்பாவிலும் அல்லாஹ்வையன்றி வேறு யாருமில்லை' என்றும் கூறியிருக்கின்றார்கள். (மிஸ்காதுல் அன்வார். ப: 122 )

கஸ்ஸாலி சொல்கின்றார்...

ஆரிபீன்கள் சொல்கின்றார்கள் 'நாங்கள் நரக நெருப்புக்குப் பயப்படவுமில்லை. சொர்க்கத்துக் கன்னியர்க்கு ஆசைப்படவுமில்லை எங்கள் நோக்கம் இறை தரிசனமே. அவன் எம் கண்களுக்குப் புலப்படாமல் கணப் பொழுதேனும் தடைப்படக் கூடாது என்றே நாங்கள் யாசிக்கின்றோம்'. (அல் இஹ்யா 4--22)

இப்னு அரபி இவ்வாறு கூறுகின்றார்...

ஆரிப் என்பவர் எல்லா வஸ்த்துக்களிலும் அல்லாஹ்வையே காண்பார். ஒவ்வொரு பொருமே அவருக்கு அல்லாஹ்வாகத்தான் தென்படும். முழுமை பெற்ற ஒரு ஆரிபுக்கு ஞானிக்கு பிற மத மக்கள் வணக்கம் செலுத்தும் ஏனைய சிலைகள், விக்ரகங்கள் அனைத்துமே அல்லாஹ்வின் தஜல்லி வெளிப்பாடாகவே தெரியும். இதனாலேயே அவர்கள் பிற மதத்தவர்களால் வணங்கப்படும் அனைத்து மதத்து சிலைகளையும் இலாஹ் - அல்லாஹ் என்றே அழைத்தார்கள். அந்த ஒவ்வொரு சிலைக்கும் கற்சிலை, பொற்சிலை, வெங்கலச்சிலை என தனிப்பட்ட பெயர்கள் இருப்பினும் கடவுள் - அல்லாஹ் எனும் பொதுப்பெயர் கூறியே அவர்கள் அவற்றை அழைத்தார்கள். (புஸூஸுல் ஹிகம் - இப்னு அரபி ப: 192 )

இதுதான் வழிகெட்ட இந்த ஸூஃபிகள் சொல்லும் ரகசியம்.? இது வழிகேட்டின் உச்சம், இதற்கும் இஸ்லாத்திற்கும் எள் முனையளவும் சம்பந்தமில்லை. மாறாக இதை அழித்தொழிக்கவேதான் அல்லாஹ் நபிமார்களை அனுப்பினான் என்பதைப் பாமரன் கூட எடுத்துக் கூறாமலேயே அறிந்து கொள்வான். இது சுத்த பைத்திய காரர்களின் உளறல். முற்றிய பைத்தியம் என்பதைச் சாதாரண பைத்தியகாரன் கூடச் சொல்வான். அல் குர்ஆனின் அனைத்து வசனங்களிலும் இக்கொள்கை குப்ர், கலப்பற்ற ஷிர்க் என்று விபரிக்கப்பட்டிருப்பதை அனைவரும் படித்தால் அறிந்து கொள்ள முடியும் .

## மஃரிபத் (மெஞ்ஞானம்) المعرفة

சூபிகளின் கூற்றுப்படி தேவையற்ற சரீஅத் சட்டங்களால் தன்னைத்தானே விலங்கிட்டுக்

கொண்ட ஒரு மனிதன் ஒரு சூபிக் குருவின் சீடனாகி தரீக்கத் எனும் சேற்றினுள் விழுந்து மூளையையும் சுய சிந்தனையையும் பறிகொடுத்து பின்னர் ஹக்கீக்கத் எனும் மாயையில் வீழ்ந்து புலம்ப ஆரம்பித்ததும் அளவுக்கதிகம் இறை நினைவில்? (சூபிகளின் இறைவனான ஷைத்தானின் நினைவில் மூழ்கியதால்) 'பனாஃ' எனும் நிலை ஏற்படுமாம். இதற்கு இறை நினைவால் மூழ்கி தன்னையே அழித்துக் கொள்ளல் (அதாவது தன்னிலை மறந்து விடும் நிலை) என்று சூபிகள் வாதிடுகின்றனர். உண்மையில் இது போதை மயக்கத்தில் பேதலித்து விடுவதால், அல்லது ஊன் உறக்கமின்றி சதாகாலமும் ஏதோ ஒன்றை நினைத்துக் குழம்பிக் கொண்டிருப்பதால் ஏற்படும் ஒரு வகை மூளைக்குழப்பம் அல்லது பைத்தியத்தின் ஆரம்ப நிலை என்பதில் சந்தேகமில்லை. அனைவரையும் விட அல்லாஹ்வுக்கு விருப்பமான, அவனுக்கு அதிகம் அஞ்சி நடந்த, இபாதத், வணக்கம் உட்பட அனைத்து விடயங்களிலும் முன்மாதிரியாக அனுப்பப்பட்ட முஹம்மத் நபியவர்களுக்கே இவ்வாறான ஒரு நிலை ஏற்படவில்லையே. இப்படியொரு பனாஃ நிலைக்குச் சென்று இவர்களைப் போல் உளற வில்லையே. நபியவர் களைவிட இந்த சூபிகள் இறை நேசர்களா? அவர்களை விடக் கடுமையான வணக்கவாளிகளா? அவர்களுக்குத் தெரியாத ஹக்கீக்கத்தை (ரகசியத்தை) இவர்கள் தெரிந்து கொண்டார்களா?

நபியவர்களின் ஆத்மீகப் பாசறையில் பயிற்சி பெற்ற லட்சக்கணக்கான ஸஹாபாக்களில் ஒருவருக்கேனும் இப்படியொரு நிலை ஏற்பட்டுப் புலம்பியதாக வரலாறு உண்டா? அப்படி இந்த சூபிகள் நிரூபிப்பார்களா? அல்லாஹ் பொருந்திக் கொண்டதாக அல் குர்ஆனிலேயே விளம்பரப்படுத்தப்பட்ட அந்த இறைநேசர்களுக்குக் கற்பிக்காத ரகசியத்தை இந்த சூபிகளுக்கு கற்றுக் கொடுத்தானா? இந்த வினாக்களுக்கு ஒவ்வொரு தனி மனிதனும் விடையளிக்கக் கடமைப்பட்டுள்ளான்.

சரி விடயத்துக்கு வருவோம்.

இப்போது இப்பிரபஞ்சத்தில் உள்ள அனைத்துமே அல்லாஹ்வின் பிரதிபலிப்பே. தூணும் அவனே துரும்பும் அவனே, வானமும் அவனே வையமும் அவனே நீயும் அவனே நானும் அவனே எனும் ரகசியம் அவருக்குப் புலப்பட ஆரம்பித்ததும் அவருக்கு அனைத்து வித மறைவான ஞானங்களும் புலப்பட ஆரம்பிக்கும். இவரே முன் கூட்டியே கடவுளாக இருந்திருந்ததன் ரகசியத்தை இப்போது இவர் கண்டு கொண்டதால் கடவுளின் ஆற்றல், அறிவு வல்லமை மறைவான ஞானம் அனைத்தும் இவருக்கும் வந்து விடும். இதற்குத்தான் இவர்களிடத்தில் மஃரிபா மெஞ்ஞான முக்தி பெறல் எனப்படும். இந்த நிலையை அடைந்தவர்களுக்கு ஆரிபீன்கள் மெஞ்ஞான வான்கள் எனும் பெயர் சூட்டப்படும்.

அப்துல் அஸீஸ் தப்பாக் எனும் அண்மைக்கால சூபி ஒருவர் கூறுகின்றார்..

'அல்லாஹுதஆலா--தான் யாரென்ற மஃரிபா ஞானத்தை ஒருவருக்குக் கொடுக்கும்வரை எவரையும் நேசிப்பதில்லை. அந்த ஞானம் பெற்றதும் அவர் அல்லாஹ்வின் ரகசியங்களையெல்லாம் காண ஆரம்பிப்பார். அப்போது அவருக்கு ஜத்பு எனும் இறை ஈர்ப்பு நிலை ஏற்படும். (இப்ரீஸ் ப: 217 )

இல்லை! உண்மையில் இது தேவையற்ற சிந்தனைக் குழப்பத்தாலும், அளவுக்கதிகமான திக்ர் எனும் பெயரில் அரங்கேற்றிய பேயாட்டத்தாலும் ஏற்பட்ட காக்காய்வலிப்பு நோய்தான் இது!.

அதாஉல்லாஹ் இஸ்க்கந்தரி எனும் சூபி மகான்? கூறுகின்றார்...

'மஃரிபா ன்ற ஞானமென்பது ஒரு கற்கக் கூடிய அறிவல்ல . அது நேரடியாகக் காணும் ஒரு நிகழ்வாகும், அது சொல்லித் தெரியும் ஒன்றல்ல, அது வர்ணிக்க முடியா ஒரு ரசனைமிகு ஓவியம், திரையிடப்படாத ஒரு காட்சி. இதைக் கண்ணுற்றவர்கள் ஏனையோரைப்

போன்றல்ல, ஏனையோர் கண்ணுற்றோரைப் போன்றுமல்லர்.

மஃரிபா எனும் ஞானம் பெற்ற ஆரிபீன்களிடத்தில் அல்லாஹ் அல்லாத எப்பொருளும் இருக்கின்றதென்றோ இல்லையென்றோ சொல்லப்பட மாட்டாது. ஏனெனில் அவனே எல்லாம் என்பதே உண்மையாதலால் அவனல்லாத எதுவும் இல்லையென்பது தெளிவாகின்றது. (கஸ்புல் அஸ்ரார் . ப: 139)

எதுவுமறியா அப்பாவிப் பாமர சமூகம் சூபி மகான்கள், மெஞ்ஞான குருநாதர்கள் என்று போற்றிப் புகழ்ந்து கொண்டிருக்கும் இந்த ஷைத்தானின் தூதர்களான கேடுகெட்ட இந்த சூபிகளின் அந்தரங்கம் இதுதான். குப்ரையும் ஷிர்க்கையும் பாமரர்கள் மத்தியில் பெயரை மாற்றி மெஞ்ஞானம் எனும் போர்வையில் விதைத்து நரகத்தின் நாயகனான ஷைத்தானின் அணிக்கு ஆட்சேர்ப்பு செய்து ஷைத்தானின் நேசர்களின் எண்ணிக்கையை அதிகரிக்கத் திட்டம் போட்டு பசுத்தோல்ப் போர்த்திய புலிகள் போன்று சமுகத்திலே ஊடுருவிய, இப்போதும் ஊடுருவி யிருக்கும் இந்தக் கேடு கெட்டவர்களை அனைவரும் அடையாளங் கண்டு கொள்ள வேண்டும். இவர்களைப் பற்றி சமூகத்தின் மத்தியில் உள்ள தவறான கருத்தோட்டத்தைக் களையெடுத்து இவர்களின் சுயரூபத்தைத் தோலுரித்துக் காட்ட வேண்டும். இது ஒவ்வொரு முஃமினதும் இஸ்லாமிய தார்மீகக் கடமையாகும் .

## அன்னிய பிற மதங்களில் சூபித்துவம்.

சூபி மகான்கள் இஸ்லாத்தில் மேன்மைக்கும் அந்தஸ்த்துக்கும் உரியவர்கள், தம் வாழ்வையே இஸ்லாத்திற்காக அர்ப்பணித்தவர்கள் என்று தவறாகப் புரிந்து வைத்திருப்போருக்கு மீண்டும் ஒரு முறை சொல்லிக் கொள்கின்றேன். இந்த சூபித்துவத்துக்கும் இஸ்லாத்துக்கும் கடுகளவு கூடச் சம்பந்தம் இல்லை. இன்னும் சொல்லப்போனால் இந்த சூபித்துவம் இஸ்லாத்திற்கு முன்னுள்ள காலத்திலேயே பல்வேறு மதங்களிலும் அந்தந்த மதங்களின் பிரதான சித்தாந்தமாக இருந்து வந்துள்ளதையும், இந்த சூபிகள் அன்றும் இன்றும் கூறும் அதே அத்வைதக் கொள்கையை அந்தந்த மதங்களைச் சேர்ந்த குருக்களும் ஞானிகளும் போதித்து வந்துள்ளனர் என்பதையும் நாம் காண முடிகின்றது. இன்றும் கூட அந்தந்த மதங்களின் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்றாக இந்த சூபிகள் சொல்லித் திரியும் அத்வைத மெஞ்ஞானக் கொள்கை?? அமைந்திருப்தைக் காணலாம். இதை நான் அனுமானமாகச் சொல்லவில்லை. தகுந்த ஆதாரங்களுடன் இக்கொள்கை அன்னிய வேதங்களில் உள்ளதென்பதை நிரூபிக்க அந்தந்த மதங்களின் வேத நூல்களிலிருந்தே இது பற்றிக் கூறப்படும் பகுதிகளை எடுத்துக் கூறுகின்றேன். அவற்றைப் படித்து விட்டு சந்தேகப்பட்டால் அந்ததந்த வேத மூல நூல்களை எடுத்துப் பார்த்து உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள். இந்த ஷைத்தானியக் கொள்கைகளையெல்லாம் அழித்தொழிப்பதற்காகவே இஸ்லாம் வந்தது. அழித்தொழித்தது. ஒரேயொரு கடவுள்தான் அல்லாஹ். அவன ல்லாத அனைத்தும் அவனது அடிமைகள். படைப்புக்கள் என்பதை தெளிவாக எடுத்துக் கூறியது. சூபிகள் சொல்வது போல் இந்த எல்லாம் அவனே என்பதுதான் அல்லாஹ் கூற விரும்பிய ரகசியமெனில் முஹம்மது நபிக்கு இஸ்லாத்தைக் கொடுத்து அதைப் போதிக்க வேண்டிய அவசியமில்லை. ஏனெனில் இக்கொள்கைதான் இஸ்லாத்துக்கு முன்பே அனைத்து மதங்களிலும் இருந்துள்ளதே.

எனவே சுருங்கக் கூறின் சூபிகள் அனைவரினதும் ஒருமித்த அடிப்படைக் கொள்கை 'எல்லாம் அவனே' எனும் அத்வைதக் கொள்கையும், கடவுள் குறிப்பிட்ட சிலரில் இறங்கி அவர்கள் கடவுள் அவதாரம் எடுக்கின்றனர் எனும் ஹுலூல் இத்திஹாத் எனும் கொள்கையுமாகும். இது முழுக்க முழுக்க ஷைத்தானியக் கொள்கை. இதற்கும் இஸ்லாத்துக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. ஏனைய பல்வேறு மாற்று மதங்களிலிருந்து காப்பியடிக்கப்பட்ட ஒரு சித்தார்த்தமே இது என்பதை அந்தந்த மதங்களின் மூல நூல்களிலிருந்தே- முடிந்த வரைக்கும் எடுத்துக் காட்ட முயற்சிக்கின்றேன்.

## ஸூபித்துவம்... யஹூதிகளிடத்தில்;

சூபி என்ற மூலச் சொல் எதிலிருந்து பிறந்தது என்பதில் பல கருத்துக்கள் இருக்கின்றன. الصوفசூப்-கம்பளி எனும் சொல்லிலிருந்து பிறந்திருக்க வேண்டுமென சிலர் வாதிடுகின்றனர். இன்னும் சிலர் (الصفاء) ஸபா - தெளிவு எனும் சொல்லிலிருந்து பிறந்திருக்கலாம் எனக் கருதுகின்றனர். எனினும் இக்கருத்துக்களை ஏற்றுக் கொள்ள முடியாததற்கு பல நியாயங்கள் இருக்கின்றன. அது பற்றிய விபரங்களை சூபித்துவம் பற்றிய ஏனைய நூல்களில் அறிந்து கொள்ளலாம .

எனினும் இச்சொற்பதம் எங்கிருந்து வந்ததென்பதை நுணுக்கமாக ஆராயும்போது அதிர்ச்சியான சில தகவல்கள் கிடைக்கின்றன. அதாவது இச்சொல் 'சூபியா' (ஞானம்) எனும் யூனானிய சொல்லிலிருந்து அன்றேல் சூபிய் எனும் யஹூதிய சொல்லிலிருந்து தான் வந்திருக்க வேண்டுமென்பது ஆராயும் போது ஐயத்துக்கிடமின்றித் தெளிவாகின்றது.

ஆம்! யஹூதிய சமூகத்தின் மத்தியில் இருந்த ஒரு சில மதகுருக்களுக்கு சூபிய் என்று கூறப்பட்டு வந்தது. அஷ்ஷைக் அல் முஸ்லிக் - நேர்வழி காட்டும் குருக்கள் என இவர்கள் அறிமுகமாகியிருந்தனர். இவர்கள் நடத்தும் சில ரகசிய ஆத்மீக மெஞ்ஞான சபைகளுக்கு நபிமார்களும் வருகை தருவார்கள் என இவர்கள் நம்பி வந்தார்கள். இவர்கள் ஒன்று கூடும் இடத்திற்கு (مصفاة ) மிஸ்பா என அழைக்கபட்டது. இஸ்ரவேலர்கள் கன்ஆன் பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டதன் பின்னர் இவ்வாறான தேவாலயங்களின் எண்ணிக்கைகள் அதிகரிக்க ஆரம்பித்தன. பின்னர் மதஆலயங்களாகவும், கல்விக் கூடங்களாகவும் பரிணமிக்க ஆரம்பித்தன. இந்த ஆத்மீகப் பயிற்சியை வழங்குபவருக்கு நபீம் எனும் பெயரும் இருந்து வந்துள்ளது. அதாவது இவர் சூபிய் என்பவருக்கு ஒரு படித்தரம் குறைந்தவராவார். இவர்கள் தம்மை நபிமார்கள் எனவும் வாதிட்டுள்ளனர். யஹூதிகள் இவர்களை அளவு கடந்து நேசித்து கண்ணியப்படுத்தி வந்துள்ளனர். உண்மையான நபிமார்களைக் கொலை செய்தும் வந்துள்ளனர். இந்த மிஸ்பாத் எனும் ஞானக்கூடத்தில் கற்றுத் தேர்ந்தவர்கள் தம்மை நபிமார்கள் எனவும் அறிமுகப்படுத்தினர்.

ஹிஜ்ரி இரண்டாம் மூன்றாம் ஆண்டுகளில்மட்டுமின்றி நபிகளாரின் காலத்திலேயே அரபு நாட்டில் சில பொய் நபிமார்கள் தோன்றினர். இவர்கள் சிலரின் வரலாற்றை எடுத்துப் பார்க்கும் போதும் மிஸ்பாத் எனும் யஹூதிக் கல்லூரியில் பயின்ற யஹூதிளாக இவர்கள் இருந்தமை வரலாறு சொல்லும் பாடமாகும். (பார்க்க : முஹம்மத் பில் கிதாபில் முகத்தஸ் ப 72) (அல்கஸ்பு அன் ஹகிக்கதிஸ் ஸூபிய்யா ப 742)

## கிரேக்க யூனானிய தத்துவங்களில் சூபித்துவம்..

யூனான், கிரேக்கம் போன்ற பகுதிகளில் பல்வேறு தத்துவங்களும் கொள்கைகளும் தோற்றம் பெற்றுள்ளன. இவற்றில் மிகப் பிரபலம் பெற்றிருந்த கொள்கைதான் ' ( اسرارإلويس) 'அஸ்ராரு இல் வீஸ்' எனும் கொள்கையாகும். யூனானியர்கள் இஸ்கந்தர் என்பவரின் தலைமையில் சிரியா, எகிப்து, ஈராக் போன்ற நாடுகளைக் கைப்பற்றிய வேளையில் அப்பகுதிகளில் இவர்களது கலாச்சாரங்கள் பிரதிபலிக்க ஆரம்பித்தன. இவர்கள் தம் கடவுளை வணங்குமுன் நடனம், ஆடல், பாடல், நாட்டியம் போன்றவற்றில் ஈடுபட்டு ஐத்பு எனும் ஒரு வகை தன்னிலை அறியா போதை நிலைக்கு வருவார்கள். வஹ்தத்துல் வுஜூத் அனைத்தும் கடவுளிலிருந்து தோன்றியவையே எனும் தத்துவமே இவர்களிடம் இருந்தது. ஒருவகை தெய்வீக நெருப்பே இவர்களின் கடவுளாக இருந்தது. (நாமறிந்த நெருப்பல்ல) இந்த தெய்வீக நெருப்பிலிருந்தே அனைத்தும் தோன்றி இறுதியில் அவை அழிந்து நெருப்புடன் நெருப்பாக சங்கமிக்கின்றன என நம்பி வந்தார்கள். (ரஸாயிலு இப்னு ஸப்ஈன் ப :268)

## கிருஸ்தவத்தில் சூபித்துவம்.

கிருஸ்த்துவ மதத்தில் முன்பிருந்தே துறவறம் கடைப்பிடிக்கப்பட்டு வந்ததை அல்குர்ஆன் இப்படிக் கூறுகின்றது.

'நாங்கள் அவர்களுக்குத் துறவறத்தைக் கடமையாக்கவில்லை அதை அவர்களாகவே உருவாக்கிக் கொண்டார்கள். (அல்ஹதீத் 27)

கிருஸ்த்துவுக்குப் பின் இரண்டாம் நூற்றாண்டுகளில் சூபித்துவத் தத்துவம் கிருஸ்த்தவ மதத்திலும் ஊடுருவ ஆரம்பித்தது.

الغنوسية அல்கனூஸிய்யா எனும் பெயரிலேயே கிருஸ்த்தவ மக்களிடையே இது அறிமுகமானது. கனூஸிய்யா என்பதற்கு மெஞ்ஞானம் என்று பொருள்ப்படும். கனூஸிய் என்பவர் மெஞ்ஞானியாவார். ஆரம்பத்தில் கிருஸ்த்தவத் திருச்சபை இந்த அத்வைத சூபித்துவத் தத்துவத்தை ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் காலப் போக்கில் அதனை அங்கீகரித்து விட்டது. இவர்களில் ஒரு பிரிவினர் ஹுலூல் -இத்திஹாத் - அதாவது மனிதனில் கடவுள் அவதரிக்கின்றான் எனும் கொள்கையிலும் இன்னும் ஒரு பிரிவினர் படைப்புக்கள் அனைத்துமே கடவுளின் வெளிப்பாடே எனும் வஹ்தத்துல் வுஜூத் கொள்கையிலும் இருக்கின்றனர்.

கதீஸா திரேஸா எனும் கிருஸ்த்தவப் பாதிரி இப்படிக் கூறுகின்றார்.

'மனித ஆத்மா இறை ஆன்மாவுடன் இணைவதென்பது எரியும் இரு மெழுகுதிரிகளைப் போன்றதாகும். இரண்டும் வெவ்வேறாக எரிந்தாலும் அவற்றிலிருந்து வெளிப்படும் பிரகாசம் ஒன்றேயாகும். (இயேசுவின் போதனைகள் ப : 212)

இன்னொரு கிருஸ்த்தவப் பாடலில்...

'இதோ காதலனே.. நான் உன்னிடம் பிரசன்னமாகி விட்டேன். நான் உன்னை நெருங்க வேண்டும். எனது இந்த சிற்றுடல் உன் உடலுடன் சங்கமிக்க வேண்டும். என்னுயிர் என் காதல்க் கடவுளின் கைகளில் தவழ வேண்டும். (உமர் பாரிலின் கவிதைகள் ப : 77)

எனது காதல் கடவுள்.. மலைகளும் அவனே ஓடைகளும் அவனே, மரங்களும் அவனே, தீவுகளும் அவனே, நதிகள், காற்று, இரவு அனைத்தும் அவனே. (மஜல்லதுல் அரபி இதழ் : 305 ப: 40 )

## இந்து மதத்தில் சூபித்துவம்.

இந்து மதம் பற்றி தெளிவானதொரு முறையில் வரைவிலக்கணப்படுத்திக் கொள்வது மிகவும் சிரமமாக உள்ளது. காரணம் ஒன்றுக்கொன்று முரண்பட்ட பல்வேறு கொள்கைகளின் கூட்டுக் கலவையே இந்து மதமாக உள்ளது. இருப்பினும் குறிப்பிட்ட ஒருசில விடயங்களில் மாத்திரம் அவர்களுக்கு மத்தியில் ஒற்றுமை நிகழ்வதைக் காண முடிகின்றது .

இந்துக்களின் வர்ணாச்சிரமக் கொள்கையின் படி மனிதன் கடவுளிலிந்தே பிறக்கின்றான். கடவுள் சிலரைத் தனது நெற்றியிலிருந்தும், சிலரைத் தன் நெஞ்சுப் பகுதியிலிருந்தும், வேறு சிலரைத் தன் வயிற்றுப் பகுதியிலிருந்தும் மற்றும் சிலரைத் தனது கால்பகுதியிலிருந்தும் படைத்திருப்பதாகவும் - கடவுளின் தலையிலிருந்து படைக்கப்பட்டவர்கள் பிராமணர்கள் - உயர்ந்தவர்களென்றும், காலிலிந்து பிறந்தவர்கள் சூத்திரர்கள் -தீண்டத்தகாதவர்கள் என்றும்

இந்து வேத நூல்களான ரிக், அதர்வன, யஜுர் போன்றவற்றில் காண முடிகின்றது. இப்போது புரிகின்றதா? அத்வைதக் கொள்கை எங்கிருந்து வந்ததென்று.

இந்துக்களின் வேத நூலான பகவக் கீதையை அனைத்து இந்துக்களும் தமது வேத நூலாக ஏற்றுக் கொண்டிருக்கின்றார்கள். அதேபோல் ஆதி பராசக்தி எனும் நித்திய ஜீவ ஆத்மா இருப்பதாகவும் நம்புகின்றனர். சிலர் வேறு பெயர் கூறியும் இதை அழைப்பதுண்டு. இவர்களிடத்தில் ஆயிரக்கணக்கான கடவுள்கள் இருக்கின்றன. எனினும் பிரதானமான கடவுள்கள் மூன்று என அனைவரும் நம்புகின்றனர். அவைகளாவன...

பிரம்மன் - படைப்பதற்கு, இதற்குப் பரமசிவன் என்றும் சொல்லப்படும்.
விஷ்னு - காப்பதற்கு .
யமன் - அழிப்பதற்கு .

பகவக் கீதையில் வருவதாவது...

'காக்கும் கடவுளான விஷ்னு ஒரு முறை மனித உருவெடுத்து கிருஷ்ணனின் வடிவில் அருச்சுனன் எனும் தேவரிடத்தில் வந்தார். (இவர் பின்பு கடவுளாக மாறி விட்டது வேறு விடயம்.)

அருச்சுனன்: எனக்கு ஒரு புதிருக்கு விடை தெரிய வேண்டும். நீ எனக்குக் தந்த ஆத்மாவின் ரகசியம் என்ன? அதனாலேயே நான் அழியாமல் நிலை பெற்றிருக்கின்றேன். நான் உனது திரு வடிவத்தைக் காண விரும்புகின்றேன். உன்னைக் காணக்கூடிய சக்தி எனக்கிருப்பதாக நீ நம்பினால் உனது அழிவற்ற ஆத்மாவை வெளிப்படுத்துவாயாக.

கடவுள் : அருச்சுனா.. என்வடிவங்களைப் பார். அவை நூற்றுக் கணக்கில் ஆயிரக்கணக்கில் இருக்கின்றன. அவற்றுக்குப் பல நிறங்களும் வடிவங்களும் இருக்கின்றன. இப்பிரபஞ்சத்தைப் பார். அதில் நீ பார்க்கும் அனைத்தும் என் உடலிலேயே இணைந்து கலந்திருக்கின்றன. எனினும் உன் மனிதக் கண்களால் என்னைக் காண முடியாது. இருப்பினும் இயற்கையை வென்ற தெய்வீகக்கண்களை உனக்குத் தருகின்றேன் அப்போது உன்னால் என்னைக் காண முடியும்.

பின்னர் அருச்சுணனுக்கு தெய்வீகக் கண்கள் கொடுக்கப்பட்டதன் பின் பார்த்தபோது கடவுளின் உடலிலேயே பல்வேறு வடிவங்களில் முழுப்பிரபஞ்சத்தையும் அவர் கண்டார் .
(மேற்கோள்: அல் பிக்ர் அல் பல்ஸபிய்யா அல் ஹின்திய்யா ப :204)

மனிதன் பண்பட்டு பிரம்மனுடன் இரண்டறக் கலந்து விடும்போது அவனும் பிரம்மனாகி விடுவான். அவனது உயிர் அமைதி பெற்று விடும். அவன் எதற்கும் ஆசைப்படவோ எதற்காகவும் கவலைப்படவோ மாட்டான். தான் யார் என்பதையும் தன் நிலை யாது என்பதையும் அறிந்து கொள்ளும் போது அவன் என்னுள் சங்கமித்து குடி கொண்டு விடுகின்றான். (அதே நூல் ப: 234)

எனவே அனைத்தும் கடவுளே எனும் அத்வைதக் கொள்கையும் ஐத்பு எனப்படும் தன்னிலை மறக்கும் நிலையும், அதன் பின் ஏற்படும் ஏனைய ஷைத்தானியத் தொடர்புகளால் உண்டாகும் வழக்கத்ததுக்கு மாறான சில அதிசயங்களும் சாதிமத பேதமின்றி அனைத்து மதத்தினத்தினரிடமும் இருந்திருப்பதை நாம் அறிய முடிகின்றது. எனவே இதையெல்லாம் கராமத் என்றும் இவர்களையெல்லாம் அவ்லியாக்கள் - இறை நேசச் செல்வர்கள் என்றும் சொல்ல முடியுமா? சிந்திப்போமாக!

இதே அத்வைதச் சித்தாந்தம் புத்த மதத்திலும் இருப்பதை அறிய முடிகின்றது புத்த மத வேத நூலான 'பாயஸீயசூத்ரா' எனும் நூலில் இது பற்றி தெட்டத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

விரிவஞ்சி இங்கே அது தவிர்க்கப்படுகின்றது.

எனவே சுருக்கமாகச் சொல்வதெனில் சூபித்துவமும் அதன் ஆணி வேரான அத்வைதக் கொள்கையும் பழமை வாய்ந்தது. தொண்மை மிக்கது. இஸ்லாத்தை நபியவர்கள் அறபுநாட்டில் பிரச்சாரம் செய்வதற்கு முன்பே இந்தக் கொள்கை உலகின் பல பாகங்களிலும் பல்வேறு பெயர்களில் அறிமுகமாகியிருந்தது. பாரசீகம், இந்துஸ்த்தான் போன்ற இடங்களில் சமயக் கொள்கையாகவும், எகிப்து, சிரியா, ஈராக் போன்ற பகுதிகளில் ஒரு புதிய சித்தாந்தமாகவும், அரபுப் பகுதியில் 'கஹானா' (சாஸ்த்திரம்) எனும் பெயரிலும் அறிமுகமாகியிருந்தது. அவ்வாறே யஹூதிகளிடத்திலும், கிருஸ்த்தவர்களிடத்தில் இக்கொள்கை காணப்பட்டது.

பின்னர் இஸ்லாம் அறிமுகமாகிச் சில நூற்றாண்டுகளின் பின்னர் சில விசமிகளால் இஸ்லாத்திலும் இக்கொள்கை ஊடுருவல் செய்யப்பட்டது. முஸ்லிம் சமூகத்தின் மத்தியில் நன்மதிப்பைப் பெற்ற மார்க்க அறிவற்ற சில முக்கிய புள்ளிகளின் செல்வாக்கினால் முஸ்லிம்களின் மத்தியிலும் சில பகுதிகளின் இக்கொள்கை கால்பதிக்க ஆரம்பித்து.

அப்பாஸிய மன்னரான அப்துல் மலிக் பின் மர்வானின் ஆட்சிக் காலத்தில் ஹாரித் அத்திமஸ்க்கி எனும் ஒருவன் இக் கொள்கையைப் பிரச்சாரம் செய்து வந்தான். இவன் ஒரு முன்னாள் சூனியக்காரன். பிற்பாடு தன்னை நபியென வாதித்தான். தனக்கு இறைவனிடமிருந்து வஹீ வேத அறிவிப்பு வருவதாகவும் வாதித்தான். ஆனால் இவனிடம் வந்தது கெட்ட ஷைத்தான்கள்தான். தன்னுடைய குப்ர் இறை மறுப்பின் காரணமாக ஷைத்தானியத் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டு சில வழக்கத்துக்கு மாறான செயல்களைச் செய்ய ஆரம்பித்தான். ஏமாந்த சில பாமர மக்கள் இதையும் கராமத் என நினைத்து அவன் பின்னால் செல்ல ஆரம்பித்தனர். உண்மையில் ஷைத்தானியத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டு அதன் மூலம் இவனுக்குச் செய்துகாட்டும் வித்தைகளே இவை . பொது மக்களின் ஈமானுக்கு அச்சுறுத்தலாகவிருந்த இவனது செயற்பாடுகளை அவதானித்த அக்கால மன்னர் இவனை அழைத்து விசாரித்து விட்டு அவனுக்கு மரண தண்டனை விதித்தார். ஆனால் அவனைக் கொலை செய்ய முற்பட்ட போதும் முடியாமல் போய் விட்டது. அவன் உடலில் ஈட்டி ஏற மறுத்து விட்டது. அவனோடு இருந்த ஷைத்தானின் வேலையே இது. இறுதியில் பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்று சொல்லி அம்பெய்த போது அது அவனைத் தாக்கியதும் அவன் இறந்தான் .

எனவே சூபித்துவத் போர்வையில் அத்வைதக் கொள்கையுடைய இவர்களிடமிருந்து சில அதிசயங்கள் ஏற்பட்டால் அதைக் கண்டு பாமர முஸ்லிம் மக்கள் மிரண்டு ஆச்சரியப்பட்டு இவர்கள் இறை நேசச் செல்வர்கள்தான் என்று முடிவு செய்து கொண்டு அவனின் காலில் விழுந்து கும்பிடுவதற்குக் தயாராகி விடுகின்றனர் . இத்தகைய போலி ஷைத்தானிய வித்தைகள் இந்த சூபிகளிடம் மட்டுமல்ல யூத, கிருஸ்த்தவ ஏன் இந்து பௌத்த மத குருக்களிடமும் இடம் பெறுகின்றனவே என்பதை யோசிக்க மறந்து விடுகின்றனர்.

## இஸ்லாத்தைத் தகர்க்கும் ஸூபித்துவம்.

மக்களை ஆத்மீகப் பாதையில் பயிற்றுவிக்கும் பள்ளி எனும் போலி பெயரில் மக்களிடையே அறிமுகமாகியிருக்கும் இந்த சூபித்துவ அத்வைத தத்துவம் எந்தளவுக்கு இஸ்லாத்தைத் தகர்க்கும் விஷமத்தனமான, நச்சுக் கருத்துக்களைக் கொண்டிருக்கின்றது என்பதைக் கொஞ்சம் தொட்டுக் காட்டுவதுதான் இந்தப் பகுதியின் நோக்கம். எந்தளவுக்கு சாதாரண மக்கள் புரிந்து கொள்ள முடியாதபடி மிக்க தந்திரமாக இந்த நச்சுக் கருத்துக்களை மக்கள் இதயங்களில் புகுத்தியிருக்கின்றார்கள் என்பதைப் பார்க்கும் போது ஆச்சரியமாக இருக்கின்றது. எனவே இது பற்றி சற்று விரிவாகப் பார்ப்போம்.

## எல்லாம் இறைவனே என்று கூறும் சூபித்துவம்.

எல்லாம் அவனே எனும் தத்துவமே சூபித்துவத்தின் அடிநாதமாகும். சூபித்துவத்தின் அனைத்துப் பிரிவுகளும் இந்த விடயத்தில் உடன்பட்டுக் காணப்படுகின்றன. ஆனால் இதை ஆரம்பப் படித்தர மக்களுக்குச் சொல்வது கிடையாது. எமது பகுதிகளில் உள்ள காதிரிய்யா, ஷாதுலிய்யா, ஜிஸ்திய்யா இது போன்ற அனைத்துத் தரீக்காக்களுமே இவ்வத்வைதத்தை வெளிப்படையாகச் சொல்லாவிட்டாலும் அத்தரீக்காக்களின் மௌலீது நூல் களில் கூட இவை மலிந்து காணப்படுகின்றன. இந்த அனைத்துத் தரீக்காக்களும் முன்னைய சூபித்துவ வாதிகளால் எழுதப்பட்ட ஒரே வித நூல்களிலிருந்தே தமது சரக்குகளை எடுத்திருக்கின்றன. இப்போதும் எடுக்கின்றன. இந்த தரீக்காக்களில் பெயர்கள் சமீபத்திய சூபித்துவ வாதிகளினாலேயே தோற்றுவிக்கப்பட்டன .

எல்லாம் அவனே எனும் கருத்தில் சில முற்கால சூபிகள் சொல்லிவைத்த தத்துவங்கள்? இல்லை! வழிகேடுகள் சிலதைப் பார்ப்போம்.

பிரபல சூபியான கஸ்ஸாலி இமாம் அவர்கள் திருவுளமாகின்றார்கள்?.

தவ்ஹீத் என்பதை நான்கு படித்தரங்களாக வகைப்படுத்தலாம். முதலாவது நாவினால் லாஇலாஹ இல்லல்லாஹ் என்று கூறுவது, இரண்டாவது அதன் அர்த்தத்தை கல்பால் இதயத்தால் உண்மைப் படுத்துவது, இது பாமரமக்களின் படிநிலையாகும், மூன்றாவது இறை ஒளியினால் கஷ்புடைய ஞானத்தைக் காண்பதாகும். இது இறைநெருக்கம் பெற்றவர்களின் நிலையாகும், நான்காவது பிரபஞ்சத்தில் அல்லாஹ்வைத்தவிர எதையுமே காணாத நிலையாகும். தன்னையும் அவர் கடவுளாகவே காண்பார். இந்நிலைக்கு சூபியாக்களிடத்தில் பனாஃ -- இறைவனுடன் சங்கமித்து விடுதல் என்று கூறப்படும். இந்த நிலையை அடைந்தவர்தான் உண்மையான தவ்ஹீத்வாதியாவார். (இஹ்யா உலூமுத்தீன் . 245-4 ம்பாகம் )

இவ்வாறு கஸ்ஸாலி கூறி விட்டு பின்வருமாறு வினாவெழுப்புகின்றார். ஒருவன் வானம் பூமி கடல், கரை, பறவை, மிருகம் இப்படிப் பல்வேறு படைப்புக்களைக் காணும் நிலையில் எங்ஙனம் அனைத்தையும் ஒன்றாக ஒரே கடவுளாகக் காண்பது சாத்தியமாகுமென நீ வினவலாம். எனினும் இது கஸ்புடைய ஞானத்தின் உச்சகட்ட நிலையால் ஏற்படுவதாகும். இந்த ஞானத்தின் ரகசியத்தை எழுத்துக்களால் வடிக்க முடியாது. ரப்பின் இந்த ரகசியத்தை பகிரங்கப்படுத்துவது குப்ராகுமென ஆரிபீன்கள் கூறுவார்கள். (அதே நூல் அதே பக்கம்)

மன்ஸூர் அல் ஹல்லாஜி என்பவன் வழி கெட்ட சூபிகளில் ஒருவன். இவனது காலத்தில் தீனூர் எனும் ஊரில் ஒருவர் மடமொன்றில் தனிமையில் இருந்து வந்தார். இவரது மடத்தைச் சிலர் சந்தேகத்தின் பேரில் சோதனை போட்டபோது அங்கிருந்து கடிதமொன்றைக் கண்டெடுத்தனர். அக்கடிதத்தில் 'அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமான மன்ஸூர் அல்கல்லாஜியிடமிருந்து இன்னாருக்கு.' என்று எழுதப்பட்டி ருந்தது. இக்கடிதம் அரசரிடம் சமர்ப்பிக்கப்பட அவர் ஹல்லாஜியை வரவழைத்து இதுவரை நீ நபியென்றுதான் வாதாடி வந்தாய். இப்போது நீதான் கடவுள் என்று கூறத் துணிந்து விட்டாயா? எனக் கேட்க நான் அப்படிக் கூறவில்லை. எனினும் அனைவரும் கடவுள் என்பதே எங்கள் தத்துவம். இக்கடிதம் எனக்குரியதே... அதே வேளை இதை எழுதியவனும் அல்லாஹ்வே என்றான். ( இக்கொள்கை காரணமாகவே அவனுக்கு இஸ்லாமிய அரசால் மரணதண்டனை விதிக்கப்பட்டது. (தல்பீஸூ இப்லீஸ் பக்கம் 171)

மற்றுமொரு சூபித்துவ வழிகேடனாகிய இப்னு அரபி என்பவன் ஒரு கவிதையில் கூறுகின்றான்.

மனிதனே கடவுள். கடவுளே மனிதன் இப்படியிருக்க யார் யாருக்குக் கட்டளையிடுவது?

நீ மனிதனென அழைத்தாலும் கடவுளென அழைத்தாலும் இ ண்டுமே ஒன்றுதான் இப்படியிருக்க யார் யாரை வணங்குவது.? (அல்புதூஹாத்துல் மக்கிய்யா 213 )

இப்னு அரபியின் மற்றுமொரு உளறலைப் பாருங்கள்....

ஒரு மனிதன் தன் மனைவியுடன் உடலுறவு கொள்ளும் போதும் அல்லாஹ்வுடனேயே உறவு கொள்கின்றான். நான் அவனை அல்லாஹ்வை வணங்குகின்றேன் அவன் என்னை வணங்குகின்றான். (ஸூபிய்யா 17)

அபூ யஸித் அல் புஸ்தாமி எனும் மூடச் சூபி பின்வருமாறு பிரார்த்திக்கின்றான்..

'உனது வஹ்தானியத்தை எனக்கும் தருவாயாக. உனது ரப்பு எனும் கிரீடத்தை எனக்கும் அணிவிப்பாயாக. என்னையும் உனது ஒருமைத்துவத்துடன் சேர்த்துக் கொள்வாயாக. என்னை மக்கள் கண்டால் உன்னைக் கண்டதாகவே சொல்ல வேண்டும் என்று பிரார்த்திக்கின்றான்.

இது போன்ற நச்சுக் கருத்துள்ள சிந்தனைகள் விடயத்தில் அனைத்து சூபிகளுமே ஒருமித்த கருத்தில் இருக்கின்றனர். சூபித்துவ நூல்களில் இவை நிறைந்து காணப்படுகின்றன.

<u>எம்மதமும் சம்மதமே என்பதே சூபித்துவ இலச்சினை.</u>

மேலே கூறியதற்கேற்ப காண்பதெல்லாம் கடவுளே எனும் சித்தாந்தத்தின் படி ஒருவன் எந்த மதத்திலிருந்தாலும் எந்தச் சிலையை வணங்கினாலும் அவன் அல்லாஹ்வையே வணங்குகின்றான் என்பதே இவர்களின் கருத்தாகும். இதற்கேற்ப இஸ்லாத்தின் வைரியான பிர்அவ்னும் மிகப்பெரிய தவ்ஹீத் வாதியாவான். இன்னும் சொல்லப் போனால் 'நான்தான் உங்களுக்கெல்லாம் மிகப் பெரிய கடவுள்' என்று கூறி உண்மையான கடவுள் தத்துவத்தை அவன் நிலை நிறுத்தினான் என்று கூறுகின்றனர். அன்றைய மக்கத்துக் காபிர்களை அல்லாஹ் 'யாஅய்யுஹல் காபிரூன் காபிர்களே' என்று விழித்ததற்குக் காரணம் அவர்கள் எல்லாமே கடவுள்தான் எனும் சித்தாந்தத்தைக் கைவிட்டு விட்டு 313 விக்ரஹங்கள் மாத்திமே கடவுள் என்று நம்பி காண்பெதெல்லாம் கடவுளே என்பதை மறுத்தனர். இதனாலேயே அவர்கள் காபிர்கள் என அழைக்கப்பட்டனர் என்று இவ்வழிகேடர்கள் கூறுகின்றனர்.

ஜலாலுத்தீன் ரூமி என்பவன் கூறுகின்றான்...

நான் ஒரு முஸ்லிம் ஆனாலும் நான் கிருஸ்த்தவனும்தான், பிராமணனும் தான் நான் பள்ளியிலும் தொழுவேன் கோயிலிலும் கும்பிடுவேன், சிலைகளையும் வணங்குவேன் ஏனெனில் எல்லாமே ஒன்றுதான். (ஸூபிய்யா பக்கம் : 45)

இப்னு அரபியின் மற்றுமொரு உளறல்....

'என் மதமும் என் மாற்றுமத நண்பனின் மதமும் ஒரே மதமே என்றில்லா விட்டால் என்னால் தூங்க முடியாது. என்னுள்ளம் எல்லா மதங்களையும் ஒன்றாகவே நோக்கும் நிலைக்கு வந்து விட்டது. அதிலே கிருஸ்த்தவப் பாதிரிகளுக்கும் இடமுண்டு. சிலை வணங்கிகளுக்கும் இடமுண்டு .கஃபாவுக்கும் இடமுண்டு. அது ஒரே நேரத்தில் தௌராத்தாகவும் குர்ஆனாகவும் இருக்கின்றது. (ஸூபிய்யா 17)

## ஸூபிகளின் மேலும் சில ஷிர்க்கான வழி கெட்ட கொள்கைகள்.

<u>1. குரு வணக்கம் புரிதலும் குருவை அல்லாஹ்வை விட மேம்படுத்தி ஷிர்க் வைத்தலும்.</u>

வழிகேடு 1: கஸ்ஸாலி, அபூ தாலிப் மக்கி போன்றோர் கூறுவது.. ஒரு முறை அபூ துராப் எனும் ஸூஃபி தனது சீடர்களில் ஒருவரைக் கண்டார். அவர் சதா நேரமும் இறை நினைவில் ஸ்தம்பித்துப் போயிருப்பதைக் கண்ணுற்று ஆச்சரியப்பட்டு அவரிடம் சென்று பேசினார். பின்னர் அவரிடம் 'இப்படியே இருக்காமல் பிரபல சூபியான அபூ யஸீதையும் போய்ச் சந்தித்து வரலாமே'.. எனக் கூற சீடர் சற்று ஆத்திரப்பட்டு 'என்ன ஷைக் சொல்லுகிறீர்கள்? நான் இங்கிருந்து கொண்டே அல்லாஹ்வைப் பார்த்துக் கொண்டிருக்கின்றேன். அப்படியிருக்க நான் எதற்காக அவரிடம் செல்ல வேண்டும்' என்றார். அதற்கு அந்த ஷைக் ஆத்திரப்பட்டவராக நீ நாசமாய்ப் போக .. அல்லாஹ்வைக் கண்டவுடன் அனைவரையும் மறந்துவிட்டாயா? மகான் அபூ யஸீத் அவர்களை ஒரு தடவை நீ சந்தித்தால் அல்லாஹ்வை எழுவது தடவைகள் சந்திப்பதை விட அது உனக்கு மிகச் சிறந்தது என்றார் இதைக் கேட்டு ஆச்சரியப்பட்ட அச் சீடர் அது எப்படியென வினவ நீ உன்னிடத்தில் அல்லாஹ்வைக் காணும் போது உனது நிலைக்கேற்ற அளவிலேயே உன்னிடம் வெளிப்படுகின்றான். ஆனால் அவரைக் காணும் போது அவரிடத்தில் அவரது நிலைக்கேற்ப முழுமையாகத் தோன்றுகின்றான் என்றார். (இஹ்யா 34 -305)

இந்த வழிகேட்டை என்னவென்று விபரிப்பது? நபி மூஸா அவர்கள் அல்லாஹ்வைக் காண வேண்டுமென அவனிடம் கேட்டபோது 'நிச்சயமாக உன்னால் என்னைக் காண முடியாது' என்று கூறினான். (அல்குர்ஆன்) நபியவர்கள் தனது ஸஹாபாக்களுக்கு 'அறிந்து கொள்ளுங்கள் நிச்சயமாக நீங்கள் மரணிக்கும்வரை உங்களால் அல்லாஹ்வைக் காண முடியாது என்று கூறினார்கள். (இப்னு மாஜா 4067)

இப்படியிருக்க சூபிகள் எப்படி அதுவும் சதா நேரமும் அல்லாஹ்வைக் காண்பது? ஷைத்தான்தான் இவர்களின் கண்களில் தோன்றுகின்றான் என்பதில் சந்தேகமில்லை. இது ஒரு புறமிருக்க அபூ யஸீத் எனும் ஸூஃபியைக் காண்பது அல்லாஹ்வை எழுபது தடவைகள் காண்பதை விடச் சிறந்ததென்றால் இவர்கள் எந்தளவுக்கு வழிகெட்டுப் போயுள்ளனர் என்பதை நீங்களே தெரிந்து கொள்ளுங்கள்.

வழிகேடு 2: கஸ்ஸாலியும் அபூதாலிப் மக்கியும் கூறும் மற்றுமொரு பிதற்றல். ஒரு முறை பஸரா நகரத்துக்குள் எதிரிப் படைகள் புகுந்து அட்டகாசம் செய்த போது மக்கள் 'ஸஹ்ல் எனும் சூபியொருவரிடம் சென்று தம்மைக் காக்குமாறு முறையிட்டனர். நீங்கள் அல்லாஹ்விடம் கேட்டால் அவன் உடனே அதை அங்கீகரிப்பான் எனக் கூறினர் .அதற்கவர் மௌனமாயிருந்து விட்டு இவ்வூரில் சில நல்லடியார்கள் இருக்கின்றார்கள். அவர்கள் உலகிலுள்ள அனைத்து அநியாயக்காரர்களையும் அழிக்க வேண்டுமனப் பிரார்த்தித்தாலும் அதே இரவிலேயே அனைவரும் அழிக்கப்பட்டு விடுவார்கள். அவர்கள் மறுமை நாள் இடம் பெறக் கூடாதென்று கேட்டாலும் அல்லாஹ் மறுமை நாளை ஒரு போதும் ஏற்படுத்த மாட்டான் என்றார். (இஹ்யா 4- 305 கூத்துல் குலூப் 2 – 71)

அல்லாஹ்வையே மிஞ்சி விட்ட வல்லமை பெற்றதாக வாதிடும் இவர்கள் இறை நேசர்களா? ஷைத்தானின் பங்காளிகளா ? மக்கள்தான் முடிவு செய்ய வேண்டும் .

வழிகேடு 3: ஷிர்க் - இணை வைப்பை இபாதத் என்று கூறும் ஸூபித்துவம் . அப்துல் கனி அந்நாபிலிஸி எனும் சூபிப் பெரியார்? ஷிர்க் சம்பந்தமாக எப்பபடி விளக்குகின்றார் பாருங்கள்! 'ஷிர்க் என்பது இரு வகைப்படும் தெளிவான ஷிர்க், மறைவான ஷிர்க். தெளிவான ஷிர்க் என்பது அல்லாஹ்வுடன் வேறொருவர் இருப்பதாக எண்ணுவதாகும். அல்லாஹ் பார்ப்பவன் கேட்பவன். மனிதனும் பார்ப்பவன் கேட்பவன். எனவே ஒருவன் அல்லாஹ்வும் மனிதனும் வேறு வேறு என்று நினைத்தால் அவன் பார்த்தல், கேட்டல் போன்ற பண்புகளில் அல்லாஹ்வுக்கு இணையான இன்னொன்றை ஆக்கிவிட்டார். (ரிஸாலத்து அர்ஸலான் 75 ,76)

இது தான் சூபித்துவ சிந்தனையின் அச்சாணி , எல்லாம் ஒன்றே என்பதே சூபித்துவ வாதிகளின் தௌஹீத் முழக்கமாகும். மூளையுள்ளவர்கள் - பாமரர்களாயினும் இது சுத்தப் பிதற்றல் போதையில் ஏற்படும் உளரல்கள் என்பதை எளிதில் அறிந்து கொள்ள முடியும். தம் மூளையினை சூபிகளுக்கு காணிக்கையாகச் செலுத்தி காலில் விழுந்து சாஷ்ட்டாங்கம் செய்தவர்கள் பல்லறிவு மேதைகளாயினும் இது அவர்களுக்குத் தெரியப்போவதில்லை. (அல்லாஹ் வழிகெட விரும்பியவர்களுக்கு நேர்வழிகாட்ட யாரால் முடியும்?)

## 2-பாலியல் அராஜகம், காம லீலைகள் புரியும் ஸூபிகள்.

அப்துல் வஹ்ஹாப் ஷஃரானி எனும் சூபித்துவப் பித்தன் தனது தபகாதுஸ்ஷஃரானீ எனும் நூலில் எழுதியிருப்பதாவது ...

எனது தலைவர் குருநாதர் அலீ வஹீஸ் என்பவர்கள் மிகப் பெரும் சூபி மகானாவார்கள். அவர்களுக்கு மிகப் பெரும் கராமத்துகள் நடந்துள்ளன. அவருக்கு ஒரு கடையிருந்தது. அக்கடை மக்கள் எவரும் அருகே நெருங்க முடியாத படி துர் வாடை வீசிக் கொண்டிருந்தது. காரணம் தெருவில் கிடக்கும் செத்த நாய், ஆடு போன்றவற்றையெல்லாம் இழுத்துக் கொண்டு வந்து இவர் தனது கடைக்குள் போட்டு விடுவார். எவருமே அவரை நெருங்க முடியாதவாறு அவரிடமும் துர்நாற்றம் வீசும். ஒரு முறை அவர் மஸ்ஜிதுக்குச் செல்ல விரும்பினார். செல்லும் வழியில் நாய்கள் குடிப்பதற்காக வைக்கப்பட்ட நீர்ப்பாத்திரத்தைக் கண்டு அதிலேயே ஒழுச் செய்தார். பின்னர் கிழட்டுக் கழுதையொன்றுடன் பாலியல் புணர்ச்சி செய்தார் .

மேற்படி மகானவர்கள் பெண்களையோ விடலைச் சிறுவர்களையோ கண்டால் அவர்களது பின்புறத்திலே கையால் தடவி கூச்சங்காட்டி தனது காமப் பசியைச் தீர்க்க வருமாறு அழைப்பார். அவர்கள் அவ்வூர்த் தலைவர், அமைச்சருடைய மனைவியாகிலும் சரியே. அப்பெண்ணின் தந்தையின் முன்னிலையிலேயும் இப்படிச் செய்யத் தவற மாட்டார். மற்ற மக்கள் பார்ப்பார்களே என்பதைக் கண்டு கொள்ளவே மாட்டார்.

மேற்படி ஷைக் ஊர்த் தலைவரையோ முக்கிய பிரமுகர்களையா கண்டால் அவர்களைக் கழுதையிலிருந்து இறக்கி 'நீ கடிவாளத்தைப் பிடித்துக் கொள்' என்று கூறிக் கழுதையுடன் பாலியல் லீலையில் ஈடுபடுவார். அவர்கள் இவரது ஆசைக்கு இணங்க மறுத்தால் அதே இடத்திலேயே சபித்து தரையுடன் சேர்த்து ஆணியறைந்து விடுவார். அதன் பின் அவர்களால் அவ்விடத்தை விட்டும் நகரவும் முடியாது. (ஹகீக்கதுஸ் ஸூபிய்யா ப 439)

### இபாதத்களைக் கொச்சைப்படுத்தும் ஸூபிகள்...

புஸ்தாம் நகரில் மக்கள் மத்தியில் நன்மதிப்புப் பெற்ற ஒரு வணக்கவாளி இருந்தார். இவர் அபூ யஸீத் அல் புஸ்தாமியின் மஜ்லிஸில் தவறாமல் கலந்து கொள்பவராக இருந்தார். ஒரு நாள் இவர் அபூ யஸீதிடம் ஷைக் அவர்களே! நான் முப்பது வருடங்களாகத் தினமும் விடாமல் நோன்பு நோற்று வருகின்றேன். இரவு முழுக்க தூங்காமல் நின்று இறை வணக்கம் செய்கின்றேன். அப்படியிருந்தும் உங்களிடமுள்ள மெஞ்ஞான அறிவு எனக்குக் கிடைக்கவில்லையே! என்று ஆதங்கப்பட்டார். அதற்கு அபூ யஸீத் 'நீ முன்னூறு வருடங்கள் நோன்பு நோற்று இரவில் நின்று வணங்கினாலும் இந்த மெஞ்ஞானம் உனக்குக் கிடைக்காது' என்று கூற அவர் ஏன்? என வினவினார். அதற்கவர் உன்னைச் சுற்றி சுயநலம் எனும் திரை இருக்கின்றது (அதாவது வணக்க வழிபாடுகளை உனக்கு நன்மை கிடைக்க வேண்டுமென்ற தன்னலம் கருதும் எண்ணத்துடன் செய்கின்றாய். நன்மையும் வேண்டாம் சுவனமும் வேண்டாம் இறைக்காதலே வேண்டும் எனும் எண்ணம் உன்னிடமில்லை என்றார். அதற்கு அவர் அப்படியாயின் அதனை நீக்க ஏதேனும் மருந்துண்டா? என வினவ உண்டு. ஆனால் நீ அதனை ஏற்றுக் கொள்ளமாட்டாய் என்றார். இல்லை ஏற்றுக் கொள்வேனென அவர் அடம்பிடிக்க இவர் இவ்வாறு கூறுகின்றார். நீ இப்படியே

சவரக்கடைக்குச் சென்று உன் தலை முடியையும் தாடியையும் மழித்துக் கொள். உனது இந்த உடையைக் களைந்து விட்டு ஒரு போர்வையை உடுத்திக் கொள். உன் கழுத்தில் ஒரு தோல்ப் பையைத் தொங்க விட்டு அதனுள் தானியங்களைப் போட்டுக் கொண்டு சந்தைக்குச் சென்று சிறுவர்களைக் கூட்டி வைத்துக் கொண்டு 'எனக்கு நீங்கள் ஒரு முறை முகத்தில் அறைந்தால், கல்லால் எறிந்தால் ஒரு பருப்புத் தருவேன் என்று கூறிக் கொண்டு அவர்கள் கற்களினால் எறியும் நிலையிலேயே உனக்குத் தெரிந்தவர்கள் இருக்குமிடமெல்லாம் செல் என்றார். இதனைக் கேட்ட அவர் 'ஸுப்ஹானல்லாஹ் இதெப்படி முடியுமென்றார். அதற்கவர் நீ ஸுப்ஹானல்லாஹ் என்று கூறியது ஷிர்க்காகும். ஏனெனில் உன்னையே நீ தூய்மைப்படுத்தினாய் அல்லாஹ்வையல்ல என்றார்.

இச்சம்பவத்தைத் தனது நூலில் கூறும் கஸ்ஸாலி 'தான் செய்த அமலினால் தற்பெருமை கொள்வோருக்கு இப்படியான மருந்துகளே பயன் தரும். இந்த மருந்தைப் பாவிக்க முடியாதவன் இது மருந்தல்ல என்று எங்ஙனம் மறுக்க முடியும்? என வினாவெழுப்புகின்றார். (இஹ்யா உலூமுத்தீன்2-456 )

இச்சம்பவத்திலுள்ள மார்க்க முரண்பாடுகளை வரிவரியாக விளக்க ஆரம்பித்தால் பல பக்கங்கள் வீணாகிவிடும் என்பதால் விமர்சனத்தை வாசகர்களுக்கே விட்டு விடுகின்றேன்.

சூபித்துவக் கிறுக்கன் ஷஃரானி மேலும் கூறுவதாவது... இப்றாஹீம் உஸைபீர் என்பவரும் பிரபல சூபிமகானாவார்கள். அன்னாருக்கு கஷப் எனும் ஞானம் கொடுக்கப்பட்டிருந்தது. அவர்கள் சீறுநீர் கழித்தால் அது பால் போல் வெண்மையாயிருக்கும். அவர்களுக்கு சிலவேளை ஞானம் முற்றி விட்டால் முகத்தில் மொய்த்திருக்கும் கொசுவுடனும் பேச ஆரம்பித்து விடுவார்கள். பள்ளியில் முஅத்தினின் அதானோசையைக் கேட்டால் அவருக்குக் கல்லால் எறிந்து 'நாயே.. நாங்களென்ன காபிர்களா? எங்களுக்கு அதான் சொல் கின்றாயே' என்பார்கள். என்னைப் பொறுத்தவரைக்கும் கிறிஸ்த்தவர்களைப் போன்று ஆட்டிறைச்சி வகைகள் உண்ணாமலிருப்பவனே உண்மையில் நோன்பு நோற்றவனாவான். ஆடு, கோழி, இறைச்சி வகையறாக்களை உண்பவன் நோக்கும் நோன்பு நோன்பேயில்லை என்று கூறுவார்கள். குதிரையின் சாணத்தைக் குவித்து வைத்து அதன் மீதே தினமும் அவர்கள் உறங்குவார்கள். (தபகாத்துஸ் ஷஃரானிய் 2-140 )

### பல உருவங்களில் அவதாரம் எடுக்கும்? வழி கெட்ட சூபிகள்.

ஸெய்யித் முஹம்மத் குலைறி என்பவர்களும் மிகப் பெரும் சூபி மகானாகும். ஒரு முறை குத்பாப் பேருரை நிகழ்த்துமாறு மக்கள் இவரை அழைத்தனர். உடனே இவர் மிம்பரில் ஏறி 'உங்களின் வணக்கத்துக்குத் தகுதியானவன் இப்லீஸைத் தவிர வேறெவருமில்லையென்று நான் சாட்சி கூறுகின்றேன்' என்றார். இதனைக் கேட்ட மக்கள் குப்ர் குப்ர் என்று கோசமிட்டனர். உடனே இவர் கீழே இறங்கி வாளை உருவிக் கொண்டு குப்ர் என்று சொன்ன மக்களை நோக்கி ஓடி வர அவர்கள் பள்ளியை விட்டு விரண்டோடினார்கள். மீண்டும் அவர் திரும்பி வந்து தனிமையிலேயே மிம்பரில் அஸர்த் தொழுகை வரைக்கும் நின்று கொண்டிருந்தார். பின் அவ்வூர்ப் பிரமுகர்கள் சிலர் வந்து அவரிடம் சமாதானம் பேசி வழிக்குக் கொண்டு வந்தனர். பின்னர் அக்கம்பக்க ஊர்களுக்கு இச்செய்தி பரவியபோது அவ்வூரவர்கள் மேற்படி ஷைய்க் தமது ஊரில் அதே தினம், அதே நேரத்தில் குத்பா ஓதியதாக வாதிட்டனர். இவ்வாறு கணக்கிட்ட போது முப்பது ஊர்களின் முப்பது இடங்களில் அதே நாள் அதே நேரத்தில் இவர் குத்பா ஒதியிருந்தமை தெரியவந்தது. ஆனால் அவர் எங்களூரில் எங்கள் கண்ணெதிரேயே மிம்பரில் இருந்து கொண்டிருக்கக் கண்டோம். (ஸுபிய்யா பீ மீஸானிஸ் ஸுன்னா 20)

அல்லாஹ் தான் அனுப்பிய எந்த நபிக்குமே இவ்வாறானதொரு அதிசயத்தைக் கொடுக்கவில்லை. இது உண்மையெனில் நபியவர்களுக்கு எப்போதாவது இப்படி நிகழ்ந்துள்ளதா? சிந்தியுங்கள்! அவர்களுக்கு எப்படியான இக்கட்டான நிலைகளெல்லாம்

ஏற்பட்டன. இப்படி உருமாறி ஒரே நேரத்தில் பல இடங்களிலும் தோன்றும் விடயம் உன்மையெனில் சாத்தியமெனில் ஒரே நேரத்தில் உலகின் பல இடங்களுக்கும் சென்று இஸ்லாத்தைப் பரப்பியிருக்க முடியுமே? அந்த இடங்களுக்கெல்லாம் தோழர்களை அனுப்ப வேண்டியதில்லையே?.

எனவே அல்லாஹ்வால் அருளப்பட்ட பகுத்தறிவில் அணுவளவேனும் பாக்கி வைத்திருக்கக்கூடிய ஒருவன் கூட இவ்வாறான செய்திகளை உண்மைப்படுத்த மாட்டான். வழிகெட்ட சூபிகளால் மூளைச்சலவை செய்யப்பட்டு பகுத்தறிவை மகான்களுக்குக் காணிக்கையாகச் செலுத்தவிட்ட மூளையற்றவர்கள் வேண்டுமானால் இவ்வாறான விடயங்களை உண்மைப்படுத்தலாம். இவ்விடயம் ஒன்றில் திட்டமிடப்பட்ட வெறும் ஏமாற்று வேலையாக இருக்கும். இல்லாவிடில் ஷைத்தான்களின் உதவியுடன் செய்யப்படும் செட்டப்பாக இருக்க வேண்டும். சூபிகள் தமது இலக்கை அடைவதற்காக ஷைத்தானுக்கு சிரம் பணிந்து சாஷ்ட்டாங்கம் செய்யவும் தயங்கமாட்டார்கள்.

## குர்ஆன் ஹதீஸ் சட்டங்களை மறுக்கும் சூபித்துவம்.

ஸூஃபிகள் அல்குர்ஆனைப் பொறுத்தவரைக்கும் அது அல்லாஹ்வுடையது என்று ஏற்றுக் கொண்டாலும் அதன் சட்டங்களை மறுப்பதற்கு நடைமுறைப் படுத்தாமல் புறக்கணிக்க இரண்டு வழிகளைக் கையாள்கின்றனர்.

1- குர்ஆனின் சட்ட திட்டங்கள் அனைத்துமே அடிமட்டத்திலுள்- அல்லாஹ்வை நன்கு அறியாத பாமர மக்களுக்காகவே சொல்லப்பட்டிருக்கின்றன. உண்மையான மெஞ்ஞான அறிவைப்பெற்ற சூபி மகான்கள் எவ்வித வணக்க வழிபாடுகளும் செய்ய வேண்டியதில்லை, அவர்கள் சரீஅத் சட்டங்களைக் கடைப்பிடிக்க வேண்டியதுமில்லை என்பார்கள்.

இஸ்லாத்தில் ஹராமாக்கப்பட்டவைகள் அனைத்தும் இவர்களுக்கு ஹலாலாகும். மது, மாது உற்பட அனைத்துமே இவர்களைப் பொறுத்த வரைக்கும் இபாதத்கள் என்ற குப்ரான கருத்தைக் கொண்டிருக்கின்றனர். அப்படியானால் முஹம்மத் (ஸல்) உற்பட அனைத்து நபிமார்களுமே இறுதி மூச்சுவரை தொழுது கொண்டுதானே இருந்தார்கள்? நபியவர்கள் மரணப் படுக்கையிலிருக்கும் போது கூட தமது தோழர்களின் உதவியுடன் இரு புறமும் கைத்தாங்கலாகப் பிடித்துக் கொள்ள பள்ளிக்குச் சென்று தொழுதார்களே அவர்களது வாழ்க்கை பற்றி அவர்களின் அன்பு மனைவி ஆயிஷா! 'நபியவர்களின் பண்புகள் அனைத்தும் குர்ஆனாகவே குர்ஆனுக்கேற்பவே இருந்தது' என்று கூறியுள்ளார்களே... அப்படியாயின் நபியவர்கள் அடிமட்ட பாமர மனிதரா? அவர்களுக்கு இந்த மெஞ்ஞானம் கிடைக்கவில்லையா என்று கேட்டால் அதற்குத் தரும் பதில் குப்ரின் மேல் குப்ராகவே இருக்கின்றது. ஆம்! அவர்கள் சொல்கின்றார்கள் நபிமார்களுக்கு இந்த மெஞ்ஞானம் கொடுக்கப்படவில்லைதான். நபிமார்கள் மெஞ்ஞானம் எனும் அறிவுக் கடலின் கரையிலேயே நின்று கொண்டிருந்தார்கள். ஆனால் சூபிகளான நாங்களோ அந்த மெஞ்ஞானத்தின் ஆழ்கடல் வரைக்கும் சென்று மூழ்கியிருக்கின்றோம் என்கின்றனர்.
ஆதாரம்: (சூபித்துவத்தின் சுய ரூபம் 450.)

2- அல்குர்ஆன் போதனைகளை மறுக்க இவர்கள் கடைப்பிடிக்கும் அடுத்த யுக்தி அல்குர்ஆனுக்கு உள் அர்த்தம் வெளி அர்த்தம் என இரண்டு வகையான அர்த்தங்கள் உள்ளன என வாதிடுகின்றனர். சாதாரண அறிஞர்கள் இதன் உள் அர்த்தங்களை அறிந்து கொள்ள மாட்டார்கள். சூபித்துவ மெஞ்ஞான மேதைகளுக்கே?? இதன் உண்மை அர்த்தம் புலப்படும் என்று கதையளக்கின்றனர்.

உதாரணத்திற்கு மூஸா நபிக்கு அல்லாஹ் நபித்துவத்தை வழங்கியவேளை 'உனது இரு காலணிகளையும் கழட்டு ஏனெனில் நீ புனிதமான ஒரு இடத்தில் இருக்கின்றாய்' என்றான். இங்கு 'இரண்டு காலணிகளையும்' என்பதற்கு அர்த்தம் உலக ஆசை , சொர்க்கத்து ஆசை

ஆகியவற்றைக் களைந்து விடு என்பதாகும் என வாதிடுகின்றனர்.

அதே போன்று நபி இப்றாஹீம் அவர்கள் பிரார்த்திக்கும் போது 'என்னையும் என் பிள்ளைகளையும் சிலைகளை வணங்குவதை விட்டும் காப்பாற்றுவாயாக என்று பிரார்த்தித்தார்கள். அதற்கு விளக்கமளிக்கும் சூபிகள் 'சிலைகள் என்பதன் அர்த்தம் தங்கம் வெள்ளி போன்றவற்றிலுள்ள உலக மோகம்தான், மாறாக உண்மையில் சிலை வணக்கத்தை விட்டும் அவர்கள் பாதுகாப்புத் தேடவில்லை. ஏனெனில் சிலையும் அல்லாஹ்தான் என உளறுகின்றனர்.. (நூல்: சூபித்துவமும் கஸ்ஸாலியும் ப: 131 )

அல்லாஹ்வின் அன்பு மாத்திரம் தான் உள்ளத்தில் இருக்க வேண்டுமென வாதிடும் இந்தப் போக்கிரிகளின் கருத்துப்படி தங்கம் வெள்ளி உலக வஸ்த்துக்கள்கூட அல்லாஹ்தானே? பிறகு ஏன் அவற்றின் ஆசை மனதில் இருக்கக் கூடாது.? அவற்றை வெறுக்க வேண்டுமென பிரச்சாரம் எதற்கு? அல்லாஹ்வுக்கே வெளிச்சம்!!.

அவ்வாறே நபி (ஸல்) அவர்களுடைய ஹதீஸ்களை, பொன்மொழிகளை மறுப்பதற்கு இந்தக் கயவர்கள் மற்றுமொரு யுக்தியைக் கையாள்கின்றனர். இதுபற்றி பிரபல சூபித்துவப் பித்தனும் கிறுக்கனுமாகிய இப்னு அறபி இவ்வாறு உளறுகின்றான்.......

'எத்தனையோ ஹதீஸ்கள் அவற்றின் அறிவிப்பாளர்கள் வரிசையைப் பார்க்கும்போது அவை ஸஹீஹானதாக, ஏற்றுக்கொள்ளக் கூடிய அமைப்பில் உள்ளன. (அதன்படி மக்கள் அமல் செய்து கொண்டும் இருக்கின்றனர்.) ஆனால் துன்யா மோகம் எனும் போலித்திரைகள் நீக்கப்பட்ட சூபிகளில் ஒருவர் தனது கஷ்புடைய நிலையில் ஞானப் பார்வையால் நபியவர்களைச் சந்திப்பார். அவர்களிடத்தில் இந்த ஹதீஸ் பற்றிக் கேட்ட போது நபியவர்கள் நான் அப்படியொரு ஹதீஸைச் சொல்லவில்லையே அப்படியொரு தீர்ப்பை வழங்கவில்லையே எனக் கூறி மறுத்து விடுவார்கள். எனவே அந்த சூபிமகான் இந்த ஹதீஸ் போலியானது, பலவீனமானது என்பதை அல்லாஹ்விடமிருந்து நபி மூலம் நேரடியாகக் கிடைத்த ஆதாரத்தின் அடிப்படையில் அறிந்து கொண்டு அதன்படி செயற்படுவதை விட்டு விடுவார். எனினும் பாமரர்கள் (அதாவது ஹதீஸ் கலை அறிஞர்கள்) அதன் அறிவிப்பாளர் வரிசை சரியாக உள்ளதே என்பதை மாத்திரம் பார்த்துக் கொண்டு அதன் படி அமல்ச் செய்து கொண்டிருப்பார்கள். யதார்த்தத்தில் உண்மை அதுவல்ல. (நூல்: குர்ஆன் தராசில் சூபித்துவம் ப: 17)

எனவேதான் சூபிகள் மார்க்கம் எனும் போர்வையில் தமது நச்சுக் கருத்துக்களைப் பரப்புவதற்கு ஏதுவாக தாம் அறிவை அல்லாஹ்விடமிருந்தும் நபி (ஸல்) அவர்களிடமிருந்தும் நேரடியாக தகவல்களை எடுப்பதாக நாடகமாடுகின்றனர். 'ஹத்த தனீ கல்பீ அன் றப்பீ' என்னுள்ளம் எனது இறைவன் சொன்னதாக அறிவிக்கின்றது என்று ஆரம்பித்து தம் விசக் கருத்தை மக்கள் மத்தியில் விதைப்பார்கள்.

இது பற்றி பிரபல வழிகேடன் இப்னு அறபி பேசுகையில்..

எங்களில் சிலர் நபியவர்களின் பிரதிநிதியாவார்கள். தமக்குக் தேவையான சட்டங்களை நேரடியாக நபியவர்களைச் சந்தித்துக் கேட்டறிந்து கொள்வார்கள், அல்லது தமது சுய ஆராய்ச்சியின் மூலம் அதற்குத் தீர்வு கண்டு கொள்வார்கள். எங்களில் இன்னும் சிலர் நேரடியாக அல்லாஹ்விடமிருந்தே தமக்குத் தேவையான சட்டங்களை எடுத்துக் கொள்கின்றனர். இவர்கள் உலகிலுள்ள அல்லாஹ்வின் பிரதிநிதியாவார்கள். (ஆதாரம் தபகாத்துஸ் ஷஃ்ரானி-- சூபித்துவம் குர்ஆன்தராசில் 31 )

## <u>உலகத்தையே ஆட்சிசெய்யும் 'ஸூபி ராஜ்ஜியம்'.</u>

ஆட்டைக் கடித்து, மாட்டைக் கடித்து, மனிதனையே கடித்த குள்ள நரி என்ற

முதுமொழிக்கேற்ப இந்த மதிகெட்ட சூபிகள் இஸ்லாத்தின் ஒவ்வொரு தூண்களிலும் சிறிது சிறிதாகக் கை வைத்து ஆட்டடங்காணச் செய்து முதற்கட்டமாக தாம் இறை நேசச்செல்வர்கள் என்று புருடா விட்டு அதற்கப்பால் தமக்குக் கராமத் இருப்பதாகக் கூறி நபிமார்களுக்கு அல்லாஹ் கொடுத்த முஃஜிஸா அற்புதங்களைத் தோற்கடிக்கும் வகையில் போலி அற்புதங்களைப் புனைந்து, அதற்கப்பால் ஒரு படி மேலே சென்று நபிமார்களை விடவும் தாம் உயர்ந்தவர்கள் என்று வாதாடி இறுதியில் அல்லாஹ்வையே நாங்கள் தோற்கடித்து விரட்டி விட்டு அவனிடமிருந்து ஆட்சிப் பொறுப்பைப் பறித்துக் கொண்டோம். என்று சொல்வதைப் போன்று அல்லாஹ்வுக்குரிய அனைத்து வல்லமைகள் அதிகாரங்கள் அனைத்தும் தமக்கும் இருப்பதாக வாதிக்கும் நிலைக்கு வந்து விட்டனர். இதனை சிலர் நம்பாமல் இருக்கலாம். ஏற்க மறுக்கலாம். அதற்காகத்தான் அவர்கள் கூறும் சில அதிசய நிகழ்வுகளை மாத்திரம் தொட்டுக் காட்டுகின்றேன். புட்டுக் காட்டுவதானால் அதற்கே தனியாக பெரியதொரு புத்தகம் எழுத வேண்டியிருக்கும். இச்சம்பவங்களை சில சூபித்துவ பக்தர்கள் ஆதார மற்றவை, மகான்களின் பெயரால் இட்டுக்கட்டப்பட்டவை என்று கூடக் கூறலாம். ஆனால் இச்சம்பவங்கள் உண்மையா? என்று ஆராய்ந்தறிவதில் அர்த்தமில்லை. காரணம் இவற்றில் அனேக சம்பவங்களில் இடம்பெறும் பாத்திரங்களுக்கு முகவரியேயில்லை. என்றாலும் இச்சம்பவங்கள் அவர்களது புத்தகங்களில் உள்ளன. அவர்களால் போதிக்கப்படுகின்றன. அதற்கும் மேலாக அவர்களிடம் இந்த நம்பிக்கை புரையோடிப்போய் அவர்களின் இதயங்களில் சங்கமித்து நிற்கின்றன. அவற்றை இவர்கள் வெளிப்படையாகவே பேசுகின்றனர், பிரச்சாரம் செய்கின்றனர். எனவே அல்லாஹ்வின் சக்திகள் அனைத்தும் தமக்கும் இருப்பதாக சூபிகள் வாதிக்கின்றனர் என்பதை நிரூபிக்கவே பின்வரும் நிகழ்வுகளைக் குறிப்பிடுகின்றேன்.

## இப்படியும் பிள்ளை வரம்.

ஞான வழி நடந்த இறைநேசச் செல்வர்களில் ஒருவரிடத்தில் ஒருவர் வந்து தனக்காக ஒரு ஆண்குழந்தை கிடைக்க இறைவனிடம் துஆச் செய்யுமாறு வேண்டினார். அதற்கு ஷைக் அவர்கள் 'அதற்காக பெருந்தொகைப் பணம் செலவாகுமே ஒரு தொகைத் தங்கக்காசுகள் ஸதகாச் செய்வதற்காக எனக்குத் தர வேண்டும் என்றார். அதற்குச் சம்மதித்த அவர் சொன்னபடி பணமுடிச்சைக் கொண்டு வந்து கொடுத்தார். அதன் பின் ஆண் குழந்தை கிடைப்பதற்காக துஆச் செய்தார். ஆனால் அவருக்குப் பெண்குழந்தையே பிறந்தது. இதனால் ஆச்சரியப்பட்ட அவர் ஷைக் அவர்களே!! ஆண்குழந்தை கிடைக்குமென்றீர்களே பெண் குழந்தை தானே பிறந்துள்ளது என்றார். இதைக் கேட்ட ஷைக் 'நீ தரவேண்டிய பணத்தில் குறைபாடு செய்து விட்டாய், அதனால் உனக்குக் கிடைத்த குழந்தையிலும் குறை ஏற்பட்டு விட்டது' என்றார். அதனால் கைசேதப்பட்ட அந்த நபர் ஷைக் அவர்களே உண்மை தான். அதற்கு ஏதேனும் பரிகாரமுண்டா? என வினவ ஆம் உண்டு. மிகுதிப்பணத்தைத் திருப்பித் தர வேண்டும் என்றார். உடனே அந்த மனிதர் மிகுதிப் பணத்தைத் திருப்பிக் கொடுத்ததும், ஆம் இப்போது வீட்டுக்குச் சென்று பார் என்றார். என்ன ஆச்சரியம்!! வீட்டுக்குச் சென்று பார்த்ததும் அதே பெண் குழந்தை ஆண் குழந்தையாக மாறியிருந்தது. (கஸ்பு ஸஃபிய்யா 444)

## சொர்க்கத்தை விற்பனை செய்யும் சூபிகள் .

ஷைக் மத்யன் அஹ்மத் அவர்களும் பிரபல சூபி மகானாவார்கள். ஒருமுறை அவரிடத்தில் ஒரு பெண் வந்து முப்பது பொற்காசுகளைக் கொடுத்து எனக்கு மறுமையில் சொர்க்கம் வேண்டும் என்றாள். அதற்கவர் இத்தொகை போதாது என்றார். இதைத் தவிர வேறெதுவும் தன்னிடம் இல்லையென்று அவள் கூறியதும் சிறிது யோசித்து விட்டு பின்னர் அவள் சுவர்க்கம் செல்வதற்குத் தான் பொறுப்பென ஒப்புக் கொண்டார். பின்னர் அப்பெண் இறந்ததும் அவளின் உறவினர்கள் இவ்வொப்பந்தம் செல்லாது என்று கூறி அப்பணத்தைக்

கேட்டு ஷைக்கிடம் வந்தார்கள். அன்றிரவு அப்பெண் அவர்களின் கனவில் வந்து 'ஷைக் அவர்கள் வாக்குறுதியளித்தவாறு எனக்கு சொர்க்க த்தைத் தந்து விட்டார்கள். எனவே அவர்களைத் தொந்தரவு செய்யாதீர்கள்' என்றாள்.
(தபகாத்துஷ;ஷஃ்ரானி 2-102)

## சூபிகளின் ராஜ்ஜியமா ? கேடிகளின் அராஜகமா?

லவ்ஹுல் மஹ்பூளில் உள்ளதை அறியும் ஸூபிகள்.

செய்யத் முஹம்மத் ஸுவைமிய் அவர்களும் பிரபல சூபித்துவ மகானாவார்கள். அவர்களுக்கு மரண வேளை நெருங்கிய போது மலக்குல் மௌத்தானவர் அவர்களிடம் உயிரைக் கைப்பற்ற வந்தார்கள். அதற்கு ஷைக்கவர்கள் நீர் தவறான தகவலினடிப்படையில் என்னிடம் வந்திருக்கின்றீர். எனக்கு இன்னும் அஜல் இருக்கின்றது இப்போது சென்று லவ்ஹுல் மஹ்பூள் பலகையைப்பார் என்றார். இதற்கேற்ப அவர் சென்று பார்த்தபோது இன்னும் பத்து வருடங்களுக்கு அவரது வாழ் நாள் நீடிக்கப்பட்டிருந்தது. பின் அவர்களுக்கு மரணவேளை நெருங்கிய போது தனது மனைவியிடம் 'தனக்குப்பின் நீ எவரையும் மணக்கக் கூடாது' என்று கட்டளையிட்டார்கள்.

(அவரின் மனைவியுடன் அவர் ஒரு போதும் உடலுறவு கொள்ளாததால்) மனைவி கன்னிப் பெண்ணாகவே இருந்தார். இது பற்றி அப்பெண் உலமாக்களிடம் கேட்ட போது இச்சட்டம் நபியவர்களுக்கு மாத்திரமுள்ளது. எனவே நீ தாராளமாக மறு மணம் செய்யலாம் என்றார்கள். இதன்படி அப்பெண் மறுமணம் செய்த போது முதலிரவில் கணவனுடன் இருந்த வேளை அந்த ஷைக் அங்கு தோன்றி அவளின் கணவனை ஈட்டியால் குத்திக் கொலை செய்துவிட்டார். அதன் பின் அப்பெண் மரணிக்கும் வரைக்கும் கன்னியாகவிருந்தே இருந்து இறந்தார். (தபகாத்துஷ;ஷஃ்ரானி 2-103)

கர்ப்பத்திலுள்ளதையும், லவ்ஹுல் மஹ்பூளையும் அறிந்த சூபி மகான்.

ஜாக்கீர் கர்த்தீ என்பவர் பிரபல சூபியாவார்கள். இவர் ஒருமுறை வீதியில் செல்லும் போது பெண்கள் கூட்டமாகச் செல்வதைக் காண நேர்ந்தது. உடனே ஷைக் அவர்கள் ஒரு பெண்ணைச் சுட்டிக்காட்டி இப்பெண் காளை மாட்டின் மூலம் கர்ப்பமுற்றிருக்கின்றாள். அதன் நிறம் சிவப்பு அதன் வடிவம் இன்னது என்று சொன்னார். பின்னர் அப்பெண் பிரசவித்த பின் காளை மாட்டின் குழந்தையை அறுக்க நேர்ச்சை செய்து அதற்கென ஒரு நபரையும் நியமித்தார். மற்றுமொருவர் அவரிடம் வந்து தான் கடற்பயணம் செய்யவிருப்பதாகக் கூறினார்.அதற்கு அந்த மகான் கடலில் உனக்கு ஏதேனும் இன்னல்கள் ஏற்பட்டால் உடனே என் பெயரைக் கூறி அழைத்து அபயம் தேடு. நான் அபயமளிப்பேன் என்றார். அதன் பின் ஷைக் கூறினார். நான் ஒருவரைப் பாதுகாப்பதாக வாக்குறுதியளிப்பதென்றால் அவரின் பெயரையும் அவர் பற்றிய தகவல்களையும் லவ்ஹுல் மஹ்பூள் எனும் ஏட்டைப் பார்த்து அறிந்து கொண்டதன் பின்னரே வாக்குறுதியளிக்கின்றேன் என்றார். (அதே நூல் 2-106)

## மாண்டோரை மீட்டு உயிர் கொடுக்கும் சூபி.

ஷைக் அதிய் அவர்களிடம் நான் ஒரு முறை சென்றிருந்தேன். அப்போது வெளியூரிலிருந்து ஹுஸைன் என்பவரின் தலைமையில் ஒரு கூட்டத்தினர் அவரைச் சந்திக்க வந்திருந்தனர். அப் போது ஷைக்கவர்கள் வாருங்கள் இந்தத் தோட்டத்தைச் சுற்றி சுவரமைப்போம் என்றார். உடனே அனைவரும் அவருடன் சென்று மலையைப் பெயர்த்துக் கற்களை

எடுத்துக் கொண்டிருந்தோம். அப்போது ஒரு பாறாங்கல் ஒருவர் மீது விழ அவர் ஸ்தலத்திலேயே உயிரிழந்து அவரது உடல் சின்னாபின்னமாகி விட்டது. இதனை மக்கள் ஷைக் அவர்களிடத்தில் முறையிட்டபோது ஷைக் வானத்தின் பக்கம் கையை உயர்த்தினார். உடனே அம்மனிதர் எவ்வித மாற்றமுமின்றி முன்பிருந்தது போல் உயிர் பெற்றெழுந்தார். (ஜாமிஉன் நப்பஹானி 2- 297)

பார்த்தீர்களா?... இந்தச் சூபியாக்கள் எவ்வளவு தந்திரமாக பாமர மக்களின் ஈமானுடன் விளையாடியிருக்கின்றார்கள். அல்லாஹ்வின் தனிப்பட்ட வல்லமைகளில் எதையுமே விட்டு வைக்காது ஆக்கல், அழித்தல் ,காத்தல், உயிர் கொடுத்தல், பிள்ளை கொடுத்தல், உலகில் அதிகாரம் செலுத்தல் போன்ற அல்லாஹ்வின் தனிப்பட்ட வல்லமைகள் அனைத்தையும் தமக்கு இருப்பதாக வாதிக்கும் இப்போலிச் சாமியார்களை ஓட ஓட விரட்டிக் கொல்ல வேண்டும்.

இவர்களால் எத்தனை லட்சோபலட்சம் மக்கள் ஈமானை இழந்து இவர்கள் காலடியில் தவம் கிடந்து நரகச்சீட்டைப் பெற்றுக் கொள்கின்றார்கள் .

<u>கராமத் காட்டுகின்றார்களாம் !!</u>

முதலில் கராமத் எல்லாம் இப்படி இறைவனை மறுத்து நான் தான் அல்லாஹ் என்பதாக வாதிடும் ஷைத்தான்களுக்கு ஏற்படுமா? அப்படியே நடந்தாலும் அது கராமத் அல்ல, ஷைத்தானின் சூழ்ச்சி !!. இது போன்ற சூழ்ச்சிகளை இவர்களென்ன சிலை வைத்து வணங்கும் இந்துசாமிகளும், மடாதிபதிகளும் சன்னியாசிகளும் கூடச் செய்கின்றார்கள் தானே! அப்படியெனில் அவர்களும் இறைநேசச் செல்வர்களோ?.

எனவே கராமத் என்பது அல்லாஹ்வின் கட்டளைகளை எடுத்து நடக்கும் நல்லடியார்களில் சிலருக்கு அல்லாஹ் தன் புறத்திலிருந்து அம்மனிதனின் எவ்வித விருப்பு வெறுப்பின்றி அவரிடம் வெளிப்படுத்தும் சிலவற்றைக் குறிக்கும். இவ்வாறு கராமத் ஏற்படாதவர்கள் கராமத் உள்ளவர்களை விட அல்லாஹ்விடம் நெருங்கியவர்களாகவும் இருக்கலாம். ஏனெனில் நபியவர்களுக்கடுத்து அல்லாஹ்வின் அன்புக்குரியவர்கள் ஸஹாபாக்கள். இவர்களில் அதிகம் பேருக்கு எவ்விதமான கராமத்துகளும் இடம்பெறவில்லை. ஒரு முஃமின் தனக்கு சிலவேளை கராமத் நடந்தாலும் கூட அதை மறைத்து மக்கள் பார்த்துவிடக் கூடாதே எனப்பயந்து ஒரு வேளை ஷைத்தானின் சூழ்ச்சியாக இருக்குமோ, அல்லது அல்லாஹ்வின் சோதனையாகவிருக்குமோ என அஞ்சி அடக்கத்துடன் இருப்பான். இப்படித்தான் உண்மையிலேயே கராமத் கொடுக்கப்பட்ட சில நல்லடியார்கள் கூட வாழ்ந்திருக்கின்றார்கள். இவர்கள் ஒரு வேளை அல்லாஹ் நம்மைச் சோதிப்பதற்காகத்தான் இப்படித் தந்திருக்கின்றானோ என அஞ்சி நடுங்குவார்கள். மற்றவர்கள் அதைப் பார்த்து விட்டால் பிரபலப்படுத்தி விடுவார்களேயென்று பயப்படுவார்கள்.

நபி ஸுலைமான் (அலை) அவர்களுக்கு உலகின் அனைத்தையும் வசப்படுத்தி நினைத்ததை நடத்திக் காட்டும் அற்புதத்தை அல்லாஹ் அவர்களுக்குக் கொடுத்திருந்தான். பல்கீஸ் ராணியின் சிம்மாசனம் ஒரு நொடிப்பொழுதில் தன்னிடத்தில் இருக்கக் கண்ட அவர்கள் என்ன சொன்னார்கள்...

'அவர் சிம்மாசனம் தன் முன்னால் இருப்பதைக் கண்டதும் நிச்சயமாக இது அல்லாஹ் எனக்கருளிய அருளாகும். நான் அவனுக்கு நன்றி செலுத்துகின்றேனா? அல்லது மாறுசெய்கின்றேனா? என என்னைச் சோதிப்பதற்காகவே எனக்கு இதைத் தந்துள்ளான்' என்றார்கள். (ஸூரா அந் நம்ல் 40 ம் வசனம்.)

எனவே அல்லாஹ்வுக்கு அடிபணிந்து நடக்காத அவனுடைய வல்லமையுடன் போட்டிபோடும் இச் சூபிகளிடம் வெளிப்படுவது உண்மையில் ஷைத்தானிய

சேஷ்டைகளே! என்பது தெளிவாகின்றது. எனவே இவர்களின் சதி வலையில் வீழ்ந்து ஈமானை இழந்து விடாமல் குர்ஆன், ஹதீஸின் பக்கம் திரும்பி ஸஹாபாக்களின் வாழ்வு வாழ்ந்து இறை நேசர்களாக மரணிப்போமாக. ஆமீன் ...

## அன்றைய ஸூபித்துவமும் இன்றைய தப்லீக் ஜமாஅத்தும்.

சூபித்துவம் பற்றிய பகுதியில் அவர்களது அடிப்படைக் கொள்கைகள் பற்றி ஆராயும் போது அவர்களது சிந்தனைகள், கொள்கைகள் பற்றியெல்லாம் விரிவாக அலசவேண்டிய அவசியமில்லாத வகையில் -- லாயிலாஹ இல்லல்லாஹ் எனும் கலிமாவுக்கு அவர்கள் கொடுக்கும் அர்த்தத்தை வைத்தே அவர்கள் இஸ்லாத்தை விட்டும் வெளியேறியவர்கள் என்று முடிவு செய்து விட முடியும்..

இப்பிரபஞ்சத்தில் அல்லாஹ்வைத் தவிர வேறெதுவுமே இல்லையென்பதே அவர்கள் கலிமாவுக்குக் கொடுக்கும் அர்த்தமாக உள்ளது என அறிந்தோம். அதே சூபித்துவத்திலே வாழையடி வாழையாக வந்துதித்தவர்களே தப்லீக் ஜமாஅத்தின் பூர்வீக காலம் தொட்டு இன்று வரை பொறுப்பு வகிக்கும் தப்லீக்கின் முக்கியஸ்தர்கள் என்பதுதான் ஆச்சரியமிக்க உண்மை. இதனை ஜீரணிப்பது சற்று கடினம்தான். ஆனால் அதுதான் உண்மை. இந்தியா, பாக்கி ஸ்தான் போன்ற நாடுகளில் தப்லீக்கின் உயர் பொறுப்பில் இருக்கும் மௌலானாக்கள், பெரியார்கள் அனைவரிடத்திலும் இதே சூபித்துவக் கொள்கை இருந்தது - இன்றும் இருக்கின்றது என்பதை ஆதாரப்பூர்வமாக நிரூபிப்பதே இப்பகுதியின் முக்கிய நோக்கம். ஆனால் மூன்று நாள் நாற்பது நாள் என்றெல்லாம் வக்துக் கொடுத்து வெளிக்கிளம்பிச் செல்லும் அப்பாவி மக்களுக்கு இது பற்றியெல்லாம் எதுவும் தெரிவதில்லை. அது பற்றி அவர்கள் அலட்டிக் கொள்வதுமில்லை. சூபித்துவ வாதிகள் எப்படி தம்மிடம் வரும் முரீதீன்களுக்கு பக்தர்களுக்கு தம்மீது முழு நம்பிக்கை வரும்வரை தமது விசக்கருத்துக்கள் எதையும் வெளியிடுவதில்லையோ அவ்வாறே இவர்களும் சாதாரண ஆரம்ப நிலையிலுள்ள தப்லீக் பக்தர்களுக்கு இதுபற்றியெல்லாம் எதுவும் சொல்வதில்லை.

அவர்களுக்குத் தப்லீக்கின் அடிப்படை விதிகளான கலிமா, தொழுகை, இல்முதிக்ரு, இக்ராம் இக்லாஸ், தப்லீக் ஆகியவற்றைப் பற்றி மாத்திரமே பேசப்படும். போதிக்கப்படும். தப்லீக் இயக்கத்தின் மீது மக்களுக்கு அபிமானம் ஏற்பட வேண்டுமென்பதற்காக செய்யப்பட்ட முயற்சியே இது. இந்த வழி தனிலே பல காலம் ஒருவர் பயிற்றுவிக்கப்பட்டதன் பின் ஒரு வருடம் இருவருடம் என்றெல்லாம் ஒருவர் டில்லி மர்க்கஸ், ட்ரை விந் மர்க்கஸூக்கெல்லாம் சென்று வந்து தப்லீக்கின் மௌலானாக்கள், பெரியார்கள் மீது நீக்கமுடியாத ஒரு பிடிப்பு பற்று, அசைக்க முடியாத நம்பிக்கை ஏற்பட்டதன் பின்பே சூபித்துவக் கருத்துக்களைப் படிப்படியாக அவருக்குக் கற்பிக்கும் முயற்சி மேற்கொள்ளப்படும். இதையும் வெறும் கற்பனையாகவோ வாய்ப் பேச்சாகவோ நான் சொல்லவில்லை. ஆதாரப் பூர்வமாக தகுந்த ஆதாரங்களுடன் நிருபித்துக் காட்டவுள்ளேன். குர்ஆன் ஹதீஸ் போதனைகள் எப்படியிருந்தாலும் தனக்கு தன் டில்லி பெரியார் - மௌலானா சொன்னதே சரி என்று பிடிவாதம் பிடிக்கும் அளவுக்கு அங்கு அவர்களுக்கு மூளைச் சலவை இடம் பெறும். சூபித்துவப் போதனைகள் வெளிரங்கத்தில் ஆத்மீக சிந்தனையின் பக்கம் அழைப்பது போல் இவர்கள் தொழுகையின் பக்கம் மக்களை அழைக்கும் இயக்கம் என்று பாமரர்கள் மத்தியில் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்கின்றனர். சந்தர்ப்பம் வரும் போதே தம் சூபித்துவக் கருத்துக்களைப் புகுத்துகின்றனர் .

பொதுவாகக்கூறின் அதிகமான சகோதரர்கள் ஏன் தப்லீக்கை ஆதரிக்கின்றார்கள்?. அதில் வெளிக்கிளம்ப விரும்புகின்றார்கள் என்று ஆராயும்போது இன்றைய பஸாதுகளும் குழப்பங்களும் நிறைந்த இந்த பித்னாவுடைய ஜமானில் குழப்பங்கள் அதிகரித்துள்ள காலகட்டத்தில் வாழும் இச்சகோதரர்கள் இஸ்லாத்தின் மீது தாம் கொண்டுள்ள பற்றின் காரணமாகவும் நபிவழிப்படி நடக்க வேண்டுமென்ற ஆர்வ மேலீட்டாலும் தமக்கு

இஸ்லாமிய வழிகாட்டலை வழங்கக் கூடிய ஒருவரைத் தேட இவர்களின் மனம் விரும்புகின்றது. மேலோட்டமாகத் தேடிப் பார்க்கின்றார்கள். தப்லீக் ஜமாஅத்துத்தான் 'தீன் என்பது அல்லாஹ்வின் கட்டளையும் நபி (ஸல்) அவர்களுடைய வாழ்க்கை வழி முறையுமாகும் இதை பூரா மனித சமூதாயத்துக்கும் கொண்டு போய்ச் சேர்க்கும் பணியில் சொந்த பணத்தை, உடலுழைப்பை, காலத்தைத் தியாகம் செய்து உழைக்கும் ஒரு அமைப்புத்தான் தப்லீக் ஜமாஅத்' என்ற விளம்பரத்தைக் கேட்கின்றார்கள்.

அதனையடுத்து கார்க்கூன்களின் விடாமுயற்சியாலும், தொடர்ச்சியான சந்திப்பாலும் 3 நாட்கள் வெளிக்கிளம்பிச் செல்லச் சம்மதிக்கின்றார்கள். அங்குள்ள சூழல் அவர்களின் மனதுக்கு இதமளிப்பதாக, மனதிலுள்ள கவலை கஷ்டங்களை மறக்க ஒரு நன்மருந்தாக, தொழில் மற்றும் குடும்பச் சுமைகளை விட்டுப் பிரிந்து சுதந்திரமாக நேரத்துக்குத் தொழுது கொண்டு வேளாவேளை சாப்பிட்டுக் கொண்டு பள்ளியுடைய சூழலில் இருக்கும் ஒரு அரிய சந்தர்ப்பம். எவருடைய தொந்தரவுமில்லை. செல்லும் இடமெல்லாம் வரவேற்பு அமோகமாயிருக்கின்றது. சண்டை சச்சரவு பிரச்சினைக்குரிய எந்த விடயங்களிலும் தலையிடுவதில்லை. இப்படியான ஒரு சூழல் தப்லீக்கில் கிடைப்பதால் இதையே எதிர் பார்த்திருந்த அதிக வேலைப்பளுமிக்க வாழ்க்கையால் விரக்தியுற்றிருந்த பாமர சகோதரர்கள் இதை நேசித்து இதன்பால் லயித்து விடுகின்றனர். இதனால் இந்த அமைப்பில் உள்ள மார்க்க முரண்பாடுகளைப் பற்றி அலட்டிக் கொள்ளத் தவறி விடுகின்றனர். இதில் அதிகம் பேர் மார்க்மென்றால் என்னவென்று பெரிதாக அறியாத நிலையிலேயே -- அறிந்து கொள்ளும் நோக்கிலேயே தப்லீக்கில் காலடியெடுத்து வைக்கின்றனர். எனவே இதிலுள்ள குறைகளை அறிவது ஒருபக்கமிருக்க அவைதான் இஸ்லாம் என்று அவர்களுக்கு அறிமுகப்படுத்தப்படுவதால் அப்படியே அவற்றை ஏற்றுக் கொள்கின்றனர். அதன் முக்கியஸ்தர்கள் கூட அடிக்கடி தமது பயான்களில் 'இந்த வேலையில் குறை பிடிக்க முற்படுபவர் வேலையை விட்டும் தூரமாக்கப்படுவார். பின்னர் தீனிலிருந்தே தூரமாக்கப்பட்டு விடுவார் என்று அடிக்கடி எச்சரிப்பதால் பயம் காட்டுவதால் அதிக அப்பாவிப் பாமர மக்கள் இதைப் பற்றி ஆராய்வதற்கே அச்சம் கொண்டு தானும் ஒரு வேளை அவர்கள் சொல்வது போல் தீனை விட்டும் தூரமாகி விடுவோமோ எனப் பயந்து 'தலைவன் எவ்வழியோ தானும் அவ் வழியே' என்ற கோஷத்துடன் நடைபயில ஆரம்பித்து விடுகின்றனர். அதனால் யாரேனும் இதைப்பற்றி இதன் குறைகளைப் பற்றி அவரிடம் எடுத்துச் சொன்னாலும் அதைக் காதில் வாங்கிக் கொள்வதில்லை.

இதனாலேயே இன்று தப்லீக் அமைப்பு பாமர மக்களின் ஹீரோவாகச் செல்வாக்குப் பெற்று பல நாடுகளிலும் வியாபித்துக் காணப்படுகின்றது.

அரபுக்கள் கூட இதற்கு ஆதரவளிப்பது சிலருக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தலாம். அரபுக்கள் என்ன மலக்குகளா? நபிமார்களா? அவர்களும் மனிதர்களே. எம்மை விடவும் மார்க்க அறிவில் மட்டமான நிலையிலுள்ள ஏன் பாத்திஹா ஸூராவே ஒழுங்காக ஓதத் தெரியாத அரபுகளும் நிறையவே இருக்கின்றனர். அரபுக்களில் ஒரு சில சகோதரர்கள் இதில் மும்முரமாக ஈடுபடுவது உண்மை தான். அதனால் அது மார்க்க அங்கீகாரம் பெற்றுவிடுமா? அப்படியானால் அரபிகளுக்கு எதற்காக அல்லாஹ் நபியை அனுப்ப வேண்டும்.??? அவர்கள்தான் மேதைகளாச்சே...

ஆக தப்லீக் அமைப்பு இன்று அகலமாக வளர்ந்துள்ளது, ஆனால் ஆழமாக வளர வில்லையென்பதே உண்மை.

இன்று தப்லீக்கில் ஈடுபாடு கொண்டுள்ள எம் சகோதரர்களுக்கு இக்கருத்துக்கள் ஆச்சரியத்தையும் ஆத்திரத்தையும் தரலாம். இதனையெல்லாம் ஏற்றுக் கொள்ள மறுக்கலாம். ஆனால் உண்மையை அறிய விரும்புபவர் நடுநிலையாக இதில் கூறுப்படும் கருத்துக்களை தப்லீக் அமைப்புடன் ஒப்பீடு செய்து ஆராயும் போது இன்ஷா அல்லாஹ் உண்மை புலப்படும். உண்மைக்கு உறக்கம் கிடையாது. ஆனால் அதை விரும்பாதவர்க்கு அது எளிதில்

புலப்படாது. அதற்காகத்தான் தப்லீக் ஜமாஅத்தின் வெளிப்படையான, ரகசியமான அனைத்து நடவடிக்கைகளையும் -- அவற்றில் குர்ஆன் ஹதீதுக்கு முரண்பாடு எந்த விதத்தில் உள்ளன என்பதையும் ஆதாரப்பூர்வமாக எடுத்துக் காட்டுகின்றேன்.

இன்னும் ஒருசிலர் 'தப்லீக்கில் குறைபாடு இருந்தால் இருந்து விட்டுப் போகட்டும். எதில்தான் குறைபாடு இல்லை. குறைகளை விட்டு விட்டு நிறைய நல்ல விடயங்கள் இருக்கின்றன. அவற்றை எடுத்து நடப்போமே' என்று நடுநிலைவாதம் பேசுகின்றனர். இவ்வாதமும் அர்த்தமற்ற வாதமே. உலகிலுள்ள எந்த விடயத்தை எடுத்துக் கொண்டாலும் அதிலே அவற்றில் சமூகத்துக்கு நன்மை தீமை இரண்டுமே இருக்கத்தான் செய்கின்றன. மது பானத்தில் கூட நன்மையும் இருப்பதாகவே அல்குர்ஆன் சொல்கின்றது.

'(நபியே நீங்கள் சொல்லுங்கள் அதிலே (சாராயத்தில்) அதிகம் தீங்கிருக்கின்றது, அத்துடன் அதில் மக்களுக்கு நன் மையுமிருக்கின்றது. அதனால் ஏற்படும் தீமை அதன் நன்மையை விட மிக அதிகமாகும்' எனக் கூறுகின்றது. (ஸூரத்துல் பகரா 219).

எனவே நன்மை இருக்கின்றதென்பதால் ஒரு விடயத்தை நல்லதென நியாயப்படுத்த முடியாது. அதனால் ஏற்படும் விபரீதம் தீமை எந்தளவுக்குப் பாதிப்பை ஏற்படுத்தும் என்பதையும் தீர ஆராய்ந்தே முடிவெடுக்க வேண்டும். அந்த வகையில் நான் சூபிகளிடம் இருப்பதாகக் கூறிய இஸ்லாத்தைத் தகர்த்தெறியும் ஷிர்க்கான - இஸ்லாமிய அகீதாவைக் குழிதோண்டிப் புதைக்கும் குப்ரான விடயங்கள் அனைத்துமே இதன் ஸ்தாபகர்களான ட்ரைவிந் மர்கஸ் மௌலானாக்களிடமும், டில்லிப் பெரியார்களிடமும் இருக்கின்றன. அதையும் ஆதாரப் பூர்வமாக நிரூபித்துக் காட்டவுள்ளேன்.

அதே போன்று ஆறு நம்பருடைய வாழ்க்கை பூரா மக்களிடமும் வரவேண்டுமென்பதில் ஒரே குறியாக இருக்கும் இப்பெரியார்கள் அந்த ஆறு நம்பர்களையும் மாத்திரம் எடுத்து ஏனைய இஸ்லாமிய விடயங்களை எவ்வளவு சாதுர்யமாகப் புறந்தள்ளுகின்றனர் என்பதையும், ஆறு நம்பரிலுள்ள விடயங்கள் வெளிப்படையில் நல்லவைகளாகத் தோன்றினாலும் அதற்கு அவர்கள் கொடுக்கும் வியாக்கியானம் எந்தளவு குறுகிய வட்டத்தில் உள்ளது என்பதையும் முடிந்தளவு ஆதாரங்களுடன் தெளிவுபடுத்தவுள்ளேன். அதுமட்டுமின்றி சூபிகளின் கொள்கைகளை அப்படியே அச்சொட்டாகப் பின்பற்றும் இவர்களிடம் இபாதத்களாகக் கருதப்பட்டு வரும் ஏராளமான மார்க்க விரோத விடயங்களையும் முடிந்தளவு சுருக்கமாகத் தெளிவுபடுத்த விரைகின்றேன்.

தப்லீக் சகோதரர்கள் அனைவரினதும் ஒருமித்த வாதம் என்ன வென்றால் சில வழி கெட்ட கூட்டத்தினர் இந்த நபிமார்கள் செய்து வந்த மகத்தான வேலையைப் பற்றி இல்லாதது பொல்லாததையெல்லாம் சொல்லுவார்கள். அவையெல்லாமே அவர்களின் பொறாமையின் வெளிப்பாடு. இந்த ஹக்கான வேலையின் பரக்கத்தால் எத்தனை லட்சம் பேர் நேர்வழி பெற்றிருக்கின்றார்கள். குடியும் போதையுமாக இருந்த எத்தனை பேர் நல்ல மனிதர்களா கியிருக்கின்றார்கள். ஒரு கையில் வெட்டரிவாளும் மறுகையில் சாராய போத்தலுமாக அலைந்த ஆயிரக் கணக்காணோர் இன்று ஒரு கையில் தஸ்பீஹ் மணியும் மறுகையில் மிஸ்வாக் குச்சியுடனும் காட்சி தருகின்றார்கள். எத்தனை ஆயிரம் பூட்டிக்கிடந்த பள்ளிகள் உயிர்ப்பிக்கப்பட்டு இன்று இபாதத்களால் ஜொலிக்கின்றன. முஸ்லிம் பெண்களிடத்தில் பர்தாவுடைய வாழ்வு வந்திருக்கின்றது. கலிமாச் சொல்வதற்கே தெரியாத எத்தனையோ பேர் இன்று திருந்தி இஸ்லாமிய வாழ்வு வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள். இது அல்லாஹ்வால் ஏற்றுக் கொள்ளப்பட்ட இயக்கம் என்பதற்கு இதன் தீவிர வளர்ச்சியே சான்றென்று அடுக்கிக்கொண்டே செல்வார்கள்.

உண்மையில் இவையெல்லாம் நல்ல விடயங்கள் என்பதிலும் தப்லீக் இயக்கத்தின் முயற்சியே இதற்கு முக்கிய பங்கு என்பதிலும் சந்தேகமேயில்லை. ஆனால் இந்த நன்மைகளைக் கூட விஞ்சிவிடக் கூடிய இஸ்லாமிய கோட்பாட்டுக்கு எதிரான நச்சுக்

கருத்துள்ள கொள்கைகள் ஒரு பக்கமும், இஸ்லாத்தைக் குறுகிய வட்டத்துக்குள்ளாக்கி அது கூறிய பலவற்றைக் கத்தரித்து விட்டு அது கூறாத நிறைய விடயங்களை இஸ்லாமியச் சாயம் பூசி விளம்பரப்படுத்தும் போக்கும் இவர்களிடம் காணப்படுவதனாலேயே இதனை விமர்ச்சிக்கும் நிலை ஏற் படுகின்றது. இது பற்றி பின்னர் விபரமாகச் கூறவுள்ளேன். அதே போன்று ஒரு இயக்கத்திற்குக் கிடைக்கும் தீவிர வளர்ச்சியும் பெரும்பான்மை மக்கள் ஆதரவும் சமூக வரவேற்பும் அது அல்லாஹ்வால் ஏற்றுக் கொள்ளப்பட்ட இயக்கம் என்பதற்கு ஒருபோன்றும் சான்றாக ஆகாது. பத்ர் யுத்தத்தை எடுத்துக் கொள்ளுங்கள். நபிகளாருடன் 313 பேர். காபிர்கள் 1000 பேர். மூஸா நபியுடன் ஒரு சிறு கூட்டம். பிர்அவ்னிடம் ஒரு பெரிய பட்டாளம். எண்ணிக்கையை வைத்துச் சொல்வதென்றால் குரைஷிகளும் பிர்அவ்னும் சத்தியத்தில் இருந்ததாகவே சொல்ல வேண்டும். இன்றும் கூட உலக மக்கள் தொகையில் முஸ்லிம்களின் எண்ணிக்கையை விட கிருஸ்தவர்களின் எண்ணிக்கையே அதிகம். உலகச் செல்வத்தின் பெரும்பகுதி அவர்களிடம் இருக்க அனேக நாடுகள் அவர்களை ஆதரித்து அவர்களின் உதவிக்காகக் கையேந்திக் காத்திருக்கின்றன. எனவே எண்ணிக்கையை வைத்தே சத்தியமா அசத்தியமா? என்று தீர்மானிப்பதாயின் இஸ்லாத்தை விடக் கிருஸ்தவ மதமே மிக உண்மையானது. அல்லாஹ்வின் அருளைப் பெற்றது என்று சொல்ல வேண்டும். அப்படிச் சொல்ல முடியுமா? என்று தப்லீக் சகோதரர்கள் சிந்திப்பார்களாக.

எனக்கும் தப்லீக் ஜமாஅத்துக்கும் கூட ஒரு காலத்தில் நெருங்கிய தொடர்பு இருந்தது. அப்போது தப்லீக்கின் பெரியார்கள் மார்க்க விரோதக் கருத்துக்கள் சிலவற்றைக் கூறும் வேளை அதனை நானும் அப்படியே ஏற்றுக் கொள்ளும் நிலையில்தான் இருந்தேன். தப்லீக் மீதிருந்த அபார பக்தியும் அபிமானமும் அதிலுள்ள குறைகளைக் கண்டுகொள்ளக் கூடிய மனோநிலையை என்னில் இல்லாமலாக்கி விட்டன என்றே கூற வேண்டும். இதே போன்று இதை வாசிக்கும் தப்லீக் அபிமானிகளுக்கும் இந்த மனோபாவம் இருக்கும் என்றே நம்புகின்றேன். இருப்பினும் உண்மை கசத்தாலும் அதை ஏற்றே ஆகவேண்டியிருக்கின்றது. நபிவழிக்கு மாற்றமாக யாரின் செயல் இருப்பினும் அதனைப் புறக்கணித்தே ஆக வேண்டியுள்ளது. அது ஒரு முஸ்லிமின் இஸ்லாமிய, மற்றும் தார்மீகக் கடமையாகும். எனவே குர்ஆன் ஹதீஸின் ஆதாரத்துடன் தப்லீக்கில் தவறு இருப்பதாக நிரூபித்தால் அதனை ஏற்றுக்கொள்வேன் என்ற உறுதியுடன் இதனை வாசிக்க ஆரம்பியுங்கள். இது தவிர தனிப்பட்ட வகையில் எனக்கு தப்லீக்குடனோ தப்லீக் சகோதரர்களுடனோ எவ்வித காழ்ப்புணர்ச்சியோ கசப்புணர்வோ கிடையாது. இன்று வரைக்கும் நான் அவர்களுடன் சகோதரத்துவ வாஞ்சையுடனேயே பழகி வருகின்றேன். ஒரு முஸ்லிம் தான் விரும்புவதை தனது சக சகோதரனுக்கும் கிடைக்க வேண்டுமென விரும்ப வேண்டுமென்ற நபிமொழிக்கேற்ப இதிலுள்ள விடயங்களை தப்லீக் சகோதரர்கள் படித்ததன் பின் அது பற்றிச் சிந்திக்கத் தலைப்பட வேண்டு மென்பதே எனது அவா.

அல்லாஹ்வின் மீது சத்தியமாகச் சொல்கின்றேன். இன்றும் கூட குர்ஆனுக்கும் நபிவழிக்கும் பல கோணங்களில் முரண்படுகின்றது என்ற ஒரே காரணத்துக்காகவே நான் தப்லீக்கை விட்டு ஒதுங்கியுள்ளேன். இன்றும் கூட டில்லி, ட்ரைவிந் மர்கஸ் தொடர்புகளைக் கத்தரித்து விட்டு அல்குர்ஆன் ஹதீஸின் அடிப்படையில் செயற்படுவது என்ற நிபந்தனைக்கு கார்க்கூன்கள் சம்மதித்தால் இன்றிலிருந்தே நான் என் ஆயுளைக் கொடுத்து தப்லீக்கில் இணைந்து செயற்படக் காத்திருக்கின்றேன் என்று அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டுக் கூறுகின்றேன். நான் மட்டுமல்ல குர்ஆன் ஹதீஸ் வழியில் நடக்கும் அனைத்து சகோதரர்களும் இதற்கு சம்மதிப்பார்கள் என்றே நம்புகின்றேன். நாம் அனைவருமே நிச்சயம் என்றோ ஒரு நாள் மரணிக்கக் கூடியவர்கள். அதன் பின் கப்ரில் புதைக்கப்பட்டு விடுவோம். அங்கே எமக்கு மீண்டும் உயிரூட்டப்பட்டு மலக்குகள் விசாரிப்பார்கள். நபி (ஸல்) அவர்களுடைய உருவத்தைக் காட்டப்பட்டு இந்த மனிதரைப்பற்றி நீ என்ன சொல்கின்றாய்? என்பார்கள். அப்போது நபிவழியில் நடந்தவர்களே சரியான பதிலைக் கூற முடியும். நபிவழியைப் புறக்கணித்து நடந்தவர்களின் நிலை அந்தோ பரிதாபம்!! நாளை மறுமையில் அல்லாஹ் நம்மனைவரையும் மஹ்ஷர் வெளியில் ஒன்று கூட்டுவான் விசாரணை செய்வான்.

நபிவழிப்படி செயற்பட்டிருந்தால்தானே அல்லாஹ்வின் விசாரணையிலிருந்து வெற்றி பெற இயலும். நபியவர்களை நாம் மறுமையில் கவ்தர் எனும் ஆற்றின் பக்கம் சந்திக்க இருக்கின்றோம். அவ்வேளை நபிவழி நடந்தவர்களுக்கே நீர் புகட்டப்படும். அதற்கு மாற்றமாக நடந்தவர்களை நபியவர்களே மலக்குகளிடம் கூறி 'இவர்களைத் துரத்துங்கள் துரத்துங்கள் என்று விரட்டுவார்கள் என ஹதீஸில் உள்ளதே.... நமக்கு இந்த நிலை ஏற்பட்டால் நம் கதி என்ன? என்பது பற்றிய சிந்தனையுடன் தொடர்ந்து வாசியுங்கள். அல்லாஹ்வின் நல்லடியார்களாக நாம் அனைவருமே வாழ்ந்து மரணிக்க வேண்டுமென்று அவனைப் பிரார்த்திக்கின்றேன்.

## தப்லீக் ஜமாஅத்தின் தோற்றம்.

இந்தியாவின் வடபகுதியிலுள்ள தேவ்பந்த் எனும் ஊரிலுள்ள மேவாத் எனும் கிராமத்தைச் சேர்ந்த முஹம்மத் இல்யாஸ் காந்திஹ்லவி தேவ்பந்தி (ரஹ்) என்பவர்களால் ஆரம்பிக்கப்பட்டு - அறிமுகப்படுத்தப்பட்ட ஒரு அமைப்பே தப்லீக் ஜமாஅத் எனும் அமைப்பாகும். இந்த தப்லீக் அமைப்பின் கேந்திரஸ்தலம் இந்தியாவின் தலைநகரான டில்லியில் அமைந்துள்ளது. தேவ்பந்த் எனப்படுவது அங்குள்ள ஹனபி மத்ஹப் போதிக்கும் மத்ரஸாக்களில் மிகப் பழைமை மிக்கதும், பெரியதுமாகும். மத்ரஸத்து தாருல் உலூம் என்பது இதன் பெயராகும். முஹம்மத் காஸிம் நானூத்துவியின் மேற்பார்வையில்; நபி (ஸல்) அவர்களே இதனை ஆரம்பித்ததாகவும், இந்த மத்ரஸாவுக்கு அடிக்கடி முஹம்மது நபியவர்கள் தமது கலீபாத் தோழர்களுடன் வருகை தந்து மத்ரஸாவின் வரவுசெலவுக் கணக்குகளைச் சரிபார்ப்பதாகவும் தப்லீக் முக்கியஸ்தர்கள் வாதிடுகின்றனர். ஆதாரம்: ( தோ ரூஹானிய்யத் அரபுமொழி பெயர்ப்பு ப:434)

இந்த மத்ரஸாவில் இஸ்லாமிய அடிப்படைக் கொள்கை விளக்கம் (அகீதா) இஸ்லாத்துக்குப் பல்வேறு கோணங்களில் முரண்படும் மாத்துர்திய்யா பிரிவினரின் கொள்கையின்படி போதிக்கப்படுகின்றது. மார்க்கச் சட்டங்கள் ஹனபி மத்ஹபின் ஊடாகக் கற்பிக்கப்படுகின்றன. இந்த மத்ஹபு நபிவழிக்கு மாற்றமான ஆயிரக் கணக்கான சட்டங்களைப் போதிக்கின்றதென்பது தனி விடயம். அப்படியானால் அல்லாஹ் கூறிய கொள்கைக்கு மாற்றமான நம்பிக்கைகளும், நபியவர்களின் போதனைகளுக்கு மாற்றமான சட்டங்களும் போதிக்கப்படும் மத்ரஸா ஒன்றை எப்படி நபியவர்களே தொடங்கி வைக்க முடியும்? அடிக்கடி வருகை தந்து கணக்குகளைச் சரிபார்க்க முடியும்? அவர்களுக்கே வெளிச்சம் இப்படி நிகழ்வது சாத்தியமா? என்பது தனி விடயம்.

இது ஒருபக்கமிருக்க இந்த தப்லீக் பெரியார்கள் அனைவருமே ஜிஸ்த்திய்யா தரீக்காவின் ஷைக்மார்கள் - தர்ம கர்த்தாக்களாவார்கள் என்பதுதான் ஆச்சரியமான விடயம். இந்தத் தரீக்காவைச் சேர்ந்தவர்கள்; ஹாஜா முஈனுத்தீன் ஜிஸ்தி அவர்களைத் தமது ஆத்மீக வழிகாட்டியாக ஏற்றுக் கொண்டவர்கள்.

இவர்களிடம் 'ஜிஸ்திய்யா தரீக்காவின் ஷைக்மாரின் வரலாறுகள்' எனும் பெயரில் ஒரு புத்தகம் உண்டு. இதில் அந்த தரீக்காவின் முக்கிய ஷைக்மார்களின் வாழ்க்கைத் தொகுப்பு உள்ளடக்கப்பட்டிருக்கின்றது. இதில் முதலாவது இடத்தில் நபி (ஸல்) அவர்களுடைய பெயரை இடம்பெறச் செய்திருக்கின்றார்கள். என்னவோ நபியவர்களே ஜிஸ்த்திய்யாத் தரீக்காவை ஆரம்பித்து அதன் முதலாவது ஷைக்காக இருந்து நடத்தியது போன்ற ஒரு பிரமையைப் பாமரர்களுக்குப் போதிப்பதற்காக இவ்வாறு செய்துள்ளார்கள். அடுத்து வரும் ஜிஸ்த்தியாத் தரீக்காவின் ஷைக்மார்களாக அபூபக்ர் ,உமர், உதுமான், அலி ரலியல்லாஹு-அன்ஹும் அவர்களது பெயர்களை இடம்பெறச் செய்து இஸ்லாத்தின் வரலாறே ஜிஸ்திய்யா தரீக்காவிலிருந்தே தோற்றம்பெற்றது போன்ற ஒரு மாயையைத் தோற்றுவிக்கின்றார்கள்.

அது மட்டுமின்றி நபியவர்கள் தமது மரணத்தில் கப்ருடைய வாழ்க்கையில் இருந்து கொண்டிருக்கின்றார்கள். மரணித்தவர்கள் திரும்ப மறுமையில் தான் எழுப்பப்படுவார்கள் என்பது இஸ்லாமியப் போதனை. அவர்கள் சொர்க்கவாசிகளாயின் அங்குள்ள இன்பங்களைக் கண்ணுற்றதும் உலகிற்கு வரவே விரும்ப மாட்டார்கள். உயிர்த்தியாகம் செய்த ஷஹீத் மாத்திரம் மீண்டும் உலகுக்கு வந்து 10 தடவைகள் போரில் கொல்லப்பட வேண்டுமென விரும்புவார் என்பது நபிமொழி. (புகாரி 2606 முஸ்லிம் 3488)

இதற்கு மாற்றமாக மரணத்தின் பின்னும் ஒருவர் உலகிற்க்கு மீண்டு பல்வேறு செயற்பாடுகளைச் செய்ய முடியுமென்ற வழிகெட்ட சூபிகள் கூறும் இந்துக் கொள்கையினையே இவர்கள் கொண்டிருக்கின்றனர். நபியவர்கள் தேவ்பந்து மத்ரஸாவின் கணக்கு வழக்குகளைச் சரிசெய்யத் தோழர்களுடன் அடிக்கடி வருவதாக இவர்கள் கூறுவதிலிருந்து இதனை விளங்கிக் கொள்ளலாம். தப்லீக் ஜமாஅத் சூபித்துவம் பிரசவித்த குழந்தை என்பதற்கு இந்த ஒரு ஆதாரம் மாத்திரமே போதும்.

இல்யாஸ் மௌலானா (ரஹ்) அவர்களைப்பற்றிச் சொல்வதானால் இவர்கள் ஹனபி மத்ஹபைச் சேர்ந்தவர்கள். சூபித்துவப் பாதையில் தன்னை முன்னர் ஈடுபடுத்திக் கொண்டவர்கள். மார்க்க அறிவில் போதிய தேர்ச்சி பெற்றிருக்காவிட்டாலும் இஸ்லாத்தைப் பரப்ப வேண்டுமென்ற ஆர்வம் அவர்களிடம் மேலோங்கியிருந்தது. அதாவது அவர் சார்ந்திருந்த, சரிகண்டிருந்த சூபித்துவ தரீக்காவின் பக்கம் மக்களை ஒன்று சேர்த்து நேர் வழிப்படுத்த வேண்டுமென்ற ஆதங்கத்துடன் இருந்தார்கள். ரஸீத் அஹ்மத் கான்கோஹி, அஷரப் அலி தானவி போன்ற ஷைக்மார்களிடமும் பைஅத் - குருஞான தீட்சை பெற்றுக் கொண்டவராயிருந்தார்கள். (நள்ரத் அல் ஆபிரா ப: 7,8)

குருமார்களிடம் சென்று ஞான தீட்சை - பைஅத் செய்வது இஸ்லாத்துக்கு முரனான விடயமென்பது இங்கு குறிப்பிட த்தக்கது.

தனது ஊரான மேவாத்தியிலுள்ள மக்கள் இஸ்லாத்தை விட்டும் தூரமான நிலையில் -- விக்ரக வழிபாடு நடத்தும் இந்துக்களின் கலாச்சாரத்தை முற்றிலும் தழுவிய நிலையிலே, எவ்வித வணக்க வழிபாடுகளோ இபாதத்களோ இன்றி வயலும் வாழ்வுமாக இருந்த அந்த அறியாமைக் கூட்டத்தைக் கண்டு இவர்களை நேர்வழிப் படுத்த எண்ணிய ஷைக் அவர்கள் தனது குருமார்களிடம் இது பற்றிப் பேசி தனது திட்டத்தைத் தெரிவித்தபோது அவர்களும் அதற்குச் சம்மதிக்கவே இவர்கள் தமது இந்த அமைப்பைத் தொடங்கி தொழுகையின் பக்கம் மக்களை அழைக்கும் இயக்கமென அதை அறிமுகப்படுத்தினார்கள். (நள்ரத் அல் ஆபிரா ப: 7,8).

இங்கு குறிப்பிடப்பட வேண்டிய விடயம் யாதெனில் ஷைக் அவர்களின் இஸ்லாமியப் பற்றும், மக்களை நல்வழிப்படுத்த அவர்கள் மேற்கொண்ட முயற்சிகள் , பட்ட சிரமங்கள் அனைத்தும் பாராட்டத்தக்கதே. ஆனால் அவர்கள் எதன் பக்கம் மக்களை அழைத்தார்கள் என்பதே கேள்வி?. சூபித்துவத்தைப் பற்றியும் அதன் கொள்கைகள் கோட்பாடுகள் பற்றியும் ஏற்கனவே உங்களுக்குக் கூறியிருக்கின்றேன். அந்த தரீக்காக்களின்; பக்கம்தான் மக்களை அழைத்தார்கள். அதாவது அன்று அவர்களுக்குத் தெரிந்த இஸ்லாம் அதுதான். இதற்காக அவர்களைக் குறைகூறவும் முடியாது. காரணம் அவர்கள் வாழ்ந்த காலகட்டத்தில் இந்திய முஸ்லிம்கள் மத்தியில் இஸ்லாம் இப்படித்தான் அறிமுகப்படுத்தப்பட்டிருந்தது. இஸ்லாம், குர்ஆன் ஹதீஸின் விளக்கங்களெல்லாம் ஆலிம்களுக்குக் கூடத் தெரிந்திருக்காத காலமது. மத்ஹபு நூல்களை மார்க்க ஞானமெனவும், சூபித்துவக் கருத்துக்களை மெஞ்ஞானமெனவும் நம்பி பாமர முஸ்லிம்கள் வாழ்ந்து கொண்டிருந்த காலம். குர்ஆன் ஹதீஸ் போதனைப்படிதான் மக்கள் வாழவேண்டுமென ஆங்காங்கே ஓரிரு உலமாக்கள் பிரச்சாரம் செய்தாலும் அவர்களெல்லாம் குழப்பவாதிகள், வஹாபிகள் என்று பட்டஞ் சூட்டப்பட்டு சமூகத்திலிருந்தே ஒதிக்கி வைக்கப்பட்ட காலம். எனவே ஷைக் இல்யாஸ் (ரஹ்) அவர்களிடமும் இஸ்லாத்தின் அகீதா அறிவுகள் அதன் தூய வடிவில் சென்றடையவில்லை.

அவர்களிடம் இஸ்லாமியப் பிரச்சாரம் பற்றிய அவா ஓங்கியிருந்த போதும் கூட அதனைச் செயற்படுத்துவதற்காக அவர் கள் தெரிவு செய்த வழிமுறை சூபித்துவ வழிமுறையாகவே இருந்தது. அவர்களும் கூட சூபித்துவ தரீக்காவின் ஷைக்மார்களிடம் குருதீட்சை பெற்றிருந்தார்கள். அவர்களுக்குப் பின் வந்த தப்லீக்கின் முக்கியஸ்த்தர்களும் அதே ஞான வழியில் நடை பயில்பவர்களாகவே இருந்தார்கள்.

எனவே சுருங்கக் சொல்வதானால் ஒரு இயக்கத்தின் ஸ்தாபகர் தன்னகத்தே கொண்டிருந்த நற்குணங்கள், பக்தி, இஸ்லாமியப் பிரச்சாரத்தின் மீதிருந்த ஈடுபாடு போன்வற்றைக் கொண்டு அவரது இயக்கத்திற்கும் நல்ல இயக்கம் என்று சான்று வழங்கிட முடியாது. உதாரணமாக நூஹ் நபி லூத் நபி ஆகியோர் நல்லடியார்கள் என்றபடியால் அவர்களின் மனைவி மக்களும் நல்லவர்களென வாதிடுவது எப்படி அபத்தமானதோ அது போன்று தான் இதுவும். நபியவர்கள் இஸ்லாத்தை விட்டும் வெளியேறிய கூட்டமெனப் பிரகடனம் செய்த கவாரிஜ்களைப் பாருங்கள். ஸஹாபாக்களையே மிஞ்சி விடுமளவுக்கு அதிக இபாதத்தாளிகளாக இருந்தார்கள். குணசீலர்களாயிருந்தார்கள். இதை வைத்து அவர்கள் நல்லவர்கள் என்று சொல்லிட முடியுமா? எனவே ஒரு இயக்கத்தை இஸ்லாமிய இயக்கமென்று சொல்வதானால் அது இஸ்லாத்தின் போதனைகளுக்கு எந்தளவுக்கு ஒத்துப் போகின்றது, எந்தளவுக்கு முரண்படுகின்றது என்பதை எடை போட்டுப் பார்த்தே முடிவெடுக்க வேண்டும். எனவே தப்லீக் இயக்கம் உருவாக்கியுள்ள அடிப்படைகள் சட்ட வரையறைகள் கொள்கைகள் பற்றியெல்லாம் சற்று விரிவாக விளக்க வேண்டியது அவசியம். எனவே தப்லீக் சகோதரர்கள் தயவு செய்து பொறுமையுடன் பின்வரும் விடயங்களையும் வாசிக்க வேண்மென்பதே எனது எதிர்பார்ப்பும் வேண்டுதலுமாகும்.

## தப்லீக்கின் அடிப்படை அம்சங்கள் (ஆறு நம்பர்)

தப்லீக் ஜமாஅத்தின் அடிப்படை அம்சங்களில் ஒன்றாக அவர்கள் ஆறு விடயங்களை அமைத்திருக்கின்றார்கள். ஆறு நம்பருடைய வாழ்க்கை வாழ வேண்டும் என்ற பிரச்சாரத்தையும் முன்வைக்கின்றனர். இல்யாஸ் (ரஹ்) அவர்களே இந்த ஆறு நம்பர்களை வகுத்து அறிமுகப்படுத்தியிருந்தாலும் கூட அவர்கள் அடிநிலை மக்கள் தெளிவு பெறுவதற்காகவே இவற்றை முன் வைத்தார்களேயன்றி இவ்வளவும் தான் இஸ்லாம் என்று ஒரு போதும் அவர்கள் கூறவில்லை. மாறாக ஏனைய மார்க்க விடயங்களையும் தெரிந்து வைத்திருக்க முயற்சிக்க வேண்டும் என்றே ஆர்வப்படுத்தியுள்ளார்கள். ஆனால் அதன் பின் வந்த முக்கியஸ்தர்கள் அளவுக்கு மீறிய குருபக்தி காரணமாக அந்த ஆறு விடயங்களும் தான் இஸ்லாத்தின் அடிப்படை அவையல்லாத அனைத்தும் இஸ்லாத்துக்கு அப்பாற்பட்டவை என்ற எண்ணம் ஏற்படும் அளவுக்கு ஏனைய மார்க்க விடயங்கள் அனைத்தையுமே புறக்கணித்து புறந்தள்ளிவிட்டு இவற்றுக்கு முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பித்து விட்டார்கள். அது மட்டுமின்றி இந்த ஆறு நம்பரிலுள்ள மார்க்க அம்சங்களுக்கு விரிவுரையோ விளக்கமோ அவர்களது தஃலீம் நூல்களிலிருந்து மாத்திரம்தான் பெறப்பட வேண்டுமென்ற போதனையையும் மேல் மட்டத்திலிருந்து அடிமட்டம் வரை ஒரு வகை ரகசியம் கலந்த பிரச்சாரமாக முன்வைக்கப்படுவது மறுக்க முடியாத உண்மையாகும். ஆனால் ஆரம்ப நிலை தப்லீக் சகோதரர்களுக்குப் போதனை செய்யப்படும் போது 'சில விடயங்கள் இருக்கின்றன அவற்றின் பேரில் தொடர்ந்து முயற்சி செய்தால் நாமும் முழு மனித சமூதாயமும் தீனின் படி வாழ்வது இலகுவாகி விடும் ' என்று சொல்லியே ஆரம்பிப்பார்கள். ஆறு நம்பர் என்பது முழுமையான தீன் அல்ல. தீன் வருவதற்கான வழிதான் என்றும் சொல்லிக் கொள்வார்கள். ஆனால் காலப்போக்கில் 40 நாள் 4 மாதம் 1 வருடம் என்றெல்லாம் வெளிக்கிளம்பி பெரியார்களைச் சந்தித்ததன் பின்னரே - அங்கு மேற்கொள்ளப்படும் மூளைச்சலவையின் பின்னரே ஆறு நம்பரை விட்டு வெளியேறினால் தீனை விட்டே வெளியேறி விட்டதாக ஆகி விடும் என்ற முடிவுக்கு வந்து விடுகின்றார்கள். இதனைப் பல்வேறு நிகழ்வுகளையும் சம்பவங்களையும் மேற்கோள் காட்டிப் பின்னர் விளக்குகின்றேன் .

எனவே இந்த ஆறு நம்பருக்குள் மார்க்கத்தின் ஒரு பகுதி மாத்திரம் உள்வாங்கப்பட்டு விட்டு ஏனையவை புறக்கணிக்கப்படுகின்றன என்பது ஒரு புறமிருக்க இந்த ஆறு நம்பரிலுள்ள மார்க்க விடயங்களுக்கே இவர்கள் எப்படித் தவறான விளக்கம் கொடுக்கின்றார்கள் என்பதையும் சற்று விரிவாகப் பார்க்க வேண்டியுள்ளது.

தப்லீக் ஜமாஅத்தினரின் ஆறு நம்பர் என்று சொல்லப்படும் ஆறு அடிப்படை அம்சங்களும் வருமாறு:

கலிமா -லாயிலாஹ இல்லல்லாஹ்.
தொழுகையை நிலை நாட்டல்.
இல்மு - திக்ரு.
இக்ராம் -(பிற சகோதரர்களைக் கண்ணியப்படுத்தல்)
இக்லாஸ் - (மனத்தூய்மை,)
தப்லீக் - (வக்தில் வெளிக்கிளம்பிச் செல்லல்)

இந்த ஆறு விடயங்களுக்கும் நோக்கம் சிறப்பு, முயற்சி என்று சில விடயங்களை இணைத்து அலங்கரித்துள்ளனர். இப்போது இவை ஒவ்வொன்றையும் சற்று விரிவாக ஆராய்வோம்.

முதலாம் நம்பர் 'கலிமா'

ஆறு நம்பரில் முதலாவது விடயம் கலிமா 'லாயிலாஹ இல்லல்லாஹ்' இதன் நோக்கம் பற்றி இவர்கள் சொல்லும் போது.... 'வஸ்த்துக்களுடைய நம்பிக்கையை உள்ளத்திலிருந்து அகற்றி வஸ்த்துக்களின் இறைவனான அல்லாஹ்வின் நம்பிக்கையை இதயத்தில் பதிப்பதுதான் இதன் நோக்கம் என்கின்றனர். அதாவது நம்மைப் படைத்தது அவனே, நமக்கு உணவளிப்பது அவனே, செல்வத்தைத் தருவது வறுமையைத் தருவது நோயை விடுவது, குணப்படுத்துவது கஷ்டத்தை நீக்குவது, உயர்த்துவது தாழ்த்துவது அனைத்தும் அவன்தான் என்ற நம்பிக்கை இருக்க வேண்டும் என்று கலிமாவுக்கு விளக்கம் கூறுகின்றனர்.

ஆனால் நபி (ஸல்) அவர்கள் குரைஷிக் காபிர்கள் மத்தியில் அன்று இந்தக் கலிமாவை முன்வைத்த போது அதன் நோக்கம் பற்றி என்ன கூறினார்கள் அதற்கு எப்படி விளக்கமளித்தார்கள் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. குரைஷிக் காபிர்கள் அன்று கல்லையும் மண்ணையும் விக்ரகங்களையும் தான் வணங்கிக் கொண்டிருந்தார்கள். ஆனால் அல்லாஹ்வைப் பற்றிய இறை நம்பிக்கை அவர்களிடம் எப்படி இருந்தது என்பது பற்றி அல்லாஹ் இவ்வாறு கூறுகின்றான்...

நபியே பூமியும் அதிலுள்ளவைகளும் யாருக்குச்சொந்தமென்று (அவர்களிடம் கேளுங்கள்). அல்லாஹ்வுக்குரியவையே என்று அவர்கள் பதிலளிப்பார்கள். அப்படியாயின் அவர்கள் சிந்திக்க வேண்டாமா? ஏழு வானங்களின் அதிபதியும் பிரமாண்டமான அர்ஷின் அதிபதியும் யாரெனக் கேளுங்கள். அல்லாஹ்தான் என அவர்கள் கூறுவார்கள். நீங்கள்அறிவுடையோராயின் அனைத்து வஸ்த்துக்களின் ஆட்சி அதிகாரங்களையும் தன்கையில் வைத்திருக்கும் - (பிறருக்கு ) அடைக்கலம் கொடுக்கும், எவரின் அடைக்கலமும் தேவையற்றவன் யார் என அவர்களைக் கேளுங்கள் அல்லாஹ்தான் என அவர்கள் பதிலளிப்பார்கள். (முஃமினூன் . 84 ---88)

இந்த வானங்களையும் பூமியையும் படைத்தவன் யாரென்று அவர்களைக் ( குரைஷிக் காபிர்களைக்) கேட்டால் அல்லாஹ் தான் என்று அவர்கள் நிச்சயம் கூறுவார்கள் (அன்கபூத் 66 வசனம்)

நபியே (அவர்களிடம் ) சொல்லுங்கள். உங்களுக்கு வானத்திலிருந்தும் பூமியிலிருந்தும்

உணவளிப்பவன் யார்? உங்களது பார்வை கேள்வி (அனைத்துக்கும்) சொந்தக்காரன் யார்.? செத்ததிலிருந்து உயிருள்ளதையும் உயிருள்ளதிலிருந்து செத்ததையும் வெளிப்படுத்துபவன் யார்? எனக் கேளுங்கள். அல்லாஹ்தான் என்று அவர்கள் கூறுவார்கள் அப்படியானால் அவர்கள் (அவனைப்) பயப்பட வேண்டாமா? (ஸூரத்துல் யூனுஸ் 31 ம் வசனம்)

இது போன்ற அல்குர்ஆன் வசனங்கள் பல்வேறு இடங்களில் இடம்பெற்றிருப்பதை அவதானிக்க முடிகின்றது.

எனவே இந்த வசனங்களின் படி அன்றைய குறைஷிக் காபிர்களிடம் கூட அல்லாஹ்தான் அனைத்தையும் படைத்தவன். ஆக்குபவன் அழிப்பவன், காப்பவன், உணவளிப்பவன், நோயைக் குணப்படுத்துபவனெல்லாம் அவன்தான் எனும் நம்பிக்கை இருக்கத்தான் செய்தது.

அல்லாஹ் கூறுகின்றான்...

அவர்கள் (காபிர்கள்) கப்பலில் ஏறினால் (கடலில் மூழ்கி விடு வோமோ எனப் பயந்து) அல்லாஹ்விடம் பயபக்தியுடன் பிரார்த்திப்பார்கள். கடலிலிருந்து அவன் அவர்களைக் காப்பாற்றியதும் அவனுக்கு இணை வைப்பார்கள் என்று கூறுகின்றான். (ஸூரா அன்கபூத் 65 ம் வசனம்)

அக்காலத்தில் அப்றஹா எனும் மன்னன் கஃபாவைத் தகர்ப்பதற்காக யானைப்படையுடன் வந்தான். இடையில் நபியவர்களின் பாட்டனாரான அப்துல் முத்தலிபின் ஒட்டகங்களைச் சுவீகரித்துக் கொண்டதும் அவனுடன் பேச அப்துல் முத்தலிப் வந்போது அவன் 'நான் கஃபாவை இடிக்க வந்துள்ளேன் நீயோ உன் ஒட்டகங்களைப் பற்றிப் பேசுகின்றாயே' என்றான். அதற்கு அப்துல் முத்தலிப் 'ஒட்டகத்தின் சொந்தக்காரன் நான். அவற்றை நான் தான் பாதுகாக்க வேண்டும். கஃபாவின் சொந்தக்காரனோ அல்லாஹ். எனவே அதை அவன் பாதுகாத்துக் கொள்வான் என்று கூறியது அல்லாஹ்வின் மீது அவருக்கிருந்த யகீன் - அசைக்க முடியாத நம்பிக்கையைப் படம் பிடித்துக் காட்டுகின்றது. இத்தனைக்கும் அவர் ஒரு காபிர் என்பதும் குறிப்பிடத்தக்கது. (ரஹீக் அல் மக்தூம் அலா ஸீரத்திர் ரஸூல் ப: 95.)

இதிலிருந்து அல்லாஹ்தான் எமக்கு அனைத்துக்கும் பொறுப்பாளன், அவனே உணவளிப்பவன், குணமளிப்பவன் எனும் நம்பிக்கை காபிர்களிடம் இருந்ததென்பது தெளிவாகின்றது. எனினும் இத்தகைய மக்களைத்தான் அல்லாஹ் 'குல் யா அய்யுஹல் காபிரூன் - காபிர்களே! என்று அழைக்கின்றான். அப்படியானால் இந்தக் கலிமாவின் நோக்கம்தான் என்ன என்ற வினாவெழுகின்றது.

ஆம் இக்கலிமாவுக்கு கலிமத்துத் தௌஹீத் -- ஓரிறைக் கொள்கையின் வாசகம் என்று நாம் சொல்கின்றோம். தௌஹீத் எனும் போது மேற்சொன்னவாறு அல்லாஹ்தான் அனைத்தையும் படைத்து நிர்வகிப்பவன் என்று நம்புவதும் ஒரு பகுதிதான். ஆனால் அதை விட முக்கியமாக அவனை மாத்திரமே வணக்கத்துக்குரியவனாக ஆக்கி அவனல்லாத எந்த சக்திக்கும் அல்லாஹ்வின் ஆற்றலில் எவ்விதப் பங்குமில்லை என்று உறுதியாக நம்பி எந்த இபாதத் ஆகிலும் அல்லாஹ்வுக்காகவே அதைச் செய்வதுடன் அதன்படி செயற்படுவதே இந்தக்கலிமாவின் அடிப்படை நோக்கமாகும். இதைத்தான் குரைஷிக் காபிர்கள் செய்யத் தவறினார்கள். வெறுமனே அல்லாஹ்வை நம்பி விட்டு பின்னர் அல்லாஹ்வுக்கு இருக்கும் சக்தி வேறு சிலருக்கும் இருக்கின்றதென்ற நம்பிக்கையிலோ அல்லது அல்லாஹ்விடத்தில் நெருக்கத்தத்தைப் பெற்றுத்தர இவர்கள் வல்லவர்கள் என்ற நோக்கிலோ வேறு சில விக்ரகங்களுக்கும் கடவுள்த் தன்மைகளைக் கற்பித்தார்கள். இதனைத்தான் நபியவர்கள் கண்டித்தார்கள். விமர்சித்தார்கள், எதிர்த்தார்கள். இதனாலேயே யுத்தமெல்லாம் கூட மூண்டன. எனவே வெறுமனே கலிமாச் சொல்லிவிட்டு அதன்படி செயற்படா விட்டாலும் அந்த நம்பிக்கை போலியானது என்றே அர்த்தமாகும். எனவே லாயிலாஹ இல்லல்லாஹ்

எனும் கலிமாவின் அர்த்தமே பக்தி எனும் பேரில் தப்லீக் முக்கியஸ்த்தர்களுக்கு கண்ணை மூடிக்கொண்டு கட்டுப்படல், அவர்களின் வார்த்தைகளை வேத வாக்காக மதித்தல், அவர்களுக்கு மாறுசெய்தால் சாபம் ஏற்பட்டு விடுமென எண்ணல், அவர்களது ஆசியால் நமக்கு பரக்கத் ஏற்படுமென நம்புதல், அவர்களுக்கு வேறுபல சக்திகள் இருப்பதாகக் கூட நம்புதல் போன்ற தப்லீக் கார்க்கூன்களிடம் காணப்படும் மூட நம்பிக்கைகள் அனைத்துக்கும் வேட்டு வைக்கின்றது.

அதேபோல் அல்லாஹ் தனது பெயர் நாமங்கள் தன்மைகள் பண்புகள் பற்றி அல்குர்ஆனிலும் ஹதீஸிலும் எவ்வாறு சொல்லியிருகின்றானோ அதே போன்று எவ்வித கூட்டல் குறைத்தலின்றி மாற்றல் மறைத்தலின்றி, திரிபு படுத்தல் இருட்டடிப்புச் செய்தலின்றி அப்படியே நம்பியாக வேண்டும். இந்த மூன்று விடயங்களையும் இந்த சிறிய கலிமா தன்னகத்தே உள்ளடக்கியிருக்கின்றது. இதனையே..

அத்தௌஹீத் அர் ருபூபிய்யா.<br>அத்தௌஹீத் அல் உலூஹிய்யா.<br>தௌஹீதுல் அஸ்மாயி வஸ்ஸிபாத்.

என மூன்று தனித்தனிப் பெயர்கள் கொண்டு அழைக்கின்றோம்.

ஆனால் தப்லீக் ஜமாஅத் அமைப்பைப் பொறுத்தவரைக்கும் இந்த கலிமாவின் ஒரு பகுதியான அல்லாஹ்தான் அனைத்தையும் படைத்தான், அவன்தான் அனைத்தையும் இயக்குகின்றான் என்ற கோணத்தில் மாத்திரம்தான் விளக்கம் கொடுக்கப்படுகின்றதேயன்றி அல்லாஹ்வைத்தவிர வேறு எவருக்கும் வணக்கத்தில் எவ்வித பங்கும் கொடுத்துவிடக் கூடாது. அவனது குர்ஆனிலிருந்தும் நபியவர்களின் ஹதீஸிலிருந்தும் மாத்திரமே இஸ்லாம் அமைக்கபட்டுள்ளது. அதிலே எவருக்கும் கையாடல் செய்ய அனுமதியில்லை. மீறினால் அது ஷிர்க்கான, பித் அத்தாக - மௌட்டீகமாக ஆகிவிடும் என்பது பற்றியோ, ஷிர்க் பித்அத்தின் விபரீதங்களை விளக்குவது பற்றியோ எவ்விதக் கரிசனையும் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை.

இதன் பிரதிபலிப்பும் விபரீதமும் அவர்களது அன்றாட நடவடிக்கைகளில் தெட்டத் தெளிவாகத் தெரிய வருவதைக் காணக்கூடியதாக இருக்கின்றது நபியவர்கள் தமது பிரச்சாரத்தில் ஷிர்க் பித்அத்துக்களை ஒழிப்பதில் அதன் வாடையையே வேரடி மண்ணோடு பிடுங்கி எறிவதற்காகத்தான் இவ்வளவு பாடுபட்டார்கள். இன்னல்களைச் சகித்தார்கள். யுத்தங்கள் புரிந்தார்கள். ஆனால் இவ்விடயங்கள் பற்றி தப்லீக்கில் எவ்வித முக்கியத்துவமும் கொடுப்பதில்லை என்பதை அடித்துச் சொல்லலாம். சமூகத்தில் நிலவக்கூடிய ஷிர்க்கான - பித்அத்தான அனுஷ்ட்டானங்களைப் பற்றி எங்காவது இவர்கள் பேசியதுண்டா? சமூகச் சீர்கேடுகள், பிரச்சினைகள் அதற்கான தீர்வுகள் பற்றியெல்லாம் எங்கேனும் இவர்களது இஜ்திமாக்களில் பேசப்பட்டதுண்டா? கேட்டால் அதெல்லாம் துன்யாவுடைய விடயங்கள் என்று நழுவுவார்கள். பகிரங்க ஷிர்க்கை எதிர்த்துப் பேசுவது துன்யாவுடைய விடயம், இஸ்லாமிய லேபலை வைத்துக் கொண்டவர்கள் அதன் பெயரால் சமூகத்தில் நடத்தும் பித்அத்தான மௌட்டீகங்களைச் சுட்டிக்காட்டுவது துன்யாவுடைய விடயம். முஸ்லிம்களுக்கெதிரான எதிரிகளின் சதிகளைப் பற்றிப் பேசுவது துன்யாவுடைய விடயம், 3 நாள் அவர்களுடன் புறப்பட்டு விட்டால் மட்டும் அது தீனுடைய விடயமாகி விடும்.

இதன் காரணமாகத்தான் ஒன்றுமறியா புதிய அப்பாவி தப்லீக் சகோதரர்கள் உட்பட அனைத்து தப்லீக் தொண்டர்களும் தமது பகுதி பள்ளிவாயல்கள், அப்பகுதி தர்ஹாக்களில் இடம்பெறும் கந்தூரி, பாத்திஹா, கொடியேற்றம் , மௌலீது மஜ்லிஸ் போன்றவற்றை எதிர்ப்பதிலோ அதை நிறுத்தும் முயற்சியிலோ ஈடுபடாதிருப்பதையும் அதை எதிர்ப்பவர்களைக் குழப்பவாதிகள் என்று எண்ணுவதையும், இன்னும் சிலரோ இவை போன்ற சுப வைபவங்களில் தாராளமாகக் கலந்து கொண்டு சிறப்பித்து நாஸ்டா -

அன்னதானம் பெற்றுச் செல்வதையும் சர்வ சாதாரணமாகக் காண முடிகின்றது.

இதைவிடப் பேராச்சரியத்துக்குரிய கவலை தரும் விடயம் யாதெனில் இந்த தப்லீக்கின் வேராகத் திகழும் பல உலமாக்களே ஒவ்வொரு பகுதிகளிலும் இவ்வாறான பித்அத்தான அனாச்சார நிகழ்வுகளுக்குத் தலைமை தாங்கி பள்ளிகள் தோறும் அரங்கேற்றி வைத்து சிறப்பிப்பதைக் காணும் போது?? நெஞ்சமே பற்றியெரிகின்றது. உங்களில் சிலருக்கு இது ஆச்சரியத்தைத் தரலாம். ஆனால் என்னிடம் அதற்கு நிறைய ஆதாரங்கள் உண்டு. அவ்வாறான நூற்றுக் கணக்கான உலமாக்களின் பெயர்ப்பட்டடியல் என்னிடமுண்டு . அணுகினால் அள்ளித்தர நான் தயார்.

மேலும் இந்த தப்லீக் பெரியார்கள் கலிமத்துத் தௌஹீத் லாயிலாஹ இல்லல்லாஹ் விடயத்தில் தங்கள் மத்ஹபான மாத்துருதிய்யா, அஷ்அரிய்யா போன்ற மத்ஹபுவாதிகளின் கருத்தையே கொண்டிருக்கின்றனர். இந்தப் பிரிவினரிடம் குர்ஆன் ஹதீஸுக்கு முற்றிலும் மாறுபட்ட கோட்பாடுகள் நிறையவே இருக்கின்றன. உதாரணத்திற்கு அஷ்அரிய்யா எனும் பிரிவினர் அல்லாஹ் தனக்கு இருப்பதாகச் சொன்ன பண்புகளில் ஏழே ஏழு பண்புகளை மாத்திரம் ஏற்றுக் கொண்டு ஏனையவற்றை மறுக்கின்றனர். உதாரணத்திற்கு அல்லாஹ் அர்ஷிலே நிலை கொண்டிருப்பதாக குர்ஆனிலும் ஹதீஸ்களிலும் இருக்க இவர்கள் அல்லாஹ் உலகெங்கும் இருக்கின்றான் என்கின்றனர். வேறு சில தப்லீக் மேதாவிகளோ அல்லாஹ் எங்கிருந்தாலும் நமக்கென்ன? அதுவா முக்கியம் வக்தில் வெளிக்கிளம்புவது தானே முக்கியம் என்கின்றனர். அப்படியானால் முக்கியமற்ற ஒரு விடயத்தை அல்லாஹ் ஏன் குர்ஆனில் 20க்கும் மேற்பட்ட இடங்களிலும் நபியவர்கள் நூற்றுக்கணக்கான இடங்களிலும் சொல்லி நேரத்தை வீணடிக்க வேண்டும் சிந்திப்போமாக. இப்படி கலிமா லாயிலாஹ இல்லல்லாஹ்வோடு சம்பந்தப்பட்ட எவ்வளவோ விடயங்கள் ஒவ்வொரு முஸ்லிமும் வழிதவறி விடாமலிக்க அவசியம் தெரிந்து வைத்திருக்க வேண்டிய விடயங்கள் தப்லீக்கில் சொல்லப்படாமல் மூடி மறைக்கப்படுகின்றன. கலிமாவுக்கு நபியவர்கள் சொல்லித்தந்த அர்த்தத்தில் மூன்றில் ஒன்றை மாத்திரம் எடுத்துக் கொண்டு மீதி இரண்டு பகுதிகளும் குழி தோண்டிப் புதைக்கப்படுகின்றன.

இது ஒரு புறமிருக்க கலிமாவுக்குச் சொல்லப்படும் மூன்றிலொரு பகுதி விளக்கத்தையாவது அதே தூய்மையுடன் விட்டு வைக்கின்றார்களா என்றால் அதுவும் இல்லை. வஸ்த்துக்களுக்கு எவ்வித சக்தியுமில்லை. அல்லாஹ்வுக்குத்தான் அனைத்து சக்திகளும் உண்டு என்று சொல்லப்படும் தத்துவம் காலப்போக்கில் சிதைய ஆரம்பித்து 4 மாதம் 1 வருடம் என்றெல்லாம் சென்று வந்தவுடன் தாங்கள் பின்பற்றும் தப்லீக் பெரியார்களுக்கும் ஆத்மீக சக்திகளுண்டு. அவர்களால் உயிரோடும் மரணித்த பின்பும் கூட உலகில் பல்வேறு மாற்றங்களைச் செய்ய முடியும் என்ற நம்பிக்கை - நச்சுக் கருத்து தப்லீக் பெரியார்களாலேயே அவர்களுக்கு ஊட்டப்பட்டு விடுகின்றது. எப்படி ஸூஃபித்துவ வாதிகள் அன்று இஸ்லாத்தின் -- ஷரீஆ எனும் பெயரை வைத்து மக்களைத் தம் பக்கம் அழைத்து பின்னர் தரீக்கா எனும் பேரில் அவர்களது இறை நம்பிக்கையைச் சிதைத்துச் சின்னாபின்னமாக்கி தமக்கும் கடவுளின் சக்திகள் இருப்பதாக நம்பவைத்து தாம் கூறுபவை அனைத்தையும் எவ்வித சிந்தனையுமின்றி யோசிக்காமல் இஸ்லாம் என்பதாக ஏற்கும் தலையாட்டி பொம்மைகளாக மூளைச் சலவை செய்து விடுகின்றார்களோ அதே நிலைதான் இங்கு தப்லீக் பெரியார்களிடமும் காணப்படுகின்றது. இதனை வெறும் அனுமானமாகவோ அல்லது காழ்ப்புணர்ச்சியிலோ சொல்லவில்லை. ஆதாரத்துடன்தான் சொல்கின்றேன். அதுவும் அவர்களது புத்தகத்திலிருந்தே.. இதைத் தொடர்ந்து படியுங்கள்.

அஷ்ரப் அலி தானவி அவர்கள் தப்லீக்கின் பிரபல பெரியார்களில் ஒருவர். இவர்களிடம் நிறைய சிஷ்யர்கள் பைஅத் (ஞான தீட்சை) பெற்றிருந்தனர். ஒருமுறை அவரின் சிஷ்யர்களில் ஒருவர் ஒரு கனவு கண்டார். கனவில் அவருக்கு சக்ராத் - இறுதி நேரம் நெருங்கி மரணத்துக்காகப் போராடிக் கொண்டிருக்கின்றார். அவ் வேளை கலிமாவை மொழிவதற்காக லாயிலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்று சொல்ல

முயற்சிக்கின்றார். ஆனால் அதற்குப் பதிலாக அவரின் வாயிலிருந்து லாயிலாஹ இல்லல்லாஹ் அஷ்ரப் அலி தானவி ரஸூலுல்லாஹ் என்றுதான் வருகின்றது. இதனால் திடுக்கிட்டு விழித்த அவர் இது ஷிர்க்கான விடயமாயிற்றே என்று பதைபதைத்து மீண்டும் தூங்கியதும் மீண்டும் அதே கனவு. இப்படியே மூன்று தடவைகள் அதே கனவைக் கண்டதும் அச்சத்தினால் மறுதினம் விழித்ததும் நபியவர்களுக்கு ஸலவாத் சொல்ல முயற்சித்தார். அதற்கும் அல்லாஹூம்ம ஸல்லி அலா நபிய்யினா அஷரப்அலி தானவி ரஸூலுல்லாஹ் என்றுதான் நாவிலிருந்து வெளிப்பட்டது. உடனே அச்சத்துடன் பெரியார் அவர்களிடம் வந்து இக்கனவைத் தெரிவித்தார்கள். அதற்கு அஷரப் அலி தானவி அவர்கள் 'இது பற்றி நீங்கள் கவலைப்படத் தேவையில்லை. அது நல்ல கனவுதான் ஏனெனில் நானும் நபி அவர்களுடைய அந்தஸ்த்தில் உள்ளவன்தான் நீங்கள் அஷரப் அலி தானவி ரஸூலுல்லாஹ் என்று சொன்னால் அதுவும் சரிதான் அதனால் பயப்படத் தேவையில்லை என்று சொன்னார்கள் . இந்த விடயம் அன்றைய உலமாக்களுக்கிடையில் மிகுந்த சர்ச்சையை ஏற்படுத்தியது. மேற்படி பத்வா மார்க்கத்துக்கு முரணானது, குப்ரை ஏற்படுத்தக் கூடியது எனவே உடனடியாக அதனை வாபஸ் வாங்க வேண்டுமென அன்றைய அகில இந்திய உலமாக்கள் அமைப்பு கோரிக்கை விடுத்தது. இதற்கு மறுப்பளித்து தப்லீக் ஜமாஅத்தின் மீதான குற்றச்சாட்டுகளும் பதில்களும் எனும் நூலில் மேற்படி அஷரப் அலி தானவியின் பத்வா சரியானதே என நியாயப் படுத்தி எழுதியுள்ளார்கள் ஷைகுல் ஹதீஸ் ஜக்கரிய்யா மௌலானா அவர்கள். (ஆதாரம் . தப்லீக் ஜமாஅத்தின் மீதான குற்றச்சாட்டுகளும் பதில்களும் .ப: 144-145)

(அதாவது அஸ்ரப் அலி தானவியும் அவர்கள் அளவுக்குள்ள மவ்லானாமார்களும் நபிமார்களின் அந்தஸ்துக்குச் சமமானவர்கள். எனவே அவர்கள் சொல்வதையெல்லாம் வேத வாக்காக ஏற்று கண்ணை மூடிக்கொண்டே பின்பற்றலாம் என்பதே இதன் உள் அர்த்தம்.)

பாருங்கள் இதுதான் வஸ்துக்களின் பக்கம் இருக்கும் நம்பிக்கையை நீக்கி அல்லாஹ்வின் பக்கம் நம்பிக்கையை ஏற்படுத்தும் இலச்சனம்?? கலிமாவுக்கு அவர்கள் வழங்கும் வெளிப்படையான வியாக்கியானம் எப்படி? இந்த ரசசிய வியாக்கினம் எப்படி?

வஸ்த்துக்களுக்கு எவ்வித சக்தியுமில்லை அல்லாஹ்வுக்கு மாத்திரம் தான் எல்லா சக்தியுமுள்ளது என்பதை எப்படி நிரூபிக்கின்றார்கள் என்று பாருங்கள் .

ஹஜ்ஜின் சிறப்பு எனும் தப்லீக் நூலில் வந்துள்ளதாவது... ஷைக் அபூ ஜஃபர் என்று ஒரு பெரியார் மதீனாவில் இருந்தார். அவர் ஒருமுறை மக்காவுக்குச் செல்லத் தயாரானார். அப்பொழுது அவரது சீடர்களில் ஒருவர் நானும் தங்களுடன் வருகின்றேன் என்று கேட்டுக் கொள்ள அதற்கு அப்பெரியார் (ஹிள்று (அலை) மூஸா நபிக்குச் சொன்ன பாணியில்) அதற்கு நீ சக்தி பெற மாட்டாய் என்றார். அதனைக் கேட்காது சீடர் அடம் பிடிக்கவே பெரியார் அவர்கள் சரி அப்படியென்றால் நான் எடுத்து வைக்கும் காலடிச் சுவட்டின் மீதே நீயும் காலெடுத்து வைக்க வேண்டும் என்று நிபந்தனையிட அதற்குச் சம்மதித்து இருவரும் பயணத்தைத் தொடர்ந்தனர். இஷாத் தொழுகையின் பின் பயணத்தைக் கால்நடையாகத்தான் மேற்கொண்டனர். அந்தச் சீடர் சொல்கின்றார். இரவில் கொஞ்ச நேரந்தான் நடந்திருப்போம். தூரத்தில் விளக்குகள் தெரிய ஆரம்பித்தன. அருகே நெருங்கிச் சென்றபோது மக்கா மஸ்ஜிதே ஆயிஷாவின் விளக்குகளே அவை. நேரம் அப்போது தான் தஹஜ்ஜத்துடைய வேளை. இவ்வளவு குறுகிய நேரத்துக்குள் மதீனாவிலிருந்து மக்கா வந்து சேர்ந்தமை பற்றி எனக்கு ஆச்சரியம். ஷைக் அவர்களின் வல்லமை ஒருசில மணி நேரத்துக்குள் கால்நடையாக மக்காவுக்கு வந்து விட்டார்கள். (நபியவர்களுக்கே மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஹிஜ்ரத் மேற்கொள்ள ஒரு வாரம் எடுத்தமை குறிப்பிடத்தக்கது.) ஸுப்ஹூத் தொழுகையை முடித்ததும் அங்குள்ள சில சகோதரர்களைச் சந்தித்தேன். எங்கிருந்து வந்ததாக அவர்கள் வினவினார்கள். நான் மதீனாவிலிருந்து என்றேன். எப்போது புறப்பட்டீர்கள் என்றதும் இரவு இஷாவுக்குப் பின் என்றேன். எப்போது வந்து சேர்ந்தீர்கள் என்றதும் தஹஜ்ஜூத் நேரத்தில் என்றேன். அதைக் கேட்ட அவர்கள்

ஆச்சரிய மேலீட்டால் யாருடன் வந்தீர்கள் என்றதும் நான் ஷைக்கின் பெயரைச் சொன்னேன் அதற்கு அவர்கள் ஆச்சரியத்துடன் இல்லை. எப்படி இது?? ஷைக் அவர்கள் நேற்றிரவு இஷாவுக்குப் பின்னிருந்து தஹஜ்ஜுத் வரைக்கும் இங்கு மஸ்ஜிதுல் ஹராமில் எங்களுக்குப் பாடம் நடாத்திக் கொண்டிருந்தார்களே. என்று ஆச்சரியப்பட்டார்கள். அதற்கு மற்றும் சிலர் அந்த ஷைக்கைப் பொறுத்த வரைக்கும் இதுவெல்லாம் சாதாரண விடயம் என்று கூறினர்.

வஸ்த்துக்களால் எதுவும் ஆவதில்லை என்பது தப்லீக் போதனை ஆனால் இந்தப் பெரியார்களால் அல்லாஹ்வால் முடியுமான அனைத்தும் செய்யமுடியும். அவர்கள் நினைத்தால் கணப் பொழுதில் உலகை வலம் வரலாம். ஒரே நேரத்தில் ஒருவர் பல இடங்களில் தரிசனந் தந்து பல அவதாரமெடுத்து சாகசச் செயல்கள் செய்யலாம். இவையெல்லாம் இஸ்லாத்தின் கொள்கையா? சூபிஸத்தின் கொள்கையா, தப்லீக் அமைப்பு இஸ்லாத்தை வளர்க்கின்றதா ஸூஃபிஸத்தை வளர்க்கின்றதா? நீங்களே சொல்லுங்கள். இந்தக் கொள்கை - ஒரே நேரத்தில் பல இடங்களில் பல உருவமெடுக்கும் கொள்கை சூபிகளின் கொள்கையா இல்லையா? அப்படியானால் தப்லீக்கும் சூபித்துவத்துக்கும் தொடர்பு இருக்கின்றதா இல்லையா? சொல்லுங்கள். வஸ்த்துக்களால் எதுவும் ஆவதில்லை. அல்லாஹ்வால்தான் அனைத்தும் ஆகின்றன என்பதற்கு இதுவும் ஒரு எடுத்துக்காட்டு??

அதே போன்று இஸ்லாத்தின் ஆணிவேராகத் திகழ்வது இஸ்லாமிய அகீதா எனும் இறை நிர்ணயக் கோற்பாடு. அல்லாஹ்வைப் பற்றிய அவனது மலக்குகள் வேதங்கள் நபிமார்கள் பற்றிய விடயங்களெல்லாம் அகீதா - ஒவ்வொரு முஃமினும் கட்டாயம் நம்பிக்கை கொள்ள வேண்டிய பகுதியில் அமையும். இவ்விடயத்தில் ஒரு முஸ்லிமிடம் சரியான நம்பிக்கை இருத்தல் அவசியம். இதிலே கோளாறு இருந்தால் அவனது இறை நம் பிக்கையில் கோளாறு உள்ளதாகவே கருதப்படும். ஆனால் தப்லீக்கின் பெரியார்களிடத்தில் இது சம்பந்தமாக இருந்த சில நம்பிக்கைகளைப் பார்க்கும் போது இந்துப் புராணங்கள், மூடநம்பிக்கைகளே தோற்றுப் போகுமளவுக்கு அவை இருப்பதைக் காண முடிகின்றது. கலிமா லாயிலாஹ இல்லல்லாஹ் என்பதை முதலாவது நம்பராக வைத்துச் செயற்படும் தப்லீக் பெரியார்களிடமே இக்கலிமாவின் போதனைக்கு மாற்றமான ஈமானுக்கெதிரான எத்தனையோ ராங் நம்பர்கள் - தவறான நம்பிக்கைகள் இருப்பதை அவதானிக்க முடிகின்றது. அவற்றில் சிலவற்றை இங்கு சுட்டிக்காட்ட விரும்புகின்றேன்.

சம்பவம்: 1- ஷைக் இல்யாஸ் (ரஹ்) அவர்கள் சொல்கின்றார்கள். 'இந்த தப்லீக்கின் அடிப்படை விதிமுறைகளை நான் எனது விருப்பப்படி உருவாக்கவில்லை. அது எனக்குக் கொடுக்கப்பட்டது. அவ்வாறு செய்யுமாறு எனக்குக் கட்டளையிடப்பட்டது. இதற்கு விளக்கமாக மற்றொரு இடத்தில் அபுல் ஹஸன் அலி நத்வி அவர்கள்; 'அல்லாஹ்தான் இல்யாஸ் அவர்களுக்கு இந்த விடயத்தை உதிப்பாக்கி அவர்களது இதயத்தில் போட்டான்' என்கின்றார்கள் இவை இல்மாகவோ கனவிலோ அவர்களுக்குத் தெளிவு படுத்தப்பட்டனவாம். (ஆதாரம் - தப்லீக்கே தஹ்ரீக் ப:57)

கட்டளையிடப்பட்டது என்றால் யாரால்?? அதற்கு விடையாக அல்லாஹ்வால் என தெளிவாகக் கூறிவிடுறார்கள். அல்லாஹ்வின் கட்டளை வருவது நபிக்கே அப்படியானால் அவர்களும் நபியோ?? நபிமார்களைத் தவிர வேறு யாராகினும் ஒருவரின் எண்ணத்தில் கனவில் வருவதெல்லாம் உண்மையாக முடியாது. அவை சரியா தவறா? என குர்ஆன் ஹதீஸைக் கொண்டே முடிவு செய்ய வேண்டியுள்ளது. ஒவ்வொருவரும் எனது கனவில் அல்லாஹ் இப்படிக் கட்டளையிட்டான், நபி வந்து இப்படிச் சொன்னார்கள் என்று சொல்ல ஆரம்பித்தால் குர்ஆன் எதற்கு ஹதீஸ் எதற்கு??

எனவே கனவில் வருவது இறைவாக்கு என்று நம்புவதே ஈமானுக்கு முரணான விடயமாகும். இல்ஹாமில் சொல்லப்பட்டது என்பதும் ஈமானுக்கு முறணானதாகும். 'முஹம்மதுர்ரஸூலுல்லாஹ்' எனும் கலிமாவின் அர்த்தத்திலேயே இது விளக்கப்படுகின்றது.

நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்று ஏற்றுக் கொள்வது நான்கு அம்சங்களை உள்ளடக்கியிருப்பதாக அல்குர்ஆன் போதிக்கின்றது.

அவர்கள் இட்ட கட்டளைக்கு அடி பணிதல்;
அவர்கள் சொல்வதையெல்லாம் உண்மைப்படுத்தல்;
அவர்கள் தடுத்தவற்றை விட்டும் தவிர்ந்து வாழுதல்;
அவர்கள் சொல்லித்தந்தவாறே அல்லாஹ்வை வழி படல்.

ஆனால் தப்லீக்கில் இவையெல்லாம் மூடி மறைக்கப்பட்டு விட்டு அவர்களின் சொந்த வியாக்கியானங்களே இஸ்லாமெனப் போதிக்கப்படுகின்றன.

சம்பவம்: 2- அல்லாமா ஸூஃபி இக்பால் அவர்கள் தப்லீக் முக்கியஸ்த்தர்களில் ஒருவர். இவர்கள் கூறுகின்றார்கள். மிகப்பெரிய தப்லீக் பெரியார் ஒருவர் இருந்தார்கள். இவர்களிடம் கஸ்புடைய ஞானம் இருந்தது. இதன்மூலமாக அவர்கள் நபி (ஸல்) அவர்களின் முன்னிலையில் பிரசன்னமாகி உரையாடி மகிழ்வது வழக்கம். அவர்களிடத்தில் ஷைக் ஐக்கரிய்யா மௌலானா அவர்கள் ஒரு முறை வருகை தந்து தான் ஒரு பயணம் செய்ய இருப்பதாகவும் அதற்காகத் தங்களிடத்தில் இஸ்திகாராத் தேடுவதற்காக வந்திருப்பதாகவும் தெரிவித்தார்கள். இதனைக் கேட்ட ஷைக் அவர்கள் 'ஐக்கரிய்யாவுடைய இதயத்தில் உதிப்பாகும், அனைத்து விடயங்களுமே மேலிடத்திலிருந்தே கிடைக்கின்றன. எனவே இந்தப் பயணத்தை விடவும் சிறந்த ஒரு காரியம் கிடையாது' என்றார்கள். (மஹ்பூபுல் ஆரிபீன் 52)

வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத்தவிர வேறு யாருமில்லை எனும் கலிமாவின் அர்த்தமே எந்த வணக்கமானாலும் அது அல்லாஹ்வுக்கு மாத்திரமே செய்யப்பட வேண்டும். அல்லாஹ் அல்லாத பிறருக்கு எவ்வித வணக்கத்தையேனும் செய்தால் அதுவே கொடிய ஷிர்க்காக ஆகி விடும். இதைத்தான் குர்ஆனும் ஹதீஸும் பல இடங்களில் போதிக்கின்றன. நபிகளிடத்தில் ஒருவர் மிகப்பெரிய பாவம் எது என்று கேட்டதற்கு அல்லாஹ் உன்னைப் படைத்திருக்கும் போது நீ அவனல்லாத ஒருவனை வணங்குவது என்றார்கள். (புகாரி: 9)

இங்கு ஷைகுல் ஹதீஸ் - ஹதீஸ்க்கலை மேதை எனப் போற்றப்படும் ஐக்கரிய்யா மவ்லானா அவர்களோ இஸ்திகாரா - நன்மை நாடல் எனும் இபாதத்தை தனது குருவான ஷைக் ஒருவருக்கு செய்திருக்கின்றார்கள். குரு நாதர் என்ன சளைத்தவரா? அவர் அதைவிட ஒருபடி மேலே சென்று உங்கள் இதயத்தில் உதிப்பாகும் அனைத்துமே மேலிடத்திலிருந்து தான் அதாவது அல்லாஹ்விடமிருந்துதான் வருகின்றது என்று சேர்ந்து பாடுகின்றார். குருவும் நல்ல குரு சிஷ்யனும் நல்ல சிஷ்யன். அல்லாஹ்வை நேரில் சந்தித்து உரையாடல் எனும் வழி கெட்ட கொள்கை நபிவழி வந்ததா? சூபிகள் வழிவந்ததா? தப்லீக் அமைப்பு சூபிகள் வழிவந்தது என்பதை இப்போதாவது ஏற்கின்றீர்களா?

நபி (ஸல்) அவர்கள் கூட தான் செய்பவை, சொல்பவை அனைத்தும் அல்லாஹ்விடமிருந்து வருபவை என்று சொல்லவில்லை. மாறாக நானும் உங்களைப் போன்ற மனிதன்தான் தப்பு தவறு எனக்கும் ஏற்படும் என்றே சொல்லியுள்ளார்கள்.
நபியவர்களுக்கு தொழுகையில் தவறு ஏற்பட்டது. (பார்க்க : புகாரி 460 -673)

வழக்கு விசாரனையின் போது தீர்ப்புகளில் தனக்கு தவறு ஏற்படுமென கூறியுள்ளார்கள். (புகாரி 227 -6452)

போர் பற்றிய வியூகம் அமைப்பதில் அவர்களுக்குத் தவறு ஏற்பட்டுள்ளது. (பத்ர் யுத்தம்- ரஹீக் 128)

இப்படி எத்தனையோ உதாரணங்களை அடுக்கலாம். நபியவர்களுக்கே மார்க்க

விடயங்களில் மாத்திரமே தவறு ஏற்படாது. ஏற்பட்டாலும் உடனே அல்லாஹ் சுட்டிக் காட்டி விடுவான். இப்படியிருக்க தனது ஷைக்கிடம் இஸ்திகாரா தேடுவதுதான் லாயிலாஹ இல்லல்லாஹ் கலிமாவுக்கு இவர்கள் கொடுக்கும் மதிப்பா?

சம்பவம்: 3- ஷைக் அப்துர் ரஸீத் கன்கோயி எனும் தப்லீக் பெரியார் கூறுகின்றார்.
'பனாஃ எனும் (ஒருவகை மெய்மறந்த) நிலையில் நான் இருக்கும் போதெல்லாம் எந்த விடயத்தை முடிவு செய்வதாயினும் ஷைக் இம்தாதுல்லாஹ்விடம் ஆலோசித்தே செய்வது வழக்கம். பின்பு பனாஃ நிலையின் உயர் அந்தஸ்த்துக்கு வந்ததும் நபி (ஸல்) அவர்களைக் கண்டு ஆலோசித்தே முப்பது வருடங்களாக எந்த வித முடிவையும் எடுத்து வருகின்றேன். அதற்கு அடுத்த நிலை இஹ்ஸான் எனும் நிலைதான் என்றார்கள். (தீஸ் மஜாலிஸ் ப: 311 , மஹ்பூபுல் ஆரிபீன் : ப: 57)

அதாவது இவர்களிடம் இஹ்ஸான் என்றால் அல்லாஹ்வை நேரில் கண்டு அவனுடன் நேரடியாக உரையாடும் நிலையை அடைந்தேன் என்று அர்த்தம். பனாஃ எனப்படுவது சூபிகள் தமக்கு இருப்பதாகக் கூறும் ஒருவகை போதை நிலை. அதாவது தரீக்கத்தின் வழி நடந்த இவர்களுக்கு மூன்றாவது படிநிலையாக பிரபஞ்சம் அனைத்துமே அல்லாஹ்வின் வெளிப்பாடே என்பது புலப்படுமாம். அந்த அதிர்ச்சியால் ஏற்படும் போதைக்கே பனாஃ எனப்படும். இப்போது சொல்லுங்கள் தப்லீக் பெரியார்களின் கொள்கையும் சூபிகளின் கொள்கைகளும் ஒன்றா இல்லையா? .

இதே போன்று தானே சூபிகளும் அல்லாஹ்வை நேரில் காண்பதாகப் புருடா விட்டுக் கொண்டிருந்தார்கள். அப்படியாயின் இவ்விரு பிரிவினரும் ஒன்றா இல்லையா? நீங்களே முடிவு செய்யுங்கள்.

முற்காலத்தில் வாழ்ந்த இப்னு அரபி, மன்ஸூர் கல்லாஜி போன்றோரும் கூட தாம் நபியுடன் நேரடியாக உரையாடுவதாகக் கூறியே ஹதீஸ்களை எடுக்க மறுத்தனர். அல்லாஹ்வை நேரடியாகக் காண்பகதாகக் கூறி மார்க்கச் சட்டங்களைப் புறக்கணித்தனர். இவையெல்லாம் மார்க்கத்துக்கு முரணானவையென அக்காலத்தில் வாழ்ந்த உலமாக்கள் மறுப்பளித்துள்ளனர். எனவே அக்கால ஸூஃபிகளுக்கும் இக்கால தப்லீக் பெரியார் களுக்கும் வேறுபாடு என்ன இருக்கின்றது.??

## ஸூஃபிகள் பேசிய அத்வைதம் தப்லீக்கிலும் உண்டா??

அத்வைதம் என்பது 'இப்பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும் அல்லாஹ்வே, அனைத்தும் அவனிலிருந்து தோற்றம் பெற்றவைகளே' என்னும் கொள்கையைக் குறிக்கும். இக்கொள்கையே ஸூஃபிகளின் அடிப்படைக் கொள்கையாக இருந்தது என்பதை முன்னர் நாம் அறிந்திருக்கின்றோம். இதே கொள்கை தப்லீக்கின் பெரியார்களிடமும் இருக்கின்றதா? என்பது பற்றி பின்வரும் தகவல்களைப் படித்தபின் வாசகர்களான நீங்களே முடிவு செய்யவேண்டியுள்ளது. இது சம்மந்தமான இன்னும் சில ஆச்சரியங்களை உங்களுக்கு எடுத்துக்காட்ட விளைகின்றேன்.

ஆச்சரியம்:1- ஜக்கரிய்யா மௌலானா அவர்கள்; கூறுகின்றார்கள். 'அல்லாஹுத்தஆலாதான் உண்மையில் அனைத்து அழகினதும் ஊற்றாக இருக்கின்றான். உண்மையில் உலகில் இருக்கும் அழகு அனைத்தும் அவனது அழகேயன்றி வேறில்லை. (தப்லீக் தஃலீம் தொகுப்பு ப: 300)

அதாவது உலகிலுள்ள அழகானவை அனைத்தும் அவனது பிரதிபலிபே என்பதே இதன் அர்த்தம்.

தனது மற்றுமொரு நூலில்: 'ஒரு அடியான் தன் எஜமானான அல்லாஹ்வின் கட்டளை, வரம்புகளை மீறுவதன் ரகசியம் யாதெனில் அல்லாஹ் அடியார்களைத் தனது வடிவத்திலேயே படைத்துள்ளான். எனவே அல்லாஹ்வுக்கு ஜலாலியத்தான (அதிகாரமிக்க) பண்புகள் இருப்பதால் அவனது அடியார்களிடத்திலும் அந்தப் பண்பின் வெளிப்பாடுகள் தோன்றுகின்றன அதனால்தான் அவனிடமிருந்து பாவச் செயல்கள் இடம்பெறுகின்றன (உம்முல் அம்ராழ் ப: 7)

அல்லாஹ் மனிதனின் உருவத்தை உடையவன் என்று சொல்வது மட்டுமின்றி அவன் ஏன் பாவம் புரிகின்றான் என்பதன் காரணத்தை விளக்கி பாவம் புரிவதை நியாயப்படுத்தும் விதத்தைப் பாருங்கள். என்னே விளக்கம்??. அப்படியானால் பாவம் புரிந்தவனைத் தண்டிப்பதும் அர்த்தமற்றது தானே!

ஆச்சரியம்: 2- ஜக்கரிய்யா மௌலானா தனது குருநாதர் ஷைக் இம்தாதுல்லாஹ் அவர்கள் நவின்றதாகக் கூறுகின்றார்கள். 'ஷைக் அவர்கள் ஹக்கீக்கத் (யதார்த்தத்தைக்) காணக் கூடியவர்களாக இருந்தார்கள். (அதாவது அல்லாஹ்வை நேரடியாகக் காண்பவர்கள் என்பது அர்த்தம்) அவர்கள் சொல்வார்கள் 'ஒரு ஆண்; பெண்ணின் தோற்றத்தில் இருக்கின்றான்; . பெண்ணோ அல்லாஹ்வின் தோற்றத்தில் இருக்கின்றாள். ஆண் பெண்ணுக்குக் கண்ணாடியைப் போன்றவன். பெண் அல்லாஹ்வுக்குக் கண்ணாடியைப் போன்றவள் . எனவே பெண்ணும் அல்லாஹ்வைக் காட்டும் கண்ணாடி தானே! அதனால்தான் அவளிலே அல்லாஹ்வின் அழகு வெளிப்பட்டுள்ளது. அதை அவசியம் நாம் காண வேண்டும். (ஸமாயில் இம்தாதிய்யா ப:70)

ஆச்சரியம்: 3-மேலும் ஜக்கரிய்யா மொலானா கூறுகின்றார்கள். 'ஸூபித்துவத்தின் ஆரம்பமே வஹ்தத்துல் வுஜூத் (எல்லாம் அவனே எனும் அத்வைதக் கொள்கைதான்) என்று கூறிவிட்டு மற்றொரு இடத்தில் 'இப்போதுள்ள காலம் முழு மூச்சுடன் சூபித்துத்தின் பக்கம் அழைப்பதற்கும், அதன்படி செயற்படுவதற்கும் பொருத்தமான காலமாகும்' என்று கூறுகின்றார்கள். (திக்ரு இஃதிகாப் கே அஹமிய்யத் ப: 95)

இப்போது புரிந்து விட்டதா ? இவர்களது சுயரூபம். எல்லாமே அல்லாஹ்தான் என்பதே சூபித்துவத்தின் அடிப்படை என அவர்களே ஏற்றுக் கொண்டு விட்டு பின்னர் அதன் பக்கம் முழு மூச்சுடன் அழைப்பதற்கான தருனம் இதுவே என்கின்றார்களே! அப்படியானால் இவர்கள் 'எல்லாமே அல்லாஹ்வே' எனும் சூபித்துவத்தின் பக்கம்தான் அழைக்கின்றார்கள் என்பதற்கு இதைவிடப் பெரிய ஆதாரம் என்னவிருக்கின்றது?

ஆச்சரியம்: 4- மற்றுமொரு இடத்தில் ஜக்கரிய்யா மௌலானா சொல்கின்றார்கள். அல்லாஹுஒத்தஆலா குர்ஆனிலே 'ஹுவல் லாஹிறு' அவனே வெளியானவன் என்று கூறும் வார்த்தை உங்கள் சிந்தனையிலிருந்து நீங்காதிருக்க வேண்டும். நீங்கள் நன்கு சிந்தியுங்கள் ஒரு சிஷ்யனின் யதார்த்தத்திலும் வெளித்தோற்றத்திலும் அல்லாஹ்வே இருக்கின்றான். இதனை அவன் நன்கு இதயத்தில் பதித்தால் அல்லாஹ்வின் தாத்துதான் (சடம் தான்) உலகத்திலும் (மனிதனாக) வெளியாகியுள்ளது என்பதை சிந்திப்பான். (ஸக்காலத்துல் குலூப் ப: 89)

மௌலானா அவர்களின் கொள்கை 'எல்லாமே அல்லாஹ்தான்'; எனும் சூபிகளின் கொள்கைதான் என்பதில் இனியேனும் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியுமா?

அவர்கள் எல்லாம் இறைவனே எனும் கொள்கையில் இருந்தார்கள் என்பதற்கு இதைவிடப் பெரிய ஆதாரம் வேறு என்ன வேண்டியிருக்கின்றது.

ஆச்சரியம்: 5- சூபித்துவ பித்தரான 'எல்லாமே அல்லாஹ்தான்' எனும் கொள்கையின் ஆரம்பப் பிரச்சாரகனாகிய மன்ஸூர் அல்ஹல்லாஜி என்பவனைப் பாராட்டிக் கூறிய

கவிதையொன்றில் ஜக்கரிய்யா மௌலானா அவர்கள் கூறுகின்றார்கள்.

'மன்ஸூர் ஹல்லாஜியை (இஸ்லாமிய ஆட்சியாளர்கள்) சிலுவையில் அறைந்ததற்குக் காரணம். அவர் அல்லாஹ்வுடைய விடயத்தில் மரியாதைக்குறைவாக நடந்து கொண்டார். நான்தான் அல்லாஹ் என்று சொன்னார். அவரது இந்த வார்த்தை உண்மைதான். எனினும் அதை அவர் அப்படிப் பகிரங்கப் படுத்தியிருக்கக் கூடாது. (வலிய் காமில் ப: 249)

நான்தான் அல்லாஹ் என அந்தக் கிறுக்கன் கூறியதையும் உண்மையெனக் கூறும் மௌலானாவை என்னவென்று கூறுவது என்று நீங்களே முடிவு செய்யுங்கள்.

ஆச்சரியம்: 6- திக்ர் செய்யும் ஒழுங்குகள் பற்றி மௌலானா ஜக்கரிய்யா அவர்கள் சொல்லும் போது... 'திக்ரின் போது அல்லாஹு நூருஸ்ஸமாவாத்தி வல் அர்ழ் - அல்லாஹ் வானங்கள், பூமியுடைய ஒளியாவான் எனும் வசனத்தை மனதில் முன்னிறுத்த வேண்டும். எல்லா இடங்களிலும் அல்லாஹ் இருக்கின்றான் அவனது ஒளி அண்ட சராசரங்கள் அனைத்திலும் வியாபித்துள்ளது என்று எண்ணிக் கொண்டு அவனது ஒளியில் தானும் சங்கமித்து மூழ்கி விட்டதாக எண்ண வேண்டும். (ஸகாலதுல் குலூப் ப: 144)

கலிமா லாயிஹ இல்லல்லாஹ் -- வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத்தவிர எவருமில்லை என்ற கலிமாவை தம் அடிப்படை விதிகளில் முதன்மையானதாக ஆக்கிய தப்லீக் பெரியார்கள் தமது நூல்களில் எழுதி வைத்துள்ள கலிமாவுக்கு முரணான விடயங்கள் சிலவற்றை இங்கே சுட்டிக்காட்டியுள்ளேன். இவைபோன்ற நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான விடயங்கள் இவர்களின் நூல்களில் மலிந்து கிடக்கின்றன. இவற்றிலிருந்து தெரிய வருவது யாதெனில் கலிமாவுக்குரிய அர்த்தத்தை விளங்குவதில் இவர்களும் சூபித்துவ வாதிகளை ஒத்த அதே நிலைப்பாட்டைத்தான் கொண்டிருக்கின்றனர். அதே அத்வைதக் கருத்துக்களைத் தமது புத்தகங்களில் பரவலாகக் கூறியிருப்பதிலிருந்தும், அன்றைய உலமாக்களால் வழிகேடர்கள் என்று பத்வா - தீர்ப்புக் கொடுக்கப்பட்ட சூபிகளை முன்னிலைப்படுத்தி அவர்களின் கருத்துக்களுக்கு முன்னுரிமையளித்து சூபியாக்கள், பெரியார்கள், ஞானவான்கள் என்று தமது நூல்களில் போற்றுவதிலிலிருந்தும் இவை தெளிவாகின்றன.

பெரியார்கள் என்ற காரணத்தால் - நாம் விரும்புபவர்கள் எனும் காரணத்தால், நாம் தொழுகையாளிகளாக மாறுவதற்குக் காரணமாயிருந்தவர்கள் எனும் காரணத்தால் அவர்கள் சொல்வது அனைத்தையும் நாம் ஏற்க வேண்டுமா? அல்லாஹ் ரஸூலுக்கு மாற்றமானதா இல்லையா என்று கொஞ்சம் சிந்திக்க வேண்டாமா? இஸ்லாத்திக்கு மாற்றமான ஒரு கருத்தை ஒரு குருநாதர் சொல்லிவிட்டால் அது தவறானது என மாணவனுக்கும் தெரிந்திருந்தால் அந்தத் தவறை குருவுக்குப் பக்குவமாகச் சுட்டிக் காட்டிப் புரிய வைப்பதுதான் ஒரு உண்மையான சிஷ்யனுக்கு இலட்சமேயன்றி அவர் சொல்லிவிட்டால் அது எப்படித் தவ றாக முடியும்? என வறட்டுப் பிடிவாதம் பிடிப்பது அறிவற்ற மூடர்களின் செயலாகும். நபியவர்களுக்கே தவறு ஏற்பட்டிருக்கும் போது இவர்களுக்குத் தவறு ஏற்படுவது என்ன ஆச்சரியமா? எல்லோருமே மனிதர்கள்தானே!

அன்றாடம் தப்லீக் சகோதரர்களால் தஃலீம் எனும் பெயரில் வாசிக்கப்படும் நூற்களான. அமல்களின் சிறப்பு, ஸதகாவின் சிறப்பு, ஹஜ்ஜின் சிறப்பு போன்ற நூல்களில் கூட இவ்வாறான நச்சுக்கருத்துக்கள் பரவலாகக் காணப்படுகின்றன. ஆனால் இவற்றை மொழிபெயர்த்த வல்லவர் தந்திரமாக இப்படியாக அத்வைதக் கருத்துக்களை பாமர மக்களுக்கு எழிதில் புரியாத வண்ணம் மிக்க சமயோசிதமாக மொழிபெயர்த்துள்ளார்.

ஆனால் இதுவரை தமிழில் மொழி பெயர்க்கப்படாத தப்லீக் பெரியார்களின் நூல்களில் இவ்வாறான நச்சுக்கருத்துக்கள் தாராளமாக பச்சை பச்சையாகச் கூறப்பட்டுள்ளன. அவற்றில் சிலவற்றைத்தான் மேலே சுட்டிக்காட்டியுள்ளேன். தப்லீக் சகோதரர்கள் நபிவழி

எது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஒரே நோக்கத்தில் தான் இவைகளைக் கூறுகின்றேன். வேறு எவ்வித நோக்கங்களோ காழ்ப்புணர்வோ அல்லாஹ் மீது சத்தியமாக தப்லீக் சகோதரர்கள் மீது எனக்கில்லை என்பதை சத்தியமிட்டுக் கூறுகின்றேன். ஒரு சில பயபக்தி மிகு பேணுதலான கார்க்கூன்கள் கூட 'உயிரோடு உள்ளவர்களைப் பற்றியே விமர்சிப்பது புறம்பேசியதாக ஆகிவிடும்போது மரணித்த இந்த மௌலானாக்களைப் பற்றி எப்படி தாறுமாறாகப் பேசுவது ஆகும் இது புறம் பேசுவதாகாதா? மரணித்தவர்களைப் பற்றி நல்லவற்றையேயன்றி வேறு எதையும் பேச வேண்டாமென நபியவர்கள் கூறியுள்ளார்களே' என்றெல்லாம் சொல்லி தப்லீக் அமைப்பிலுள்ள தவறுகளைச் சுட்டிக்காட்டும் பிரசுரங்களைப் படிக்க வேண்டாமென மக்களைத் தடுக்கின்றனர். இதுவும் ஒரு அர்த்தமற்ற வாதமாகும். உதாரணத்திற்கு ஒருவர் நல்ல ஆட்டிறைச்சி என்று சொல்லிக் கொண்டு செத்த ஆட்டின் இறைச்சியை விற்றுக் கொண்டிருக்கின்றார். நீங்கள் அதை அவருக்கு இதமாக எடுத்துச் சொல்லியும், கண்டித்தும் எவ்விதப் பலனும் இல்லை. இப்போது அவனது செயலைப் பற்றிப் பேசினால் புறம் பேசியதாகி விடும் என எண்ணிக்கொண்டு வாய் மூடி இருக்க வேண்டுமா? அல்லது இதுபற்றி மக்களுக்குத் தெரியப்படுத்த வேண்டுமா? இதைச் சுட்டிக்காட்டுவது புறமா? அவதூறா? இல்லை. இது ஒரு இஸ்லாமியக் கடமை மாத்திரமல்ல. தார்மீகக் கடமையும் கூட. அப்படித்தான் இங்கும் தீன் என்று சொல்லிக் கொண்டு - இஸ்லாம் எனும் லேபிளை ஒட்டிக் கொண்டு தீனுக்கு மாற்றமான எத்தனையோ விடயங்கள் இன்னும் சொல்லப்போனால் ஷிர்க்கான பித்அத்தான விடயங்கள் கூட இஸ்லாம் என்று போதிக்கப்படுகின்றன. எனவே இதனை விடயம் தெரிந்த அனைவருமே சுட்டிக்காட்ட வேண்டும் எதிர்க்கவும் வேண்டும். நபியவர்கள் பிர்அவ்ன் ஹாமான், அபூ ஜஹ்ல் போன்றவர்களைப் பற்றி உம்மத்துக்கு எச்சரித்தமை எப்படி புறம் பேசியதாகாதோ, கவாரிஜ் எனும் இஸ்லாத்துக்கு மாற்றமான, ஆனால் நிறைய வணக்கம்புரியக் கூடியவர்களைப் பற்றி எச்சரித்தமை எப்படிப் புறம் பேசியதாகாதோ அப்படித்தான் இதுவும் என்பதை அவர்கள் புரிந்து கொள்ள வேண்டும் .

<u>அல்லாஹ் எங்கும் நிறைந்திருக்கின்றானா?</u>

அல்குர்ஆனிலும் நபி மொழிகளிலும் அல்லாஹுதஆலா தனது அர்ஷ் எனும் பீடத்தில் நிலைபெற்றிருப்பதாகவும் தன் படைப்பினரின் அனைத்து செயற்பாடுகளையும் அவதானித்த வண்ணம் இருப்பதாகவும் கூறியிருப்பதைக் காணக் கூடியதாயிருக்கின்றது.

"ரஹ்மானான அல்லாஹ் அர்ஸிலே நிலை கொண்டிருக்கின்றான்" (ஸூரா தாஹா 5ம் வசனம்)

இதுபற்றி மேலும் விளக்கமாக அன்ஆம் 18, முல்க் 16, பாதிர் 10, மஆரிஜ் 4, ஆல இம்ரான் 55, நஹ்ல் 102, ஸஜதா 5, போன்ற இன்னும் பல வசனங்களில் தெளிவு படுத்தியுள்ளான். இதன் விதம் முறைமையைப் பொறுத்த வரை படைப்புக்களின் கற்பனைக்கு மாற்றமாகவே இருக்கும் எனவும் நாம் அறிய முடி கின்றது. நபியவர்கள் அல்லாஹ் மேலே அர்ஷிலே நிலை பெற்றிருக்கின்றான் என்பதை பல்வேறு நபிமொழிகளில் தெளிவு படுத்தியிருக்கி;றார்கள். 'வானத்திலுள்ளவனே நம்பிய என்னை நீங்கள் நம்ப மாட்டீர்களா? என சிலரிடம் வினவியுள்ளார்கள். (புகாரி ப:4004)

ஒரு அடிமைப் பெண்ணிடம் அல்லாஹ் எங்கிருக்கின்றான் என்று நபியவர்கள் கேட்க அவள் வானத்தில் (மேலே) என பதிலளிக்க இவள் முஃமின் இவளை விடுதலை செய்யுங்கள் என்றார்கள். (முஸ்லிம் 836)

அனைத்து ஸஹாபாத்தோழர்களும் இந்த விடயத்தில் இவ்வாறே நம்பிக்கை கொண்டிருந்தார்கள். இது இப்படியிருக்க தப்லீக் பெரியார்கள் அல்லாஹ் எல்லா இடத்திலும் இருக்கின்றான் எனும் இந்துக்களின் கொள்கையிலிருந்து காப்பியடிக்கப்பட்ட மாத்துர்தியா, அஷ்அரிய்யா போன்றோரின் கொள்கையினையே கொண்டிருக்கின்றனர்

என்பதை அறியும் போது தான் வேதனையாக இருக்கின்றது. இந்துக்கள் தான் கடவுள் தூணிலுமிருப்பான் துரும்பிலுமிருப்பான் எனும் வழிகெட்ட கொள்கைக்குரியவர்கள் அவர்கள் காபிர்களாதலால் இக்கொள்கையைச் சொல்வது ஆச்சரியமல்ல ஆனால் தப்லீக் பெரியார்கள்??

திக்ரின் சிறப்புப் பற்றி ஜக்கரிய்யா மௌலானா கூறும் போது 'அல்லாஹ் எல்லா இடங்களிலும் இருக்கின்றான். அவனது ஒளி உலகையே வியாபித்திருக்கின்றது என்று நினைத்துக் கொண்டு திக்ர் செய்ய வேண்டும்' என்கின்றர்கள். (ஸக்காலத்துல் குலூப் 144)

தப்லீக் சகோதரர்களே! நாம் அனைவரும் நேர்வழியை அடைய வேண்டுமெனும் நோக்கில்தானே இவ்வளவு சிரமப்பட்டு தியாகத்துக்கு மத்தியில் வெயில் மழையைப் பொருட்படுத்தாது பாடுபடுகின்றோம். எதற்காக? எம்மால் ஒருவன் நேர்வழி பெற்று விட்டால் அதன் அளப்பரிய நன்மை முழுக்க எமக்குக் கிடைக்கும் எனும் ஆசையால் தானே! அப்படியாயின் நாம் பிறருக்குக் கற்றுக் கொடுப்பதும் நூற்றுக்கு நூறு நபிவழியில் உள்ளதுதானா? என்று பார்க்க வேண்டும்தானே! இல்லாவிட்டால் நாம் இஸ்லாத்தில் இல்லாத ஒன்றை இஸ்லாம் என்று சொல்லிக் கொடுத்து விட்டால், அதன்படி அவன் அமல் செய்தால் அதனால் கிடைக்கும் குற்றத்திலும் எமக்குப் பங்குண்டுதானே! அல்லாஹ் பாதுகாக்க வேண்டும் அப்படி நடந்து விட்டால் எமது நிலை என்ன? குளிக்கப் போய் சேறு பூசியதாகவல்லவா ஆகிவிடும்? எனவே நீங்களும் பெரியார்களைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் இவற்றையெல்லாம் கூறுகின்றேன். உண்மை சற்று கசப்பாகத்தான் இருக்கும். ஆனால் புரிந்து விட்டால் அதுவே கரும்பாகி விடும். எனவே பொறுமையுடன் வாசியுங்கள்.

## பெரியார்களின் நபி வழிக்கெதிரான செயல்கள், கருத்துக்கள்

'தப்லீக் ஜமாஅத்துக்கெதிரான குற்றச்சாட்டுக்களும் பதில்களும்' என்று ஒரு புத்தகமுண்டு. ஜக்கரிய்யா மௌலானா தனது கைப்பட எழுதியது. அதில் தேவ்பந்த் ஆலிம்கள் பெரியார்களின் ஏகோபித்த கொள்கைகள் பற்றி அவரது ஷைக் மௌலானா மதனீ எழுதியதைப் பின்வருமாறு எடுத்துக் கூறுகின்றார்.

1- தேவ்பந்து பெரியார்கள் உஸூல், புரூஉ ஆகிய அனைத்து விடயங்களிலும் இமாம் அபூஹனீபாவைப் பின்பற்றுபவர்களும் அவ்வாறு பின்பற்றுவது வாஜிப் என்று சொல்பவர்களுமாவார்கள். இவர்கள் வஹ்ஹாபிகளுக்கு எதிரானவர்கள். வஹாபிகள் தம்மை ஹம்பலி மத்ஹபு எனக் கூறிக் கொண்டாலும் அதன் சட்டங்களிலொன்றை ஹதீஸுக்கு மாற்றமெனக் கருதினால் அதனை விட்டு விடுவார்கள். ஆனால் நாங்கள் ஹனபி மத்ஹபைப் பின் பற்றுவது கட்டாயக் கடமை என்பவர்கள்.

2- தேவ்பந்து பெரியார்கள் நபியவர்கள் தமது கப்ரில் இவ்வுலகில் இருந்தது போலவே ஹயாத்தாக இருக்கின்றார்கள். உலகில் ஒருவர் தனிமையிலிருந்து தியானம் செய்வது போல் நபியவர்கள் தனிமையில் இருக்கின்றார்கள் எனும் கருத்தையுடையவர்கள்.

3- நபியவர்களின் சிறப்புகள் அனைத்தும் நிரந்தரமானவை. உலகில் இப்போது ஏற்பட்டுக் கொண்டிருப்பவை இனி ஏற்படுபவை அனைத்தும் அவர்களது பொருட்டாலேயே ஏற்படுகின்றன. அவர்களே எல்லாவற்றுக்கும் அசல் - சூரியனைப் போன்றவர்கள். அவர்களைக் கொண்டு வஸீலாத் தேடலாம் என்பதே தேவ்பந்த் உலமாக்களின் முடிவான சொல்லாகும்.

4- தஸவ்வுப் - மெஞ்ஞானம் மிகவும் பலன் மிக்கது. ஷைக்கிடம் பைஅத் செய்து கொள்வது மார்க்க முன்னேற்றத்துக்குக் காரணமாக ஆகும்.

5- நபியவர்களுக்கு மார்க்க அறிவு மாத்திரமின்றி இறைவனைப் பற்றிய எல்லா அறிவும், மற்ற வகையான எல்லா அறிவுகளும் இருந்தன. முன்னோர் பின்னோர் அனைவரின் அறிவும் அவர்களுக்கு இருந்தது. அவர்களுக்குச் சமனான அறிவுள்ள எவரும் பிறக்கவுமில்லை, பிறக்கப் போவதுமில்லை .

6- தலாயிலுல் கைராத், புர்தா ஷரீப் போன்றவற்றை ஓதுவதும் அதிகம் பலனளிப்பதாகும். தேவ்பந்த் பெரியார்கள் இவற்றில் அதிகம் ஈடுபட்டு வந்துள்ளதோடு புர்தா போல் தாமே இயற்றியுமுள்ளனர். நபியவர்களின் பிறப்பு (மீலாதுன்நபி) மட்டுமல்ல அவர்களைப் பற்றி எதைப் பேசினாலும் அதனால் நன்மையும் பரக்கத்தும் உண்டாகும். (தப்லீக் - பதில்கள் 180)

இவையனைத்தும் தேவ்பந்த் உலமாக்களின் கொள்கையென ஐக்கரிய்யா மௌலானா அவர்கள் கூறியவைகள். இவற்றிலுள்ள மார்க்க முரணான விடயங்களை நீங்களாகவே புரிந்து கொள்வீர்கள். விளக்க வேண்டியதில்லை என நினைக்கின்றேன்.

பாமர மக்களுக்கு தப்லீக் அமைப்பின் மீதும் அதன் பெரியார்கள் மீதும் அளவு கடந்த பற்றும் நம்பிக்கையும் ஏற்பட வேண்டுமென்ற நோக்கத்திலோ என்னவோ இந்தப் பெரியார்களில் சிலர் தம்மைப் பற்றியோ, பிற சகபெரியார்களைப் பற்றியோ சில எல்லை மீறிய பேச்சுக்களையும் இவர்கள் வெளிப்படுத்தத் தவறுவதில்லை. அதிலே இருக்கும் மார்க்க விரோத விடயங்களைக் கண்டு கொள்வதில்லையோ அல்லது கண்டும் காணாமல் விட்டு விடுகின்றார்களோ அல்லாஹ்வுக்கே வெளிச்சம்.

முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் - நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதராவார்கள் என்ற கலிமாவை நாம் மொழிந்து இஸ்லாமாகியிருக்கின்றோம். தப்லீக் சகோதரர்களும் கலிமாவுடைய வாழ்க்கை வர வேண்டும் என்பதற்காகவே தாமும் பாடுபடுவதாக வாதிடுகின்றனர். அப்படியானால் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்றால் என்ன? நபி (ஸல்) அவர்களை ஏற்று அவர்களை வாழ்க்கை வழி காட்டியாக்கி அவர்கள் ஏவியதை எடுத்து நடக்க வேண்டும். தடுத்தவற்றை விட்டும் விலகிக் கொள்ள வேண்டும். அப்போதுதான் நபியவர்களை அன்பு வைத்தவர்களாகவும் அவர்கள் வழி நடந்தவர்களாகவும் ஆக முடியும். இதில் தப்லீக் சகோதரர்களுக்கென்ன எந்த முஸ்லிமுக்கும் மாற்றுக் கருத்துக் கிடையாது. மாற்றுக் கருத்துடையவர் முஸ்லிமாக இருக்கவும் முடியாது. இதனை மனதில் பதித்துக் கொண்டு பின்வரும் சம்பவங்களைக் கொஞ்சம் கவனித்துப் பாருங்கள்.

1- ஐக்கரிய்யா மௌலானா அவர்கள் சொல்கின்றார்கள்.

'எனக்கேற்பட்ட கைசேதமே அந்தோ பரிதாபம், உங்கள் மீது சத்தியமாகச் சொல்கின்றேன் எனக்கு விரக்தியாக இருக்கின்றது. என்னை விட்டு விடுங்கள் நான் அப்படியே பாலைவனம் செல்ல விரும்புகின்றேன். (அகாபிர் கே ஸூலூக் வ இஹ்ஸான் . ப: 230)

பாலைவனத்துக்கென்ன? அசோக வனத்துக்கு வேண்டுமானாலும் போய்வரட்டும். ஆனால் 'உங்கள் மீது சத்தியமாக' என்ற வார்த்தையைக் கவனியுங்கள். சத்தியம் செய்வதாயின் அல்லாஹ்வின் மீது மாத்திரம் செய்யுங்கள், அல்லது வாய் மூடியிருங்கள் என்று நபியவர்கள் கூறியிருக்க நபிவழியின் பக்கம் அழைப்பதாகக் கூறும் ஷைக்குல் ஹதீஸ் - ஹதீஸ்கலை மேதைகளே இப்படிச் சொன்னால்.... பிறகு பாமர தப்லீக் சகோதரர்களின் நிலை என்னவோ?

2- ஐக்கரிய்யா மௌலானா இயம்புகின்றார்கள்.

இப்ராஹீம் இப்னு அத்ஹம் எனும் ஸூஃபி மகான் ஒரு தடவை இஷாத் தொழுகையை முடித்து விட்டு போர்வையால் போர்த்திக் கொண்டு ஒருக்கணித்துத் தூங்க ஆரம்பித்து

விட்டார்கள். பின்னர் எழுந்து உளுச் செய்யாமலேயே ஸுபஹுத் தொழுகையை நிறைவேற்றினார்கள். நீங்கள் உளுச் செய்யவில்லையே என அன்னாரிடம் கேட்கப்பட்டபோது நானெங்கே தூங்கினேன்? இரவு முழுக்க சொர்க்கத்துப் பூங்காக்களு க்கிடையிலும் நரகத்தின் ஓடைகளுக்கிடையேயுமல்லவா சதா சுற்றிக் கொண்டிருந்தேன் என்றார்கள். (திஸ்திய்யா ஷைக்மார் வரலாறு 162)

## நபி (ஸல்) அவர்கள் பற்றி தப்லீக்கில்...

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இந்த உம்மத்தினர் அனைவருக்கும் தூதராகவும் வழிகாட்டியாகவும் அனுப்பப் பட்டிருக்கின்றார்கள். அவர்கள் இறுதி நபி அவர்களுக்குப்பின் நபிமாரின் வருகை முற்றுப்பெற்று விட்டது. இதனை ஏற்றுக் கொள்ளாதவர்களும் இஸ்லாமிய வட்டத்தை விட்டும் வெளியேறியவர்களாகவே கணிக்கப்படுவார்கள். நபியர்கள் அல்லாஹ்விடமிருந்து வஹி எனும் இறைகட்டளைகளைப் பெற்று அதனை மக்களுக்குச் சொல்வதற்குப் பணிக்கப்பட்டவர்கள். அவர்களுக்கென தனிப்பட்ட முறையில் அரிதாக சில சட்டதிட்டங்களை அல்லாஹ் அவர்களுக்கு அருளியுள்ளான். இது தவிர்ந்த ஏனைய விடயங்களில் அவர்களும் எம்போன்ற மனிதரே. அன்றாட மனிதனுக்கு ஏற்படக் கூடிய பசிதாகம், ஊன், உறக்கம், நோய்நொடிகள், கோபம், மகிழ்ச்சி, பிறப்பு இறப்பு போன்ற அனைத்து விடயங்களிலும் அவர்கள் எம்மைப் போன்ற மனிதரே.

இது பற்றி அல்குர்ஆனில்.....

'நபியே நிச்சயமாக நானும் உங்களைப்போன்ற மனிதனே, எனக்கு வஹி அறிவிக்கப்படுகின்றது. (நான் இறைவனல்ல) உங்களின் இறைவன் ஒருவனே என்று நபியே நீங்கள் கூறுங்கள்'. (ஸூரத்துல் கஹ்பு110 ம் வசனம்)

இவ்வாரே உலக விடயங்களில் நான் உங்களைப் போன்றவன்தான் என்று நபியவர்கள் பல இடங்களில் வலியுறுத்திக் கூறியிருக்கின்றார்கள். ஆனால் நபியவர்களைப் பற்றி தப்லீக் பெரியார்களின் நம்பிக்கை எப்படி இருக்கின்றது என்பதைத் தெளிவு படுத்துவதற்காக அவர்களால் கைப்பட எழுதப்பட்ட சில நூல்களிலிருந்தே ஒரு சில தகவல்களைத் தருகின்றேன். அசந்து போய் விடாதீர்கள். ஆச்சரியப்படாதீர்கள். படித்து விட்டு உண்மைதானா என ஆராய்ந்தும் பார்த்ததன் பின் அல்லாஹ்வுக்குப் பயந்து சரியானதொரு முடிவை தப்லீக் சகோதரர்கள் எடுக்க வேண்டும்.

### 1- பெரியார்களை தரிசிக்க வரும் நபி ( ஸல்) அவர்கள்.

ஜக்கரிய்யா மௌலானா அவர்கள் சொல்கின்றார்கள்... எனது மாமிக்கு மரணவேளை நெருங்கியபோது அவர்கள் 'என்னைத்தூக்கி இருத்துங்கள். இதோ நபியவர்கள் என்னிடம் வந்திருக்கின்றார்கள்' என்றார்கள். அதன் பின் அவர்களது இன்னுயிர் பிரிந்தது. எனது பாட்டனார் முஹம்மது இஸ்மாயீல் அவர்கள் மரணித்தபோது அவர்களின் மரண ஊர்வலத்தின் அளவே மூன்று மைல் தூரம் நீளமாயிருந்தது. அவர்களில் கஸ்புடைய ஞானம் கொடுக்கப்பட்ட ஒருவரும் இருந்தார். அவர் ஷைக் அவர்கள் என்னை விரைவாக அடக்கம் செய்யுங்கள். எனக்கு வெட்கமாக இருக்கின்றது. ஏனெனில் நபியவர்கள் எனது வரவை எதிர்பார்த்த வண்ணம் நின்று கொண்டிருக்கின்றார்கள்' என்று கூறியதாகச் சொன்னார்.
(தீஸ் மஜாலிஸ்134, மௌலானா இஸ்யாஸ் ஓர் தீனீ தஃவத் )

அப்படியானால் நபியவர்கள் இன்னும் மரணிக்க வில்லையோ?? நாம் நபியவர்கள் மரணித்து விட்டதாகவல்லவா நம்பியிருக்கின்றோம். எது சரி?

இது பற்றி ஸவூதி அரேபிய உலமாக்கள் பத்வாக் குழுவிடம் கேட்கப்பட்டபோது,

இப்படியான நிகழ்வுகள் நிகந்ததாககக் கூறுவதெல்லாம் குர்ஆன் ஹதீஸுக்கு முற்றிலும் மாற்றமானதாகும். நபியவர்கள் நேரடியாகவோ அல்லது அவர்களது உருவம் மாத்திரமோ மரணிக்கவிருப்பவரிடம் வருவதென்பது அல்குர்ஆன் ஹதீஸுக்கு முரணான விடயமாகும். அவர்களை மறுமையில் அனைவரும் எழுப்பப்பட்டதன் பின் சந்திக்கும் வரைக்கும் யாராலும் காண முடியாது என்று பல்வேறு ஆதாரங்களின் அடிப்படையில் பத்வா மார்க்கத் தீர்ப்பு அளித்துள்ளனர். பார்க்க: (பதாவா இஸ்லாமியா 1- 134)

## 2- நபிமார்களைப் போல் பாசாங்கு பண்ணும் மௌலானாக்கள்.

மௌலானா நானூத்வி அவர்கள் கூறுகின்றார்கள். 'நான் சில வேளைகளில் தஸ்பீஹ் மணியைத் தூக்கும்போது அதன் ஒவ்வொரு மணியும் பாறாங்கற்களைப் போன்று சுமையாக இருப்பதை உணர்வேன். இதயத்திலும் நாவிலும் ஒருவித அடைப்பு ஏற்படுவது போன்றும் உணர்ந்தேன். இது பற்றி மௌலானா ஹாஜி மக்கி அவர்களிடம் வினவிய போது 'இந்தச் சுமை இருக்கின்றதே... இதுதான் அல்லாஹ்விடமிருந்து வஹியைப் பெறும் போது நபிமார்களுக்கும் ஏற்பட்டது. உமக்கும் அல்லாஹ் நபிமார்களுடைய பொறுப்பைத் தரப்போகின்றான் என்றார்கள். இதே போன்ற நிகழ்வு இல்யாஸ் மௌலானா அவர்களுக்கும் ஏற்பட்டது. அது பற்றி ரஷீத் அஹ்மத் கான்கோயியிடம் கேட்ட போது அவர்களுக்கு நடுக்கம் ஏற்பட்டு நபியவர்களுக்கும் இதே நிலைதான் வஹி வரும் போது ஏற்பட்டது என்றார்கள். (ஸவானிஹ் காஸிமி 1- 134)

அல்லாஹ்வின் இறை தியானத்தில் லயித்துப்போன ஒருவர் நபியவர்களைச் சந்தித்தபோது அவர்கள் இவ்வாறு கூறினார்களாம்; ஜக்கரிய்யா மௌலானா அவர்களது இதயத்திலிருந்து உதிப்பாகக் கூடிய அனைத்துமே அல்லாஹ்வின் புறத்திலிருந்து கிடைப்பவையே என்றார்களாம். (மஜாலிஸ் திக்ர் . ப :12)

அன்புமிகு சகோதரர்களே.. சற்று ஆழமாகச் சிந்தியுங்கள். அன்று சூபியாக்கள் தம்மை மகான்கள் என அறிமுகப்படுத்திக் கொண்டு தம்மீது முரீதுகளுக்குப் பிடிப்பும் நம்பகத்தன்மையும் ஒருவகை அச்ச உணர்வும் இருக்க வேண்டுமென்பதற்காக இப்படித்தான் தம்மைப்பற்றி திகிலூட்டக்கூடிய சாகசக் கதைகளையும், பஞ்சதந்திரப் புதிர்களையும் முரீதுகளுக்கு அள்ளி வீசி அவர்களை ஆச்சரியத்திலும் அச்சத்திலும் வீழ்த்தி தாம் சொல்பவை அனைத்துமே வேதவாக்கு என்று நம்பும் அளவுக்குப் பண்ணி விட்டார்கள். அதற்கும் இந்த தப்லீக் பெரியார்களின் பேச்சுக்களுக்கும் எவ்வித வித்தியாசமும் எனக்குத் தெரிவில்லை. இவற்றைச் சொல்வதன் நோக்கம் அவர்கள் மீது பக்தர்களுக்கு அபார மதிப்பு ஏற்பட வேண்டும் என்பதைத் தவிர - அவர்களது பேச்சை வஹியென நம்பி மாற்றுப் பேச்சு பேசக் கூடாது என்பதைத் தவிர வேறென்ன இருக்க முடியும். இஸ்லாத்தின் பக்கம் அழைப்பவர் . குர்ஆன் ஹதீஸின் பக்கம் அழைப்பவர் தன்னைப் பற்றிய சுய புகழாரம் பாடுவதன் - தம் குருநாதர்கள் பற்றித் தேவாரம் பாடுவதன் ரகசியம் என்ன?. புகழ் விரும்பினால் கூட புகழ்ந்து கொள்ளட்டும். ஆனால் எதற்காக நபிமார்களின் சம்பவங்கள் போல் தமக்கும் நிகழ்ந்ததாகக் கூறி நபி போன்று பாசாங்கு பண்ண வேண்டும்??

சற்று சிந்தியுங்கள் நபியவர்களின் வாயிலிருந்து வருபவைகளைப் பொறுத்தவரையிலும் கூட மார்க்க விடயங்கள் மாத்திரமே அல்லாஹ்வின் புறத்திலிருந்து வருபவை. இது தவிர ஏனைய நேரங்களில் அவர்களுக்கே பல தவறுகள் ஏற்பட்டிருக்கின்றன. அப்படியிருக்க நபியவர்களே நேரில் வந்து அந்தப் பெரியாரிடம் ஜக்கரிய்யா மௌலானாவின் இதயத்தில் உதிப்பாகும் அனைத்தும் அல்லாஹ்வின் புறத்திலிருந்து வந்ததாகும் என எப்படிச் சொல்லியிருக்க முடியும்?. ஒன்று அப்பெரியார் நபியவர்களின் பெயரில் பச்சைப் பொய்யைக் கூறியிருக்க வேண்டும் அல்லது அவரிடம் ஷைத்தான் ஆஜராகி மேற்படி விடயத்தைக் கூறியிருக்க வேண்டும். அப்படியல்ல அது உண்மைதான் என்று வாதிடும் சகோதரர்களைப் பொறுத்தவரை ஜக்கரிய்யா மௌலானா நபியவர்களை விட உயர்ந்தவர்கள் என்று அவர்கள் வாதிடுகின்றனர் என்றே அர்த்தம். ஏனெனில் தான் சொல்பவை செய்பவை

இதயத்தில் உதிப்பவை அனைத்தும் அல்லாஹ்வின் புறத்தலிருந்து வருபவை என்பது நபியவர்களுக்கே கொடுக்கப்படாத ஒரு அந்தஸ்த்து அல்லவா ?

மௌலானா தகிய்யுத்தீன் அலி நத்வி அவர்கள் கூறுகையில் ஜக்கரிய்யா மௌலானா அவர்கள் தூங்குவார்கள் ஆனால் நபியவர்களைப் போன்று அவர்களின் கண்கள்தான் தூங்கும் இதயம் தூங்காது. (தீஸ் மஜாலிஸ்: ப: 29)

பேசாமல் ஜக்கரிய்யா மௌலானாவும் ஒரு நபிதான் என்று இவர்கள் சொல்லி ஒரு போடு போட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை .

## 3- நபியவர்கள் மரணிக்கவில்லையா?

அல்குர்ஆன் ஹதீஸ் போதனைப்படி நபியவர்கள் இவ்வுலகை விட்டும் மரணித்து விட்டார்கள். மரணித்தவர்கள் மீண்டும் மஹ்ஷரில் எழுப்பப்படும்வரை கப்ரிலே பர்ஸக் உடைய வாழ்வில் இருக்கின்றனர். இவர்களால் எதையும் கேட்கவோ, பார்க்கவோ, செய்யவோ, பதிலளிக்கவோ முடியாது. இந்த வாழ்க்கை எப்படிப்பட்டது என்பதை அல்லாஹ்தான் அறிவான். ஆனால் இது உலக வாழ்க்கைக்கு முற்றிலும் வேறுபட்டது. நபியவர்கள் மீது நாம் ஸலவாத் சொல்லும்போது அவர்களது உயிரை அல்லாஹ் மீட்டிக் கொடுத்தே பதிலளிக்க வைக்கின்றான் என்று நபியவர்களே கூறியிருக்கின்றார்கள். எனவே அல்லாஹ் உயிரை மீட்டி மக்கள் ஸலாம் சொன்ன விடயத்தை அறிவிக்காதவரை நபியவர்களுக்கே அது பற்றி எதுவும் தெரியாது என்பது இதிலிருந்து தெளிவாகின்றது.
ஆனால் தப்லீக் பெரியார்களின் கருத்து இந்த விடயத்தில் எப்படியிருக்கின்றது என்று தெரிந்துகொள்ள வேண்டுமல்லவா???

<u>ஜக்கரிய்யா மொலானா அவர்கள் சொல்வது....</u>

'முல்லா ஜாமி அவர்கள் ஹஜ்ஜுக்குச் சென்றார்கள் ஹஜ்ஜை முடித்துக் கொண்டு நபியவர்களைப் புகழ்ந்து பாடலொன்றை இயற்றிக்கொண்டு மதீனா செல்லத் தயாரானார்கள். அப்போது மக்கா அமீரின் கனவில் நபியவர்கள் தோன்றி அவரை மதீனாவுக்குச் செல்ல விடாமல் தடுக்குமாறு சொன்னார்கள். இதையறிந்த அப்பெரியார் யாருக்கும் தெரியாமல் ஒழிந்து மதீனா செல்லத் தயாரானார். மீண்டும் நபியவர்கள் அமீரின் கனவில் தோன்றி இவரைத் தடுக்குமாறு கூற அமீரானவர் காவலர்களை அனுப்பி அவரைப் பிடித்து சிறையில் அடைத்து நையப் புடைக்க ஆரம்பித்தார்கள். பின் நபியவர்கள் மறுமுறையும் கனவில் தோன்றி ஏன் அவரைத் துன்புறுத்துகின்றீர்கள். அவர் எவ்வித குற்றமும் செய்யவில்லை. மாறாக அவர் ஒரு பாடலைப் புனைந்து வைத்திருக்கின்றார். அதை அவர் என் முன்னிலையில் பாடினால் முஸாபஹாச் செய்வதற்காக நான் என் கையை வெளியே கொண்டு வர வேண்டியிருக்கும். அதனால் மக்கள் மத்தியில் பித்னா ஏற்படும் என்று அஞ்சுகின்றேன் என நபியவர்கள் கூறினார்கள். (ஹஜ்ஜின் சிறப்பு 803)

இப்றாஹீம் பின் ஸைபான் என்பவர் நபியவர்களின் ஜியாரத்துக்குச் சென்று ஸலாம் கூறிய போது வ அலைக்கஸ்ஸலாம் என அசரீரி கேட்டது. (ஹஜ்ஜின் சிறப்பு 153)

இது போன்ற சம்பவங்கள் இன்னும் பலருக்கு ஏற்பட்ட விபரங்களை ஜக்கரிய்யா மௌலானா எடுத்துக்கூறி நபியவர்கள் கப்ரில் எம்மைப் போன்று உயிருடன் இருக்கின்றார்கள் நாம் பேசுவதை அவர்கள் கேட்கின்றார்கள். அதற்கு பதிலும் அளிக்கின்றார்கள் எனும் நபிவழிக்கு மாற்றமான கருத்தை நிலை நாட்டுகின்றார்கள். தீன் என்பது அல்லாஹ்வின் கட்டளையும் நபியவர்களுடைய வாழ்க்கை முறையும் என்று இவர்கள் போடும் கோஷத்திற்கு இதுதான் அர்த்தமோ? இப்படி தனது கப்ரில் வந்து மண்டியிட்டு பாடல் இசைக்குமாறு தான் நபியவர்கள் வழிகாட்டிச் சென்றார்களோ?

மற்றுமொரு அதிசய நிகழ்ச்சி...

ரிபாய் நாயகம் அவர்கள் நபியவர்களை ஜியாரத் செய்ய வந்த வேளை கப்ரின் முன்னால் நின்று கொண்டு ஒரு பாடலைப் பாடினார்கள். அதன் கருத்தாவது...

நான் உம்மை விட்டும் தூரத்தில் இருந்தபோது உம்மை சந்திக்க என் உயிரைத் தூதனுப்பினேன். பூமி எனது கோரிக்கையை ஏற்று என் சார்பாக என்னுயிரை உம்மிடம் அழைத்து வந்தது. இப்போது நானே உங்கள் சமூகத்துக்கு வந்துள்ளேன். என்னுதடுகள் (முத்தமிட்டு) பேறு பெறுவதற்காக உம் கரத்தை நீட்டுங்கள் என்று பாடினார்கள். உடனே நபியவர்களின் கை கப்ரிலிருந்து வெளிப்பட்டது. அதனை ரிபாய் நாயகமவர்கள் முத்தமிட்டார்கள் இதனை அவ்வருடம் ஹஜ்ஜூச் செய்த தொண்ணூறாயிரம் பேர் தமது கண்களால் கண்டார்கள் அவர்களில் அப்துல் காதிர் ஜீலானியும் ஒருவராவார்கள். (ஸதகாவின் சிறப்பு ப : 941)

4- நபியவர்களிடம் நேரடியாக பேசும் பெரியார்கள்.

ஸூஃபிகள் மாத்திரம் தான் நபியவர்களை நேரடியாகச் சந்தித்து தமக்குத் தேவையான சட்டதிட்டங்களைப் பெற்றுக் கொள்கின்றார்கள் என எண்ணுகின்றீர்களா? அதே இஸ்லாத்துக்கு முரணான கொள்கை தப்லீக் பெரியார்களிடமும் தாராளமாக உள்ளதே! நம்பமுடியவில்லையா? இதைப் படியுங்கள்.

ஜக்கரிய்யா மௌலானா தமது 21 ஆவது மஜ்லிஸில் கூறியதாக ஷைக் தகிய்யுத்தீன் அவர்கள் கூறுகின்றார்கள்.

'ஷைக் நிலாமுத்தீன் அவ்லியா, கத்தஸல்லாஹூ ஸிர் ரஹூல் அஸீஸ் அவர்கள் ( இவர்களது தர்ஹா இன்றைய டில்லி தப்லீக் மர்க்கஸின் வளாகத்தில் உள்ளது குறிப்பித்தக்கது) இசை கேட்கும் வழக்கமுடையவராயிருந்தார்கள். அப்போது டில்லியின் முஃப்தியாக இருந்த காழிஇயாஉத்தீன் அவர்கள் இதனைக் கடுமையாகக் கண்டித்து வந்தார்கள். ஆனால் ஷைக் அவர்களோ எனக்கு மாத்திரம் இசை கேட்க அனுமதிக்கப்பட்டிருக்கின்றது. ஏனெனில் அது சில நோய்களுக்கு நிவாரணியாகும் என்றார்கள். ஆனால் இதை ஏற்றுக் கொள்ளாத முஃப்தி அவர்கள் கடுமையாக விமர்சிக்கவே ஷைக்கவர்கள் 'நான் நபியவர்களிடம் எனக்கு இசை கேட்பது ஆகுமென அனுமதியெடுத்துத் தந்தால் ஏற்றுக் கொள்வீர்களா? என முஃப்தியிடம் கேட்க அவர்களும் சம்மதித்தார்கள். அன்றிரவு முப்தியவர்களின் கனவில் நபியவர்கள் தோன்றி ஷைக் நிழாமுத்தீன் அவர்கள் இசை கேட்பது ஆகும் அவர்களுக்கு சலுகையளிக்கப்பட்டுள்ளது என்றார்கள். அதற்கு முஃப்தியவர்கள் யா ரஸூலல்லாஹ் மார்க்கத்தின்படி தீர்ப்பளிக்கவா? அல்லது கனவில் கண்டபடி தீர்ப்பளிக்கவா? என வினவினார்கள். அடுத்த நாள்காலை முப்தியைச் சந்தித்த ஷைக் அவர்கள் இனியாவது என்னுடைய விடயத்தில் தலையிடாமல் என்னை விட்டு விடுவீர்களல்லவா? என்றார்கள். (தீன் மஜாலிஸ் எனும் நூலில்)

ஜக்கரிய்யா மௌலானாவை தரிசிக்க வந்த நபியவர்கள்.

ஜக்கரிய்யா மௌலானா அவர்கள் ஒருமுறை தம் மஜ்லிஸில் பாடம் நடத்திக் கொண்டிருந்தபோது நபியவர்கள் அவ்விடத்தில் சற்று உயர்ந்த மஜ்லிஸில் உட்காந்திருந்தார்கள். அவர்களுக்கு முன்னிலையில் அழகிய புத்தகங்கள் பல அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அவை அனைத்துக்கும் மேலே ஹஜ்ஜின் சிறப்பு என்ற தஃலீம் புத்தகம் இருந்தது. அதற்குக் கீழ் ஸலவாத்தின் சிறப்பும், அதன்கீழ் ஹயாத்துஸ் ஸஹாபா கிதாபும் இருந்தன. அவ்வேளை அங்கே யூஸூப் பின்னூரி அவர்கள் வந்து நபியவர்களும் ஜக்கரிய்யா மௌலானாவும் பேசிக் கொண்டிருப்பதைக் செவியுற்று புன்னகைத்த வண்ணமே சென்றார்கள்.

(அறிவிப்பவர் அப்துல் ஹமீம் மௌலானா (ஆப் பைத்தீ ப: 134 )

ஹஜ்ஜின் சிறப்பு, ஹயாத்துஸ் ஸஹாபா ஆகிய இரு நூல்களிலும் உள்ள கதைகள் சம்பவங்கள் அனைத்துமே நூற்றுக்கு நூறு உண்மை என்று ஒரு பேச்சுக்கு வைத்துக் கொண்டாலும் கூட அவை புகாரி முஸ்லிம் போன்ற ஹதீஸ் நூற்களையும் தாண்டி முதலாவது இடத்தில் இருப்பதாகக் கூறி தப்லீக் நூல்களே அனைத்து கிரந்தங்களையும் விட சிறந்தது என்ற தவறான கருத்தை மறைமுகமாகச் சித்தரிக்கின்றார்களே!! பார்த்தீர்களா?. தமது தவறான வழிகெட்ட சூபிக் கொள்கையை மக்களுக்கு வலுக்கட்டாயமாகத் திணிக்க எப்படியெல்லாம் நாடகமாடுகின்றார்கள் பாருங்கள்.

## இபாதத்தின் பெயரால் அரங்கேறும் ஷிர்க்குகள் .

இப்பகுதியில் நபி (ஸல்) அவர்களை அல்லாஹ்வைப் போல் தெய்வீகதன்மை வாய்ந்தவாகளாகச் சித்தரித்து அவர்களின் பெயரால் செய்யப்படும் ஷிர்க்கான விடயங்கள் சிலவற்றைச் சுட்டிக்காட்டுகின்றேன். இவர்களது வழக்கமான வழிமுறை யாதெனில் முதலில் நபியவர்களைப் புகழ்வதாகக் காட்டிக் கொள்வார்கள். பின்னர் அவர்கள் தம்மையும் தரிசிக்க வருவதாகக் கதையளப்பார்கள். அதன்பின் நபியவர்களுக்கு தெய்வீகத் தன்மைகள் இருப்பது போன்று சித்தரிப்பார்கள். இறுதியில் தமக்கும் அவ்வாறான ஆற்றல் உள்ளதாக வாதிப்பார்கள். இது இவர்கள் சூபிகளிடமிருந்து தத்தெடுத்த வழிமுறை. இங்கு அதற்கான சில ஆதாரங்களை முன் வைக்கின்றேன்.

அல்லாஹ் அல்லாதவர்களிடத்தில் பிரார்த்திப்பது, உதவி தேடுவது கொடிய ஷிர்க்காகும் என அல்லாஹ்வும் நபியவர்களும் போதித்திருக்கின்றனர்.

அல்லாஹ் அல்குர்ஆனில் கூறுகின்றான்...

அல்லாஹ்வை விடுத்து நீங்கள் பிரார்த்திக்கும் எவருமே அணுவளவு உதவியும் செய்ய சக்தியற்றவர்களாகும். நீங்கள் அவர்களிடம் பிரார்த்தித்தாலும் அவர்களால் அதைக் கேட்க முடியாது. அப்படித்தான் கேட்டாலும் அதற்குப் பதிலளிக்க முடியாது. மறுமையில் நீங்கள் ஷிர்க் வைத்ததனால் உங்களை அவர்களும் (காப்பாற்ற) மறுத்து விடுவார்கள். (ஸூரா பாதிர் 13-14)

மற்றுமொரு இடத்தில்..

நபியே சொல்லுங்கள். நான் எவ்வித நன்மை கொடுக்கும் சக்தியையோ, (மக்களுக்கு நேரும்) தீங்கைத் தடுக்கும் சக்தியோ சொந்தமாக்கியிருக் வில்லை. எனக்கு மறைவான விடயங்கள் பற்றிய ஞானம் இருந்திருப்பின் நல்லவற்றை மாத்திரமே அதிகமதிகம் நான் செய்திருப்பேன். அத்துடன் எனக்கு எவ்வித கெடுதிகளும் ஏற்பட்டிருக்கா(தவாறும் செய்திருப்பேன்.) (ஸூரத்துல் அஃராப் 188)

நபியவர்களிடத்தில் ஒருவர் மிகவும் கொடிய செயல் எது? எனக் கேட்டபோது அல்லாஹ்வே உன்னைப் படைத்திருக்கும் போது அவனுக்கு நிகராக ஒருவரை ஆக்குவதே மிகக்கொடிய பாவமாகும் என்றார்கள். ( ஆதாரம் புகாரி 4117 .)

இது இப்படியிருக்க தப்லீக் பெரியார்கள் செய்த சில காரியங்களை இந்த நபி மொழியோடு ஒப்பிட்டுப் பாருங்கள்.

1- ஜக்கரிய்யா மௌலானா தான் ஹஜ்ஜுச் செய்த வரலாறு பற்றி எழுதுகையில் 'ஹஜ்ஜு10_க்குப் புறப்பட்டு நாற்பது தினங்கள் சென்ற பிறகு நாங்கள் நபியவர்களின்

கப்ருக்கு முன்னால் வந்து நின்று நபியவர்களை நோக்கி 'நாங்கள் பிறருக்கு ஹஜ்ஜுச் செய்ய வந்துள்ளோம், எங்களுக்கு வாகன வசதி கிடைக்காவிட்டால் மிகுந்த சிரமமேற்படும் நபிகளாரே! என்று முறையிட்டோம். என்ன ஆச்சரியம் நாங்கள் கூட்டி வந்த காட்டரபிக்கு ஒட்டகமொன்று கிடைத்தது. (தீஸ் மஜாலிஸ் ப: 44)

2-ஸதகாவின் சிறப்பில் வருவதாவது ..

மதீனாவை அண்மித்த பகுதியில் ஒரு ஹாஷிம் குலப்பெண் வாழ்ந்து வந்தாள். அங்கிருந்த சில வேலையாட்கள் அவளுக்குத் தொந்தரவு கொடுத்து வந்தனர். இவர்களின் தொல்லை பொறுக்கமுடியாமல் அவள் நபியவர்களிடத்தில் தனக்கு அபயமளிக்குமாறு பிரார்த்தித்தாள். அப்போது (ரவ்ழா) நபியவர்களின் கப்ரிலிருந்து என்னிடம் உனக்கு நல்வழிகாட்டல் இல்லையா? பொறுமையைக் கடைப்பிடிப்பாயாக என அசரீரி கேட்டது. அதன் பின் விரைவிலேயே அந்த மூன்று நபர்களும் மரணித்து விட்டனர். அவர்களது தொல்லையும் முடிவுற்று விட்டது. (ஸதகாவின் சிறப்பு 961)

நபியவர்கள் தம் கப்ரிலிருந்தவாறே பணம் கொடுத்த அதிசயம்.

ஸதகாவின் சிறப்பில் வருவதாவது ...

முஹம்மதிப்னு முன்கதிர் என்பவர் சொல்கின்றார். எனது தந்தையிடத்தில் ஒருவர் ஒருதொகைப் பணத்தை அமானிதமாக ஒப்படைத்து விட்டு ஜிஹாதுக்குச் சென்றார். உமக்குத் தேவைப்பட்டால் அதை எடுத்துச் செலவு செய்யுங்கள். பிறகு எடுத்துக் கொள்ளலாம் என்றும் சொல்லிச் சென்றார். எனது தந்தைக்கு அவசியத்தேவை ஏற்பட்டதனால் அதை எடுத்துச் செலவு செய்யும்படியாகி விட்டது. பின்னர் அம்மனிதர் வந்து தனது பணத்தைக் கேட்டபோது (அவரிடம் பணமில்லை) அடுத்த நாள் தருகின்றேன் என்று வாக்களித்து விட்டார்கள். பின்பு கவலையுடன் நபியவர்களுடைய கப்றுக்குச் சென்று அங்கு தனது பிரச்சினையை நபியவர்களிடம் முறையிட்டுப் பிரார்த்தித்தார்கள். பின் மிம்பறுக்குப் பக்கத்திலும் சென்று பிரார்த்தித்தார்கள். ஸுபஹ் வேளை நெருங்கியிருக்கும். எனது தந்தை கப்ரிடத்தில் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். என்ன ஆச்சரியம்!! இருளிலே ஒரு அசரீரி. முஹம்மதின் தந்தையே இதைப் பிடியுங்கள்! என்று ஒரு சத்தம். என் தந்தை கையை நீட்டியதும் ஒரு பணப்பையை நபியவர்கள் கப்றுக்குள் இருந்தவாறே கொடுத்தார்கள். அதை எடுத்து தனது அமானிதத்தை தந்தை உரியவரிடம் ஒப்படைத்தார். (ஸதகாவின் சிறப்பு 943 )

தீன் என்பது அல்லாஹ்வுடைய கட்டளையும் நபி (ஸல்) அவர்களுடைய வாழ்க்கை வழிமுறையும் என்று கூறிக் கொள்ளும் இவர்கள் அல்லாஹ்வும் நபியவர்களும் தடுத்த, நபியவர்கள் தமது வாழ்நாள் அனைத்தையும் எதை ஒழித்துக்கட்டப் பாடுபட்டார்களோ அந்த ஷிர்க்கையும் தர்ஹா வழிபாட்டையும் இபாதத் எனும் பேரில் பாவமறியா பாமர வெள்ளை உள்ளம் கொண்ட மக்களிடம் விதைக்கும் இந்த நிலையை யாரிடம் முறையிடுவது? அல்லாஹ்தான் நேர்வழி காட்ட வேண்டும் . இவ்வாறான விடயங்கள் தீனுடையவை என்பதை இவர்களுக்கு அல்லாஹ் சொன்னானா? நபியவர்கள் சொன்னார்களா? இவையெல்லாம் பச்சை ஷிர்க் என்று அல்லாஹ்வும் ரஸூலும் சொல்லவில்லையா? அப்படியிருக்க குர்ஆன் ஹதீஸில் தடுக்கப்பட்டவைகளையெல்லாம் இபாதத் என அறிமுகப்படுத்தும் இவர்கள் தீன் என்பது அல்லாஹ்வின் கட்டளையும் நபியுடைய வழியும் என்று சொல்லி அழைப்பது எவ்வளவு பெரிய மோசடி!

இந்த பச்சை ஷிர்க்கான தர்ஹா வழிபாடும் கப்ரில் மரணித்தவர்களிடம் பிரார்த்திப்பதும் இவர்களைப் பொறுத்தவரை இபாதத்களாகக் கருதப்படுவதால்தானோ என்னவோ தப்லீக்கின் கேந்திர ஸ்த்தலமாகிய டில்லி மர்க்கஸின் முன் இருக்கும் தர்ஹாவில் நடக்கும் அத்தனை அனாச்சாரங்களையும் வேடிக்கை பார்த்துக் கொண்டு இருக்கின்றார்கள். டில்லி மர்கஸ் பள்ளிவளாகத்திலும் மூன்று கப்ருகள் இன்று வரைக்கும் அகற்றப்படாமல் உள்ளன.

இவர்களைப் பொறுத்தவரைக்கும் கப்ர் வணக்கமெல்லாம் இபாதத்களல்லவா? அவற்றை எப்படி அகற்ற முடியும்?.

இது போல ஹஜ்ஜுக்குச் சென்ற ஒருவர் பசியேற்பட்டபோது நபியவர்களிடம் நான் உங்கள் விருந்தாளி என்று கப்ரில் சொல்லி விட்டு உட்காந்திருக்க கப்ரிலிருந்து நபியவர்களின் கைவெளிப்பட்டு ஒரு பண முடிப்பைக் கொடுத்தாகவும் அதிலுள்ள பணத்தின் பரக்கத் காரணமாக நீண்ட நாட்களுக்கு அதை செலவு செய்த கதையைப் பாருங்கள். (பளாயிலுல் ஹஜ் 925)

நபியவர்கள் கப்ரிலிருந்தவாறே ஒருவருக்குப் போர்வை கொடுத்த கதை பார்க்க: ஹஜ்ஜின் சிறப்பு பக்கம்: 944.

நபியவர்கள் கப்ரிலிருந் வாறே ரொட்டி கொடுத்த சம்பவம் பார்க்க வேண்டுமா ? பாருங்கள் ஹஜ்ஜின் சிறப்பு பக்கம்: 797

மற்றுமொருவர் நபியவர்களிடம் பசிக்கு உணவளிக்குமாறு பிரார்த்தித்ததும் கிச்சடியும் குழம்பும் கொடுத்த நிகழ்ச்சியைப் பார்க்க விரும்பின் புரட்டுங்கள் ஹஜ்ஜின் சிறப்பு பக்கம் 945.

ஷாஹ் வலிய்யுல்லாஹ் ஒருமுறை நபியவர்களிடம் உணவு கேட்டு முறையிட்டபோது நபியவர்கள் கனவில் சுவையான சோறும் நெய்யும் அடங்கிய மரவையைக் கொடுத்தாகவும் பின்னர் நீர் புகட்டியதாகவும் விழித்துப் பார்த்தபோது கையில் உணவின் நெய்மணம் வீசியதாகவுமுள்ள சம்பவத்தைப் பார்க்க: ஸதகாவின் சிறப்பு பக்கம் 799

நபியவர்கள் தமது தோழர்களுக்குப் போதனை செய்தபோது நீ எதைக் கேட்டாலும் அல்லாஹ்விடமே கேள் எவ்வித உதவி தேடுவதாயினும் அல்லாஹ்விடமே தேடு என்று போதித்தார்களல்லவா? அவர்களின் கப்ரின் முன்னாலேயே அவர்களது பெயரிலேயே இத்தனை அனாச்சாரங்களும் அரங்கேற்றப்படுகின்றன. இத்தனைக்கும் வஸ்த்துக்களால் எதுவும் ஆவதில்லை. அல்லாஹ்வினால்தான் அனைத்துமே ஆகின்றன என்றும் சொல்லிக் கொள்வார்கள். அப்படியானால் நபிகளார் உட்பட கப்ரில் அடக்கப்பட்டிருக்கும் அனைவருமே அல்லாஹ்தானோ? நஊது பில்லாஹ்.

கப்ர் வணக்கம் கூடுமா? கப்ரிடம் பரக்கத் தேடலாமா? கப்ராளிகளுக்கு நல்லமல்கள் செய்து அனுப்பலாமா? அவர்களுக்கு நடப்பவை எமக்குத் தெரியுமா? எமக்கு நடப்பவை அவர்களுக்குத் தெரியுமா?

ஆம் என்பதே தப்லீக் நூல்களிலிருந்தும் அதன் பெரியார்களின் வழிகாட்டல்களிலிருந்தும் எமக்குக் கிடைக்கும் பதிலாகும். அதற்கு முன் இதைப் பற்றி நபியவர்கள் என்ன சொல்லியிருக்கின்றார்கள்?

நபியவர்கள் சொல்லியுள்ளார்கள்..
எனது கப்ரை விழா எடுக்கப்படும் இடமாக்கி விடாதீர்கள். யூத கிறிஸ்தவர்களுக்கு அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும். ஏனெனில் அவர்களில் ஒரு நல்ல மனிதர் இறந்து விட்டால் அவரை அடக்கி விட்டு (அதில் கட்டடம் கட்டி ) அதனை வணங்குமிடமாக்கிக் கொள்வார்கள். இவர்கள்தான் படைப் பினங்களிலேயே மிகக் கெட்டவர்கள் என்றார்கள். (ஆதாரம் புகாரி 480).

அதே போன்றே கப்ரை வலம் வரல், கப்ரின் மண்ணை எடுத்து பரக்கத்துப் பெறல், அதன் பெயரில் நேர்ச்சை செய்தல், கப்ராளிகளுக்கு நன்மைகளைச் செய்து ஹதிய்யாச் செய்தல் அனைத்துமே இஸ்லாம் தடை செய்த பித்அத்தான ஷிர்க்கான விடயங்களாகும்.

இந்த அனைத்து விடயங்களும் தப்லீக் பெரியார்களால் அங்கீகரிக்கப்பட்டதாகவும் ஏன்? அவர்களே முன்னின்று இந்த விடயங்களைச் செய்ததற்காக ஆதாரங்களைக் காணும் போது தான் ஆச்சரியம் கலந்த வேதனையாக இருக்கின்றது.

மௌலானா ஜக்கரிய்யா சொல்கின்றார்கள் ...
'கப்றிலுள்ள பெரியார்களுக்கு நல்லமல்களைச் செய்து அனுப்புவதில் அதிக கவனஞ் செலுத்துங்கள். ஏனெனில் நீங்கள் இப்படிச் செய்யும் போது கப்ராளிகளுடைய ரூஹூகள் உங்களின் பக்கம் திரும்பும் அவற்றிலிருந்து பல பரக்கத்துக்களும் உதவிகளும் உங்களுக்கு உண்டாகும். (தீஸ் மஜாலிஸ் 211)

மேற்படி செய்தது அல்லாஹ்வின் கட்டளையா? நபியின் வழிமுறையா?

மற்றுமொரு இடத்தில்... அவ்லியாக்களுடைய கப்ருகளைத் தரிசித்து அதன் மூலம் ஏதேனும் உதவிகளை ஒருவர் பெற்றால் அது தான் பைஅத் செய்திருக்கும் குருநாதரின் ஷைக்கிடமிருந்தே உண்டானது என எண்ண வேண்டும். ஏனெனில் அந்த அவ்லியாவின் கப்ரிலிருந்து கிடைத்த பரக்கத் இந்த ஷைக்கின் ஊடாகவே கிடைத்திருக்கின்றது. (ஸக்காலத்துல் குலூப் 137)

ஸவானிஹூ முஹம்மத் எனும் தப்லீக் பெரியாரின் நூலொன்றில் உள்ளதாவது...
'ஜக்கரிய்யா மௌலானா அவர்களது சீடர்களில் ஒருவர் ஷைக் கன்கோயி அவர்களின் கப்ரைத் தரிசித்தார். அப்போது ஷைக் அவர்கள் கப்ரினுள் 'கவ்கப் துர்ரிய' எனும் கிதாபை வாசித்துக் கொண்டிருக்கக் கண்டார். அதே போல் கன்கோயி அவர்கள் மரணித்த வேளை செய்யித் முஹம்மத் என்பவர் அவர்களது கப்ருக்கு அருகிலேயே முறாக்கபாவில் இருந்து கொண்டிருந்தார்கள். (ஸவானிவ் முஹம்மது யூஸுப் 135)

ஷைக் சர்தார் முஹம்மது பாக்கிஸ்த்தானி அவர்கள் கூறுகின்றார்கள். மதீனாவிலுள்ள மஸ்ஜிதுன் நபவியின் அல் மஜீத் கதவுக்குட்பட்ட இடம் பத்து வருடங்களாக தப்லீக் ஜமாஅத்தினரின் கேந்திர ஸ்த்தலமாக இருந்து வந்தது. அப்போது தப்லீக்கின் அமீராக இருந்த முஹம்மது யூஸுப் திஹ்லவி அவர்களுடன் டில்லியில் நிஜாமுத்தீன் பகுதியில் இருந்த இல்யாஸ் (ரஹ்) அவர்களின் கப்றுக்கு நள்ளிரவில் செல்வோம். அங்கு கப்ரைச் சுற்றி நீண்ட நேரம் தலைகளைத் தாழ்த்தியவர்களாக முறாக்கபா எனும் சிந்தனையில் இருப்போம். அப்போது (ஹயாத்துஸ் ஸஹாபா) எனும் நூலை எழுதிய யூஸுப் (ரஹ்) சொல்வார்கள் 'நிச்சயமாக இந்தக் கப்றிலிருக்கும் மௌலானா இல்யாஸ் (ரஹ்) அவர்கள் தனக்கு அல்லாஹ்வின் புறத்திலிருந்து இறங்கும் ஒளியினைத் தமது சீடர்களுக்கு அவரவர் தரீக்காவின் மீது கொண்ட பற்று நம்பிக்கைக்கேற்ப பங்கு வைத்துக் கொடுப்பார்கள்' என்று கூறினார்கள். (தப்லீக் ஜமாஅத் எனும் நூல் 63-65)

## மறைவான ஞானத்தை மனிதனும் அறியலாமா?

அல்லாஹ் கூறுகின்றான்...
நபியே சொல்லுங்கள். அல்லாஹ்வைத் தவிர வானத்திலோ பூமியிலோ உள்ள எவருமே மறைவான விடயங்களை அறிய மாட்டார்கள். (அந் நம்ல் 65)

நபியே கூறுங்கள்.. எனக்கு மறைவான விடயங்கள் தெரியுமென்றிருந்தால் எனக்கு நன்மை பயப்பவைகளை மாத்திமே செய்து கொண்டிருந்திருப்பேன். எவ்வித தீங்குகளும் எனக்கு ஏற்பட்டிருக்காது. (அல் அன்பால் 188 )

இவற்றைக் கவனத்தில் வைத்துக் கொண்டு பின்வரும் பெரியார்கள் பற்றிய திகிலூட்டும்

சம்பவங்களையும் வாசியுங்கள்.

1-தான் மரணிக்கும் நேரத்தை முன்கூட்டியே சொன்ன பெரியார்கள்.

யஃகூப் அஸ்ஸனூஸிய் சொன்னதாக ஜக்கரியா மௌலானா சொல்கின்றார்கள்.
'எனது சீடர்களில் ஒருவர் என்னிடத்தில் வந்து நான் நாளை ளுஹருக்குப் பின் மரணிப்பேன் என்றார். மறுநாள் ளுஹர் நேரமானதும் சென்று கஃபாவைத் தவாபு செய்தார். அதன் பின் சொன்னது போன்றே மரணித்து விட்டார். நானே அவரைக் குளிப்பாட்டி கபனும் செய்தேன். கப்றுக்குள் அவரை வைத்த போது கண்களைத் திறந்து விட்டார். நானோ ஆச்சரியத்துடன் மரணித்ததன் பின் எப்படி உயிர் பெற்றாய்? என்றதும் ஆம் நான் உயிருடன் தான் இருக்கின்றேன் அல்லாஹ்வின் மீது காதல் வைத்திருக்கும் எவரும் மரணிப்பதில்லை என்றார். (ஸதக்காவின் சிறப்பு 657)

இதில் எத்தனை அபத்தங்கள் என்பதைப் பார்ப்போம்.

ஷைக்குக்கே தெரியாத ஞானம் சிஷ்யனுக்குத் தெரிந்திருக்கின்றது. இவ்வகையில் இவர் குருவை மிஞ்சிய சீடன். இவர் மரணமடைந்த நேரம் நாள் போன்றவற்றைத் துல்லியமாக அறிந்து வைத்திருந்திருக்கின்றார். அப்படியானால் அல்லாஹ் குர்ஆனில் கூறும் பின்வரும் வசனம் பற்றி...

எந்தவொரு ஆத்மாவும் நாளைக்கு என்ன நடக்குமென அறியாது. எந்த ஆத்மாவும் எவ்விடத்தில் மரணிக்குமென்றும் அறியாது அல்லாஹ்தான் நிச்சயமாக அனைத்தையும் அறிந்தவனும் ஞானமுள்ளவனுமாகும். (ஸூரா 34) என்று சொல்வது பொய்யோ ? எதை நம்புவது ??

இவர் உயிரோடு இருந்திருப்பின் தன்னைப் பிறர் குளிப்பாட்டி தனது மறைவிடங்களைப் பார்க்க அனுமதித்திருக்கின்றாரே! இவருக்கு வெட்கம் சூடு சொறணை எதுவுமில்லையா? வெட்கம் ஈமானின் ஒரு பகுதியென நபியவர்கள் சொல்லியிருக்கின்றார்களே அப்படியாயின் ஈமான் முழுமையற்ற இவர் எப்படி இறை நேசராக முடிந்தது.?

இவர் உயிரோடிருக்கின்றார் என்று அறிந்து கொண்டே இவரது குரு இவரைப் புதைத்திருக்கின்றார். இது பாரதூரமானதொரு கொலைக்குற்றமாகும். இஸ்லாமியச் சட்டத்தின் படி இவருக்கு மரண தண்டனை விதிக்க வேண்டுமே?

இது போன்றே ஜக்கரிய்யா மௌலானாவின் தாயும் சிறிய தந்தையும் தாம் மரணிக்கும் நேரத்தைத் துல்லியமாகக் குறித்துக் கூறியதாகவும் அதே நேரத்தில் சொன்னபடி மரணமடைந்ததாகவும் சொல்லும் அதிசய நிகழ்ச்சி. பார்க்க: (வழாயிபு றமழான் 22)

மௌலானா யூஸுபுக்கும் இன்ஆமுல் ஹஸன் இருவருக்குமிடையில் நடந்த உரையாடல்..

யூஸுப் : நான் என் கடமையைச் செய்து முடித்து விட்டேன் இனி நான் உலகிலிருக்க வேண்டிய அவசியமில்லை.

இன்ஆம்: அப்படியல்ல. நீங்கள் செய்ய வேண்டிய நிறைய வேலைகள் பாக்கியிருக்கின்றனவே.

யூஸுப்: எனக்கு எத்தனை வயது தெரியுமா?

இன்ஆம்: நாப்பத்தியெட்டு வயது.

யூஸுப்: இந்த வயது போதும்.

இன்ஆம்: இல்லையில்லை. உலகிக்கு நீர் செய்ய வேண்டிய சேவைகள் நிறையவே இருக்கின்றன.

யூஸுப்: 48 வருடங்கள் சேவை செய்தது போதாதா?

இன்ஆம்: எதற்காக இப்படிப் பேசுகின்றீர்கள். மரணம் என்பது எப்போதும் வரக் கூடியதே. அதை விட்டும் யாரும் தப்பிக்க முடியாது. ஆனால் நீங்கள் இன்னும் நிறைய செய்ய வேண்டிய விசயங்கள் இருக்கின்றனவே.

யூஸுப்: நல்லது நீங்கள் உங்களுக்குள் மஸூராச் செய்து நான் எவ்வளவு காலம் இருந்து எனது பணிகளைச் செய்து முடிக்க வேண்டுமென்று சொல்லுங்கள் என்றதும் இதில் மஸூராப் பண்ண என்ன தேவையிருக்கின்றது. அஜல் முடிந்தால் மறுமைக்குக் செல்ல வேண்டியதுதான் என்றார்.

யூஸுப்: அப்படியாயின் எனக்கு 48 வயது போதும். நான் எனது திட்டத்தை முடித்து விட்டேன். மீதமுள்ளதை இருப்பவர்கள் பார்த்துக் கொள்ளட்டும். நான் இருக்க வேண்டிய அவசியமில்லை என்றார். உண்மைதான் அன்றைக்கு அடுத்த நாளே அவர்கள் இறையடியெய்தி விட்டார்கள். இன்னா லில்லாஹி.

இப்படி தான் மரணிக்கும் தருணம் ஒருவருக்குத் தெரிந்திருந்தால் மறைவான ஞானம் அல்லாஹ்வுக்கு மாத்திரமே இருக்கின்றது என்பதில் என்ன அர்த்தம் இருக்கின்றது. இப்படி அறிய முடியுமாயின் காலம் முழுதும் ஒருவன் பாவஞ் செய்து விட்டு இறுதியில் தான் மரணிக்க முன் தவ்பாச் செய்து கொண்டால் போதுமென ஒவ்வொருவரும் நினைத்தால் இந்த ஷரீஅத் சட்டங்களின் நிலை என்னவோ?. இவ்வாறெல்லாம் இவர்கள் கூறுவதன் உள் நோக்கம் யாதெனில் தம்மை சாதாரண மக்களை விட ஒரு படி உயர்த்தி யாருக்கும் தெரியாத சில விடயங்கள் தமக்குத் தெரியும் என்பதாக பாமரர்களை நம்பவைத்து ஒருவித குருபக்தியை உருவாக்குவதேயன்றி வேறென்ன இருக்கமுடியும்?.

தப்லீக் பெரியார்களின் மற்றும் சில மார்க்க விரோதக் கருத்துக்கள்.

கஃபாவைப் பற்றி...
மரணித்தவர்கள் பற்றி...
தரீக்காக்கள் பற்றி...
பைஅத் செய்வது பற்றி...
ஜிஹாத் செய்வது பற்றி...

இவ்வாறு எத்தனையோ விடயங்களில் தப்லீக் பெரியார்கள் ஷரீஆவுக்கு முரண்படும் விடயங்கள் ஆயிரக்கணக்கில் உள்ளன. முடிந்தளவு அவை பற்றி விளக்க முயற்சிக்கின்றேன்.

இரண்டாம் நம்பர்.

தொழுகை.

இஸ்லாத்தின் அடிப்படை விடயங்களில் இரண்டாவது இடத்தை வகிப்பது தொழுகையாகும். தொழுகையை விட்டவன் முஸ்லிமாக இருக்க முடியாது. தொழுகையின் முக்கியத்துவம் சிறப்பு அதனை விடுவதால் ஏற்படும் இன்னல்கள் பற்றியெல்லாம் அல் குர்ஆனிலும் நபிமொழியிலும் அதிக இடங்களில் விபரித்துக் கூறப்பட்டுள்ளன.

தப்லீக் ஜமாஅத்தைப் பொறுத்தவரைக்கும் அவர்களின் தஃலீம் தொகுப்பான அமல்களின் சிறப்பில் தொழுகைக்காக ஒரு பகுதியே ஒதுக்கப்பட்டுள்ளது. அதிலே தொழுகையின் அவசியம், அதன் சிறப்புகள், தொழுகையை விட்டவர்களுக்குரிய தண்டணைகள் பற்றியெல்லாம் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இதையெல்லாம் எவரும் குறை கூற வேண்டியதில்லை.

தஃலீம் தொகுப்பு புத்தகத்தின் வடிவமைப்பே வித்தியாசமானது திட்டமிட்டு இதனை ஜக்கரிய்யா மௌலானா மிக்க வியூகம் வகுத்து தமது மார்க்க விரோதக் கருத்துக்கள் பாமரர்களுக்கு இலகுவில் புரிந்து விடாதபடி திட்டமிட்டு வகுத்திருக்கின்றார்கள். அதைத் தமிழில் தந்த நிஜாமுத்தீன் அதைவிட மேலே சென்று மௌலானா கூறிய மார்க்க விரோதக் கருத்துக்களை இலகுவில் புரியாத வகையில் இலக்கிய நயம்பட இலைமறை காயாக ஆங்காங்கே புகுத்தியிருக்கின்றார்கள். ஆரம்பத்தில் அல்குர்ஆன் வசனங்களை அரபியில் போட்டு அதன் அர்த்தத்தையும் தருவார்கள். இதன் பின் ஆதாரப்பூர்வமான நபி மொழிகள் சிலதைக் கூறி விடயத்துக்கு வலுவூட்டுவார்கள். இதனால் வாசகர்கள் கவரப்பட்டு ஆர்வத்துடன் தொடர்ந்து படிக்க முற்படுவார்கள். அதன் பின் சில பலவீனமான ஹதீஸ்களின் விளக்கங்கள் வரும். பின்னர் புனையப்பட்ட முகவரியில்லாத சில விடயங்கள் 'ஒரு ஹதீஸில் வருவதாவது; ஒரு அறிவிப்பில் சொல்லப்பட்டுள்ளதாவது' எனும் பெயரில் இடம் பெறும். அதன்பின்னர் பெரியார்களின் வரலாறு எனும் பெயரில் பல்வேறு விதமான போலிக்கதைகளும் நடக்காத கற்பனைச் சம்பவங்களும் சாகசச் செயல்களாகச் சித்தரிக்கப்பட்டு நவரசக் கதைகளுக்கு உரமூட்டுவது போல் அசந்து போன மக்களுக்கு உற்சாகப் பானமாக ஊட்டப்படும். ஏமாந்து பழகிப்போன எம் சமூதாயம் அவை அனைத்துமே இஸ்லாம்தான் என்று எண்ணித் தொலைத்து விடும் இதுதான் தஃலீமைப் பற்றிய சுருக்கம்.

<u>விரிவாகக் கூறுவதாயின்...</u>

தப்லீக் சகோதரர்கள் மக்களைத் தொழுகைக்கு அழைக்கின்றார்கள் என்பதை எவரும் மறுக்க முடியாது. ஏனெனில் எனக்கே தப்லீக்கில் பலதடவைகள் நீண்ட வக்துக்களில் வெளிக்கிளம்பிச்சென்ற அனுபவமுண்டு. இவர்களது முயற்சியால் பலர் தொழுகையாளர்களாக ஆனதையும் பல பாழடைந்த பள்ளிகள் எழுச்சி பெற்றதையும் கூட மறுக்க முடியாது. அவையெல்லாம் இதனால் கிடைக்கும் நன்மைகள். அதே போல் இதிலுள்ள பாதகங்களையும் கவனிக்கத்தானே வேண்டும். ஒரு மனிதன் ஐவேளை தொழக் கூடியவனாக இருக்கின்றான் என்பதற்காக அவன் செய்கின்ற ஏனைய தவறுகள் எதையும் கண்டு கொள்ளாமல் விட்டு விடமுடியுமா? முடியாதுதானே! அப்படியானால் இப்போது இங்கு தொழுகை விடயத்தில் தப்லீக் மக்களிடத்திலுள்ள தவறுகளையும் சொல்லத்தானே வேண்டும். அது தானே நீதி? எனவே தப்லீக் சகோதரர்களாயினும் ஏனைய பொது சகோதரர்களாயினும் சரி பின்வரும் குற்றச்சாட்டுக்களைச் செவிமடுங்கள். அவதானியுங்கள் பின் அது சரிதானா? என சிந்தியுங்கள். தீர்ப்புக் கூறுவது உங்கள் கைகளில். அல்லாஹ்வுக்குப் பயந்து நாளை மறுமையில் அவன் எம்மை விசாரிப்பான் என்பதை உள்மனதில் நிறுத்தி வாசியுங்கள். சரியாயின் அதை ஏற்றுக்கொண்டு உங்கள் முடிவை மாற்றுவதைத் தவிர வேறு வழியில்லை. பிடிவாதத்தை விடுங்கள். அதனால் மறுமையில் எமக்கு எவ்வித பலனும் ஏற்படப் போவதுமில்லை. அல்லாஹ் நாளை மறுமையில் எம்மை விசாரிக்கும் போது குர்ஆன் சொன்னபடி வாழ்ந்தாயா? நபிகளின் வழிகாட்டல்களின்படி வாழ்ந்தாயா? என்றே விசாரிப்பான். நீ அந்த ஜமாஅத்தை ஆதரித்தாயா? இந்த இயக்கத்துக்காகப் பாடுபட்டாயா? என்றெல்லாம் கேட்கப் போவதில்லை. ஒரு அமைப்பை ஒருவர் ஆதரிப்பதும் புறக்கணிப்பதும் அவரவர் தனிப்பட்ட விருப்பத்தைப் பொறுத்தது. ஆனால் நபி வழியை ஒவ்வொருவரும் ஆதரித்தே ஆகவேண்டும். அதன்படியே வாழ்ந்தாக வேண்டும். இல்லாவிட்டால் செல்லுமிடம் நரகந்தான்.

இப்போது விடயத்துக்கு வருவோம்.

முறைப்பாடு : 1. <u>தப்லீக் பெரியார்களும் மத்ஹபு வெறியும்...?</u>

முஸ்லிம்களில் மத்தியில் நான்கு மத்ஹபுகளைப் பின்பற்றுவோரின் எண்ணிக்கை கணிசமாக இருந்தாலும் அனைத்து அறிஞர்களுமே நபிவழிக்கு மாற்றமாக மத்ஹபுச் சட்டங்கள் அமையும்போது நபி வழிப்படியே நடக்க வேண்டுமென்ற முடிவிலுள்ளனர். அதுவே சரியானதுமாகும். நான்பு மத்ஹபுகள் என்பது அந்த நான்கு இமாம்களும் திட்டமிட்டு உருவாக்கி விட்டு இதைத்தான் மக்கள் பின்பற்ற வேண்டுமென்ற எண்ணத்தில் செய்ததன்று. மாறாக அவர்கள் வழங்கிய தீர்ப்புக்கள் கருத்துக்கள் போன்றன. காலப்போக்கில் மக்களால் பின்பற்றப்பட்டு வந்ததால் ஏதேச்சையாக உருவானதே மத்ஹபுகளாகும். அப்போதும் கூட அந்த இமாம்கள் தாம் கூறிய கருத்துக்களும் தீர்ப்புக்களும் நபிவழிக்கு மாற்றமாக இருப்பின் தமது கருத்தைத் தூக்கியெறிந்து விட்டு நபிவழிப்படி அமல்ச் செய்யுமாறு கட்டளையிட்டுள்ளார்கள்.

இமாம் ஷாபி அவர்கள் கூறுகின்றார்கள்...
*எம்மில் ஒருவர் நபி (ஸல்) அவர்களின் ஹதீஸுக்கு மாற்றமாகச் சொன்னால் அதை யாருமே எடுத்துச் செயற்படுத்தக் கூடாது என்பதே எனது கருத்தாகும். எந்த ஒரு அறிஞருக்கும் ஆதாரப் பூர்வமான ஹதீஸுக்கு மாற்றமாகப் பேசும் உரிமை கிடையாது.* (நூல் : ரிஸாலா 219 ம் பக்கம்)

*எங்களுடைய பேச்சுக்களை மாத்திரம் ஆதாரமாகக் கொண்டு நாங்கள் எங்கிருந்து (என்னஆதாரத்தின் அடிப்படையில்) சொன்னோம் என அறியாமல் தீர்ப்பு வழங்குவது யாருக்கும் கூடாது என இமாம் அபூஹனீபா, மாலிக் ஷாபி, அஹ்மத் ஆகிய நால்வருமே கூறியுள்ளார்கள்.* (நூல் : அல் இன்திகாஃ 145 பக்கம்).

நான் ஒரு விடயத்தைச் சொல்லியிருந்தால் அதனை அல்லாஹ்வின் வேதத்தோடும் நபியவர்களின் ஸுன்னத்தோடும் உரசிப் பாருங்கள். அவ்விரண்டுக்கும் மாற்றமாக என் சொல் இருந்தால் என் சொல்லைச் சுவற்றில் தூக்கி வீசி விடுங்கள். என்று நான்கு இமாம்களும் கூறியுள்ளார்கள். (நவவியின் அல் மஜ்மூஃ 1-63)

இமாம் அபூஹனீபா (ரஹ்) அவர்கள் மார்க்கத்தீர்ப்பு வழங்கிவிட்டு இவ்வாறு கூறுவார்களாம்; இதுதான் என்னுடைய அறிவுக்கு எட்டிய விளக்கம். இதைவிடத் தெளிவான விளக்கம் யாருக்கும் கிடைத்தால் அவர் அதைப் பின்பற்றுவதுதான் சரியானது. (தன்பீஹுல் காபிலீன் முன்னுரை)

அது மாத்திரமல்ல இவர்களுக்குப் பின்வந்த எவ்வளவோ இமாம்கள் தான் ஒரு குறிப்பிட்ட மத்ஹபுடைய இமாம்களாக கணிக்கப்பட்டாலும் கூட எத்தனையோ விடயங்களில் மத்ஹபுவைப் பின்பற்றுவது கட்டாயமில்லை என வலியுறுத்தியுள்ளதைப் பார்க்கலாம்.

ஹனபி மத்ஹபின் மேதையாகிய முல்லா அலிகாரி அவர்கள் சொல்கின்றார்கள். 'இந்த சமூதாயத்தில் யாரும் ஹனபியாகவோ, மாலிக்காகவோ ஷாபியாகவோ, ஹன்பலியாகவோ இருக்க வேண்டுமென்பது அவசியமில்லை. நான்கு இமாம்களும் அறிஞர்கள்தான் எனவே யார் ஒரு அறிஞரைப் பின்தொடர்கின்றாரோ அவர் நிம்மதியாக இறைவனைச் சந்திப்பார் என்று சொல்லப்படுகின்றது. ஆனால் பருவ வயதையடைந்த ஒவ்வொருவரும் நபிமார்களின் தலைவரான முஹம்மது நபி அவர்களைப் பின்பற்றுமாறே கட்டளையிடப்பட்டுள்ளனர். அவர்கள் தான் பின்பற்றப்படவேண்டிய இமாம் ஆவார்கள்.

ஹனபி மத்ஹபு மேதையான அப்துல் ஹக் திஹ்லவி அவர்கள் கூறும் போது 'பின்பற்றப்பட வேண்டிய ஒரே இமாம் முஹம்மது நபியவர்கள் மட்டுமே. அவர்கள் அல்லாதவர்களைப் பின்பற்றுவது அறிவுக்குப் பொருந்தாது. இதுதான் ஆரம்பக் கால நல்லோர்கள் கடைப்பிடித்த நல்ல முறையாகும். அல்லாஹ் நம்மையும் அவர்களுடன் சேர்ப்பானாக!

(ஷரஹ-ஸ்ஸிராத்தல் முஸ்தகீம்.)

இது இப்படியிருக்க தப்லீக் ஜமாஅத்தின் பெரியார்களை எடுத்துக் கொண்டால் அவர்கள் தீன் என்பது அல்லாஹ்வின் கட்டளையும் நபியவர்களின் வாழ்க்கை வழிமுறையுமாகும் என்று சொல்லிக் கொள்கின்றார்கள். ஆனால் ஹனபி மத்ஹபில் உள்ள சட்டங்களை அச்சரம் பிசகாமல் பின்பற்றுவதில் பைத்தியகாரத்தனமாக இருப்பதை அவதானிக்க முடிகின்றது. அவ்வாறு செய்வது கடமை என்று பகிரங்கமாகவே பிரகடனப் படுத்துகின்றவர்கள் இவர்கள். நபி வழி எக்கேடு கெட்டாவது போகட்டும். ஹனபி மத்ஹபே எமது வழி எனும் வகையில் அவர்களின் செயற்பாடுகள் இருப்பதை நன்றாகவே நாம் அவதானிக்கலாம். ஏனைய மத்ஹபுவைச் சார்ந்த தப்லீக் தொண்டர்கள் ஹனபி மத்ஹபைத்தான் பின்பற்ற வேண்டுமென்று இவர்கள் வெளிப்படையாக வலியுத்துவதில்லை. இருந்தாலும் இவர்களிடம் பாடம் பெற்று மூளைச் சலவைக்கு உற்படுத்தப்பட்ட கார்க்கூன்களும் காலப்போக்கில் இவர்களைப் பின்பற்றி அவர்கள் செய்வதைப் போன்றே செய்வதையும், இன்னும் சிலர் இதே பிடிவாதத்தை தமது மத்ஹபான ஷாபி மத்ஹபு எனும் பேரில் ஊர் வழக்கில் உள்ள மௌட்டீக அனுஷ்ட்டானங்களை பக்திப் பரவசத்துடன் செய்து வருவதையும் காணக் கூடியதாக இருக்கின்றது. சுருக்கமாசச் சொல்வதாயின் இன்றைய டில்லி மர்க்கஸின் தப்லீக் பெரியார்கள் ஹனபி மத்ஹபைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுகின்றனர். இவர்கள் நேர்வழி காட்டுவார்கள் என்று இவர்களை நம்பி தப்லீக்கில் தம்மை இணைத்துக் கொண்ட அப்பாவி கார்க்கூன்கள் நபிவழியைப் பின்பற்றுகின்றோம் என்று எண்ணிக்கொண்டு டில்லி மர்க்கஸ் பெரியார்களையும், ட்ரைவிங் மர்க்கஸ் பெரியார்களையும் பின் பற்றுகின்றார்கள். இருவருமே நபிவழியைத் தூக்கி வீசி விட்டார்கள்.

நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்; 'நான் எவ்வாறு தொழுவதை நீங்கள் கண்டீர்களோ அவ்வாறே நீங்களும் தொழுங்கள். ஆதாரம் (புகாரி 595)

ஆனால் தப்லீக் பெரியார்கள் இன்று வரைக்கும் ஹனபி மத்ஹபின் மீது கொண்டுள்ள ஒருவகை வெறியால் தொழுகை விடயத்தில் எத்தனையோ மஸாயில்களில் - தம் அம்மத்ஹபு நபிவழிக்கு மாற்றமாக இருந்தும் ஹதீஸைத் தூக்கியெறிந்து வி;ட்டு மத்ஹபின் படியல்லவோ தொழுகின்றனர். உதாரணத்துக்கு சில உண்மைகள் ...

1- தொழுகைக்குப் பின் ஓதப்படும் கூட்டு துஆ நபியவர்கள் சொல்லித்தராத பித்அத்தாகும். ஹனபி தப்லீக் பெரியார்கள் இதைச் செய்வதில்லை. நபிவழிக்கு மாறானது என்பதற்காக அல்ல. தமது மத்ஹபில் இல்லை என்பதனால்தான். நபி வழியில் இல்லை என்பதற்காகத்தான் இவர்கள் செய்யாதிருக்கின்றார்கள் என்று வைத்துக் கொண்டால் ஷாபி மத்ஹபு தப்லீக் வாதிகள் கூட்டு துஆ ஓதும்போது இவர்களும் சேர்ந்து ஜால்ரா போடுவார்களா? ஆனால் போடுகின்றார்களே. ஆக மொத்தத்தில் நபிவழிப்படி நடப்பதில் இருசாராருக்கும் பிடிப்பில்லை. ஒரு சில உள்ளூர் தப்லீக் மர்க்கஸ்களின் பொறுப்புதாரிகள் டில்லி மர்கஸில் நடப்பது போல்தான் இங்கும் நடைபெற வேண்டும் என்பதற்காக கூட்டு துஆவை விடவேண்டுமென அடம்பிடித்த சம்பவங்களும் உண்டு. எனவே யார் எந்த மத்ஹபை, எந்த வழிகெட்ட இயக்கத்தைச் சேர்ந்தோராக இருப்பினும் தப்லீக் ஜமாஅத் அவர்களை ஏற்றுக் கொள்ளும். அவர்களிடம் இருக்கும் எதையும் பற்றி அலட்டிக் கொள்ளாது.

எனது ஊரில் உள்ள தப்லீக் மர்க்கஸில் ஜூமைராத் பயான் நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது இஷாத் தொழுகைக்கு ஏனைய பள்ளிகளில் அதான் சொல்லப்படும்போது மர்க்கஸிலும் அதான் சொல்வதா அல்லது பயானைத் தொடரலாமா? எனும் சர்ச்சை ஒன்று ஏற்பட்டது. இது பற்றி நபிவழியில் ஸுன்னாவில் தீர்வு இருந்தும் கூட, 100 க்கும் மேற்பட்ட உலமாக்கள் ஊரில் இருந்தும் கூட, உலமாக்கள் ஒன்றியமே அவ்வூரில் இருந்தும் கூட, பள்ளி வாயல்கள் முஸ்லிம் நிறுவனங்களின் சம்மேளனம் இருந்தும்கூட இவை அனைத்தையும்

புறக்கணித்து விட்டு இவ்விடயத்தை கொழும்பு பெரிய மர்க்கஸின் கவனத்துக்கு எடுத்துச் சென்று அங்கிருந்து டில்லி மர்க்கஸுக்கு அனுப்பப்பட்டே முடிவு பெறப்பட்டது. ஏற்கனவே பல உலமாக்கள் சொன்ன முடிவுதான் அது. இது எதைக் காட்டுகின்றது? இவர்களுக்கு டில்லி தப்லீக் பெரியார்கள் மீது ஏற்பட்ட குருபக்தியும், தனி மனித வழிபாடும் நபி வழியையும் மறக்கச் செய்து - தான் சார்ந்திருந்த மத்ஹபையும் மறக்கச் செய்து குருவழி நடக்கும் குருடர்களாக்கி விட்டதே.

2- நபிவழிதான் நம்வழியென ஒன்றுமறியாத அப்பாவி தப்லீக் தொண்டர்கள் கூறிக்கொண்டு திரிகின்றார்கள். ஆனால் இவர்களின் தலைவரான ஜக்கரிய்யா மௌலானா தப்லீக் அமைப்பு வஹாபிஸ அமைப்பு என்றோருக்கு மறுப்பாக என்ன கூறுகின்றார் என்று பாருங்கள்...

நாங்கள் வஹ்ஹாபிகளல்ல. 'வஹ்ஹாபிகள் எனப்படுவோர் ஹன்பலி மத்ஹபைப் பின்பற்றுவதாகக் கூறிக் கொண்டாலும் அந்த மத்ஹபில் ஏதாவது ஒன்றை ஹதீஸுக்கு மாற்றமென அவர்கள் கருதினால் உடனே மத்ஹபை விட்டு விடுவார்கள். ஆனால் தப்லீக் பெரியார்களான தேவ்பந்த் ஆலிம்களோ இமாம் அபூஹனீபா அவர்களைப் பின்பற்றுகின்றவர்கள் ஹனபி மத்ஹபுப்படி நடப்பவர்கள். அவ்வாறு பின்பற்றுவது வாஜிப் என்று கூறுகின்றவர்கள். (தப்லீக் பற்றிய குற்றச்சாட்டுக்களும் பதில்களும் ப:176)

நபிவழியே தீன் என்ற இவர்களின் கூற்று உண்மையாயின் மேற்படி ஜக்கரியா மௌலானாவின் வாக்கு மூலத்தின் கதி என்ன??? சிந்திப்போமாக.

3- தொழுகைக்காக அதான் சொல்லும் போது ஒவ்வொரு வாசகங்களையும் இருமுறை சொல்லும்படியும் இகாமத்தின் போது ஒவ்வொரு தடவை சொல்லும் படியும் நபியவர்கள் கட்டளையிட்டுள்ளார்கள்.
ஆதாரம்: (புகாரி 167)

இதற்கு மாற்றமாக தப்லீக் மர்க்கஸ்களென்ன? ஏனைய ஹனபி தப்லீக் கார்க்கூன்களின் மஸ்ஜித்களிலும் ஹனபி மத்ஹபின்படி இருதடவைகள் அதானைப் போன்றே இகாமத்தும் சொல்லப்படுகின்றது. ஷாபி மத்ஹபு பள்ளிகளுக்கு இவர்கள் வந்தால் - அங்கு தமது மத்ஹபின் படி அங்கு நடக்க முற்பட்டால் - மத்ஹபு வெறியை வெளிப்படுத்தினால் சர்ச்சை ஏற்பட்டு ஷாபியிகள் தப்லீக் வக்தில் கிளம்புவது தடைப்படலாம் என்ற அச்சத்தால் பெரியார்களே அந்தந்த இடங்களில் எப்படித் தொழுகின்றார்களோ அப்படியே தொழுது கொள்ளுங்கள் என்று கார்க்கூன்களுக்கு அறிவுரை வழங்குகின்றனர்.

எனவே இவர்களைப் பிடித்துள்ள மத்ஹபு வெறி ஸுன்னாவைக் கண்டெல்லாம் நீங்காது. மாறாக தம் இயக்கத்தின் எண்ணிக்கை பாதிக்கப்படலாம் எனும்போது அவரவர் மத்ஹப்படி செய்யலாம் என சலுகையளிக்கப்படும். எனவே தம் மத்ஹபு மீது இவர்களுக்குள்ள நம்பிக்கை கூட நபியின் ஸுன்னாவின் மீது கிடையாது என்பதே உண்மை.

4-அதே போன்று தொழுகையில் பாத்திஹா ஸூராவுக்குப்பின் சத்தமிட்டு ஆமீன் கூறுவது நபி வழியாகும்.

உங்களுக்குத் தொழுகை நடத்தும் இமாம் ஆமீன் கூறினால் நீங்களும் ஆமீன் கூறுங்கள். ஏனெனில் எவரின் ஆமீன் மலக்குகளின் ஆமீனுக்கு நேர்படுகின்றதோ அவரது முன்னைய பாவங்கள் மன்னிக்கப்பட்டு விடுகின்றன என நபியவர்கள் கூறியுள்ளார்கள். (புகாரி முஸ்லிம் 738)

ஹனபி மதஹபுக்காரர்கள் இவ்வாறு சத்தமிட்டு ஆமீன் சொல்வதில்லை. இதே மத்ஹபின் அடிப்படையினையே தப்லீக் பெரியார்களும் தமது டில்லி, ட்ரைவிந் மர்கஸ்களில்

அமுல்ப்படுத்துகின்றார்கள்.

5-இவ்வாறே மஃரிபுடைய அதானுக்குப்பின்னர் இரண்டு ரக்அத் ஸுன்னத்து விரும்பியவர்கள் தொழுது கொள்ள நபியவர்கள் அனுமதித்துள்ளனர். ஹனபி மத்ஹபில் இது கிடையாது. ஆகவே தப்லீக் பெரியார்களிடமும் கிடையாது. இவ்வாறே ருகூக்குப்பின் கைகளை உயர்த்துவது நபிவழியாகும் ஹனபிகளிடம் அது இல்லாததால் தப்லீக் பெரியார்களிடமும் இல்லை.

இவையெல்லாம் உதாரணத்துக்குத்தான். இது போன்ற எத்தனையோ ஸுன்னாவுக்கு எதிரான மத்ஹபு சட்டங்களுக்கு தப்லீக் பெரியார்கள் கட்டுப்பட்டு ஸுன்னாவை விட மத்ஹபே பெரிதென வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். அவ்வாறு கற்றும் கொடுக்கின்றனர்.

இத்தனையும் செய்து கொண்டு அசலான நபிகளின் வாழ்க்கையைக் கடைப்பிடிப்பதில் தான் துன்யா ஆகிரா இரண்டின் வெற்றியுமிருக்கின்றது என்று சங்கூதவும் செய்கின்றனர்.

## முறைப்பாடு : 2 <u>தொழுகையின் சிறப்பும்... தஃலீம் தொகுப்பும்...</u>

தொழுகையானது இஸ்லாத்தின் இரண்டாவது தூணாகும். இதை விட்டவனுக்கும் இஸ்லாத்துக்கும் இடையில் எவ்வித தொடர்புமில்லை என்பதும் நபிமொழியாகும். தப்லீக் தஃலீம் தொகுப்பில் தொழுகைக்காக ஒரு தனிப் பகுதியே ஒதுக்கப்பட்டுள்ளது. இதில் தொழுகையின் சிறப்புகள், அதனால் கிடைக்கும் நன்மைகள், விடுவதால் ஏற்படும் தண்டணைகள் பற்றியெல்லாம் விலாவாரியாக விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இதை எவரும் மறுக்க முடியாது. ஆனால் நபியவர்கள் தொழுகையின் சிறப்புகளைக் கூறியது போல, தொழாதவர்களுக்குரிய தண்டணைகள் பற்றிக் கூறியது போல, எவ்வாறு தொழவேண்டுமெனவும் கூறினார்களா இல்லையா? அப்படியாயின் நபி வழிப்படி தொழும் முறையோ, தொழுகையின் சட்டதிட்டங் களோ ஏன் தப்லீக்கில் போதிக்கப்படுவதில்லை?.

உதாரணமாக ஒரு பாடசாலையில் கம்யூட்டர் கல்வியின் சிறப்பு அதன் முக்கியத்துவம் பற்றி மாத்திரம் போதிக்கப்படுகின்றது. கம்யூட்டர்க் கல்வி போதிக்கப்படுவதில்லை. இந்நிலையில் இந்தக் கல்வியால் மாணவர்களுக்குக் கிடைக்கும் பயன் யாது? பூச்சியம் தான் மிச்சம். இதுதான் இன்று தப்லீக்கிலும் நடந்து கொண்டிருக்கின்றது. நபி வழிப்படி தொழும் முறை பற்றி அதன் சட்டதிட்டங்கள் பற்றி, தொழுகையில் ஓத வேண்டியவை, வுழூ, தொழுகையின் பர்ழு ஷர்த்து, சுன்னத்துக்கள், தொழுகையை முறிப்பவைகள் பற்றியெல்லாம் ஏராளமான ஹதீஸ்களும் சட்டதிட்டங்களும் உள்ளன. இவை தஃலீம் தொகுப்பில் மருந்துக்கேனும் உண்டா?. இல்லை தப்லீக் முக்கியஸ்த்தர்களுக்கேனும் தெரியுமா? அவர்களாவது 40 நாள் உடல் பொருள், தொழிலைத் தியாகம் செய்து தப்லீக்கில் வெளிக் கிளம்பும் அப்பாவிக் கார்க்கூன்களுக்கு அன்றாட மஸூராவில் ஒரு நேரம் ஒதுக்கிக் கற்றுக் கொடுக்கின்றார்களா? ஒவ்வொரு நாளும் தஃலீம் வாசிக்க 6-7 மணிநேரங்கள் ஒதுக்கப்படுகின்றதே. நபியவர்கள் சொல்லித்தந்த சட்டதிட்டங்கள் பற்றிக் கற்பிக்க அரைமணி நேரமாவது ஒதுக்கப்படுகின்றதா? இல்லையே? அன்பின் கார்க்கூன்களே! நீங்கள் எவ்வளவு தடவைகள் வக்தில் வெளிக் கிளம்பியுள்ளீர்கள். மார்க்க சட்டதிட்டங்கள் பற்றி எந்தளவுக்கு நீங்கள் தப்லீக்கில் சென்று கற்றுக் கொண்டீர்கள் என்று உங்கள் இதயத்தில் கை வைத்துச் சொல்லுங்கள்.

இது பற்றி அவர்களிடம் வினவினால் தயாராக ஒரு பதில் வைத்திருக்கின்றார்கள். 'பழாயில்களைப் பற்றி தஃலீம் புத்தகத்தில் படிப்பது, மஸாயில்களை (சட்டங்களை) ஆலிம் உலமாக்களை அணுகி கால்மடித்து ஹதிய்யாக்களைக் கொடுத்துப் படித்துக் கொள்வது' இதுதான் பதில். சரி 40 நாள் 4 மாதம் என்றெல்லாம் நீண்ட காலங்கள் தொழில் துறை, உத்தியோகம் பொறுப்புக்களைத் துறந்து மக்கள் வெளிக்கிளம்பிச் செல்கின்றார்கள்.

இதிலாவது தொழுகை பற்றிய இன்னும் மார்க்க சம்பத்தப்பட்ட எந்த நிகழ்ச்சியாவது இடம்பெறுகின்றதா? அங்கும் அதே தஃலீம் அதே அமல்களின் சிறப்பு, சலித்துப் போனால் உசார்படுத்த ஹஜ்ஜின் சிறப்பு ஸதக்காவின் சிறப்பு எனும் பெயரில் இரு நாவல்கள். இதிலே துப்பறியும் கதைகளும், மெய்சிலிர்க்க வைக்கும் கதைகளும் தாராளமாக எவ்வித முகவரியுமில்லாது அவிழ்த்து விடப்படுகின்றன.

இந்தப் பொன்னான நேரத்தை மார்க்க தொழுகை விடயங்களைக் கற்பிப்பதில் செலவிடலாமே என்று சொல்லிப் பாருங்கள். அதற்கும் ஒரு ரெடிமேட் பதில் 'ஆறு நம்பருக்கு அப்பால் பேசுவது உஸூலுக்கு மாற்றமானது. அதைப் பெரியார்கள் அனுமதிப்பதில்லை. கண்ட கண்ட மௌலவிமார்களிடமெல்லாம் மார்க்கம் கற்கக் கூடாது. பேணுதலான, இந்த ஹக்கான வேலையில் ஊறியவர்களிடத்திலேயே மார்க்கம் படிக்க வேண்டுமென்று தத்துவம் பேசுவார்கள். அவர்களிடமாவது கேட்டுப் படிக்கின்றார்களா என்றால் அதுவும் இல்லை.

இன்றைக்கு ஒவ்வொரு ஊர் கிராமங்களிலும் கூட 4 மாதங்கள் ஒருவருடம் வக்து முடித்தவர்கள் கூட உண்டு. இவர்களிடம் எந்தளவு மார்க்க விடயங்களைத் தேடிப் படித்துள்ளீர்கள், தொழுகை துஆக்கள், அதன் சட்டங்கள், இன்னும் தொழுகை பற்றித் தெரிய வேண்டிய நூற்றுக் கணக்கான சட்டங்கள் உள்ளனவே!! இவற்றில் சிறிதளவாவது தெரியுமா? என்று விசாரித்துப் பாருங்கள். அப்படி ஒரு சிலருக்குத் தெரிந்திருந்தாலும் அது அவரது தனிப்பட்ட முயற்சியால் - ஏனைய இஸ்லாமிய நூல்களைப் படித்ததால் கற்ற விடயங்களாகத்தான் இருக்கும். இதை நீங்கள் ஏற்கத் தயங்கினால் நீங்களே பத்து தப்லீக் கார்க்கூன்களை அழைத்து அவர்களிடத்தில் சில தொழுகையின் சட்டங்களைக் கேட்டுப்பாருங்கள் எத்தனை பேர் சரியான பதில் சொல்கின்றார்கள் என்று பாருங்கள்.

தப்லீக் பெரியார்கள் மார்க்க சட்டதிட்டங்களைப் பற்றி தமது தப்லீக் கார்க்கூன்களுக்கு கற்றுக் கொடுக்கத் தயங்குவதிலும் ஒரு உண்மை மறைந்திருக்கின்றது. அதாவது டில்லி பெரியார்கள் ஹதீஸின் அடிப்படையிலுள்ள சட்டங்களை ஏற்றுக் கொள்வதில்லை. அவர்களது ஹனபி மத்ஹபு நூலிலுள்ள சட்டங்களே இஸ்லாம் என்றும் அதைத்தான் பின்பற்றுவது கடமையென்றும் கூறி நபிவழிச் சட்டங்களை மட்டுமன்றி, ஏனைய மத்ஹபுச் சட்டங்களையும் புறக்கணிப்பவர்கள். எனவே மார்க்க சட்டங்கள் கற்பிப்பதென்றால் ஹனபி மத்ஹபுப் படிதான் கற்பிக்க வேண்டுமென்பதில் இவர்களுக்கு வெறி. ஆனால் ஏனைய மத்ஹபுகளைச் சார்ந்த கார்க்கூன்கள், தப்லீக் உலமாக்கள் இதனை ஜீரணிக்க மாட்டார்கள். ஆகவே இந்த மத்ஹபுச் சட்டப் பிரச்சினையால் தப்லீக்கின் இயக்க ஆதரவாளர்களின் எண்ணிக்கை அதிகரிப்பது தடைப்படலாம் என்ற குறுகிய சுயநல எண்ணத்தாலேயே இவர்கள் ஆறு நம்பருக்கு அப்பால் போய் சட்டதிட்டங்கள் போதிக்கப்படுவதற்குத் தடை விதித்துள்ளார்கள். தமது இயக்கத்தை வளர்ப்பதற்காக இஸ்லாத்தின் ஆணிவேரான மார்க்க சட்டங்கள் மக்களுக்குப் போய்ச் சேராமல் தடை வேலி போட்டிருக்கிக்கும் இவர்கள்தான் நபியவர்களை நேசிப்பவர்களா? நபிவழிப்படி வாழ்பவர்களா? சிந்திப்பீர்களாக.

முறைப்பாடு : -3 <u>ஹதீஸ் போதனையா, கப்ஸா போதனையா?</u>

நபிகள் நாயகம் முஹம்மத் (ஸல்) அவர்கள் எம்மனைவருக்கும் ஈருலக வழிகாட்டியாக வந்தவர்கள். எமக்குத் தேவையான எவ்விடயத்தையும் அவர்கள் சொல்லித் தராமல் விட்டதில்லை. எனவே ஒரு முஸ்லிம் எப்படித்தொழ வேண்டும் என அறிந்து கொள்ள விரும்பினால் ஹதீஸின் ஒளியில் எவ்வித சந்தேகங்களும் மீதியிருக்காத அளவுக்குத் தெட்டத் தெளிவாக அறிந்து கொள்ளும் அளவுக்கு தொழும் முறை, அதன் சிறப்பு, அதை முறிப்பவை, அதனை விட்டால் கிடைக்கும் தண்டனை இப்படி ஏராளமான நபிமொழிகள் இருக்கின்றன. ஆனால் தப்லீக் தஃலீம் தொகுப்பை எடுத்துக் கொள்ளுங்கள். அதில் தொழுகை பற்றிய பகுதியின் ஆரம்பத்தில் மாத்திரம் சில அல்குர்ஆன் வசனங்களும் சில நபி மொழிகளும் இடம் பெறும் அதற்கு அடுத்த கட்டமாக 'ஒரு ஹதீஸில் வருவதாவது.... ' ஒரு அறிவிப்பில் வருவதாவது... ' என்ற பெயரில் பலவீனமான மற்றும் இட்டுக்கட்டப்பட்ட பொய்யான

ஹதீஸ்கள் இடம்பெறும்.

ஜக்கரிய்யா மௌலானாவோ ஹதீஸ்கலை மேதையாகிற்றே.. 20-25 வருடங்கள் புகாரி - முஸ்லிம் போன்ற ஹதீஸ் நூற்கள் நடத்தியவர்களாயிற்றே.. புகாரி முஸ்லிமில் தொழுகை பற்றி ஹதீஸ்களே இல்லையா? என்று உங்களுக்கு ஆச்சரியம் ஏற்படலாம். உண்மைதான் அதில் வரும் ஹதீஸ்களையெல்லாம் சொன்னால் மக்கள் நபிவழிப்படி தொழ ஆரம்பித்து விடுவார்களே ஹனபி -ஷாபி மத்ஹபின் ஹதீஸுக்கு மாற்றமான சட்டங்களை அலட்சியம் செய்து விடுவார்களே. அதன் பின்பு எல்லோரும் நபிகளுக்குத்தான் மதிப்பளிப்பார்கள். பெரியார்களுக்கு மதிப்பளிக்க மாட்டார்களே! நபிவழியைப் படித்துக் கொடுத்தால் இவர்களது திஸ்த்திய்யாத் தரிக்காவிடம் பைஅத் செய்ய எவன் வரப்போகின்றான்.?? எனவேதான் தமது நோக்கம் நிறைவேற வேண்டுமென்பதற்காகவே ஆதாரப்பூர்வமான சட்ட சம்பந்தப்பட்ட ஹதீஸ்களைக் கூறுவதைத் திட்டமிட்டுத் தவிர்த்துள்ளார்கள். இவர்களது நோக்கம் பாமரர்களை ஹனபி ஷாபி மத்ஹபுக்குள்ளேயே வைத்துக் கொண்டு - அதை விட்டு வெளியேற விடாது இபாதத் எனும் போர்வையிலேயே ஹதீஸ் எனும் பெயரிலேயே பெரியார்களின் வீர தீர சாகசக் கதைகளைக் கூறி பெரியார்கள் மீது குருட்டுப் பக்தியை உண்டு பண்ணி பின்னர் திஸ்த்திய்யாத் தரீக்காவுக்குள் உள்வாங்கிக் கொள்வதுதான் இவர்களது அந்தரங்க உள் நோக்கம். இதை நீங்கள் இப்போது ஒப்புக்கொள்ளா விட்டாலும் போகப் போக ஏற்றுக் கொள்வீர்கள். என்னைப் போன்று.

<u>உதாரணத்துக்கு சில பலவீனமான ஹதீஸ்கள்...</u>

1- தொழுகையைப் பேணித் தொழுபவருக்கு 5 வித உபகாரமும் விடுபவருக்கு 15 வகை தண்டனையும் ஹதீஸில் வருவதாக சிலர் சொல்கின்றார்கள் என்று இச்சம்பவம் ஆரம்பிக்கின்றது. (அமல்களின் சிறப்பு பக்கம் 50) நன்மை தண்டனையெல்லாம் மறுமை பற்றிய விடயம். அதைக் குர்ஆன் ஹதீஸில் இருந்தால் மட்டுமே ஏற்க முடியும். அப்படியென்றால் இந்த 'சிலருக்கு' இவற்றைச் சொல்லிக் கொடுத்தது யார்?

2- ஒரு ஹதீஸில் வருவதாவது... தொழுகையைப் பேணுவதால் மஃரிபா எனும் இறைஞான ஒளி உண்டாகின்றது. (58 ம் பக்கம்) இந்த ஹதீஸ் எங்கிருக்கின்றது. அதன் தரம் என்ன என்று எடுத்துக் காட்ட முடியுமா?

3- தொழுகையை விட்டவனைப் பார்த்து சொர்க்கம் உனக்காக நானில்லை எனக்காக நீயில்லையென்றும், நரகம் என்னிடம் வந்துவிடு உனக்காக நீ எனக்காக நான் என்றும் கூறும். பக்கம்: 63

4- நரகத்தில் 'லம்லம்' எனும் காடுண்டு அதில் ஒட்டகக் கழுத்துள்ள பாம்புண்டு. அதன் நீளம் ஒரு மாதம் நடந்து செல்லுமளவுக்கு இருக்கும். தொழுகையை விட்டோர் அதில் போடப்படுவார்கள். நரகத்தில் ஜுப்புல் ஹுஜ்ன் எனும் மைதானம் இருக்கின்றது. அதில் கோவேறு கழுதையின் அளவு பெரிய தேள் இருக்கின்றது. தொழுகையை விட்டவர்களை அது வேதனை செய்கின்றது என ஒரு ஹதீஸில் வந்துள்ளது. (பக்கம் 63 அதே அமல்களின் சிறப்பு)

இவையெல்லாம் மறைவான விடயங்களல்லவா? இப்படியான செய்திகளைச் சொல்லும்போது அவற்றின் நம்பகத் தன்மையை உறுதி செய்வது அவசியமல்லவா? மக்களைப் பயம்காட்ட வேண்டுமென்பதற்காக நினைத்ததையெல்லாம் சொல்லி விட முடியுமா?

6- எவனொருவனின் முதல் வார்த்தையும் இறுதி வார்த்தையும் லாயிலாஹ இல்லல்லாஹ் எனும் கலிமாவாக இருக்கின்றதோ அவர் ஆயிரம் வருடங்கள்தான் வாழ்ந்த போதிலும் தான் செய்த எந்தப் பாவத்தைப் பற்றியும் விசாரணை செய்யப்பட மாட்டார். (தப்லீக் தஃலீம்

தொகுப்பு ப: 596)

இதன் அறிவிப்பாளர் வரிசையில் பல குளறுபடிகள் இருந்தும் அவற்றையெல்லாம் வேண்டுமென்றே ஜக்கரிய்யா மௌலானா கண்டு கொள்ளாமல் புறக்கணித்திருக்கின்றார். இந்த ஹதீஸின்படி கலிமாச் சொன்ன ஒருவன் என்னதான் குற்றம் செய்தாலும் அதற்கு விசாரணையோ தண்டணையோ இல்லையென விளங்குகின்றது. இது தவறாகும். என்னதான் முஃமினாக இருந்தாலும் அவன் செய்த குற்றத்திற்காக விசாரிக்கபடாதவரை, அதற்காக தண்டனை பெறாதவரை அல்லது அதை அல்லாஹ் மன்னிக்காத வரை எவனும் சொர்க்கம் செல்ல முடியாதென்றும், கலிமாவை ஏற்றுக் கொண்ட லட்சக்கணக்கான பாவிகள் வேதனை செய்யப்பட்டதன் பின்னர் நரகை விட்டும் வெளியேற்றப்படுவதாகவும் பல்வேறு ஹதீஸ்களில் வந்துள்ளதே.

7- யார் வெள்ளிக்கிழமை தினத்தில் எண்பது தடவைகள் தொழுகின்றாறோ அவரது எண்பது வருடத்துப் பாவங்கள் மன்னிக்கப்படும். பக்கம் 721 இதுவும் மிகப்பலவீனமான ஹதீஸாகும்.

8- ஜுமைராத் இரவில் பள்ளியில் தங்குவதை ஆர்வ மூட்டுவதற்காக' அல்லாஹ்வின் நாட்டத்தை விரும்பி யார் ஒருநாள் பள்ளியில் இஃதிகாப் இருக்கின்றாறோ அல்லாஹ் அவரை மூன்று கன்தக் தூரம் நரகை விட்டும் தூரமாக்குவான் ஒவ்வொரு கன்தக்குக்கும் இடைப்பட்ட தூரம் வானம் பூமிக்கு இடைப்பட்ட தூரத்தை விட அதிகமானதாகும் என்று ஹதீஸில் உள்ளது'. என எழுதி வைத்திருக்கின்றார். (அமல்களின் சிறப்பு பக்கம் 466)

இதையும் பலவீனமானதென்று தெரிந்து கொண்டே மௌலானா அவர்கள் ஜுமைராத் நிகழ்ச்சியை திறம்பட நடத்துவதற்காக இடம்பெறச் செய்துள்ளார்கள் .

9- யார் தினமும் ஸூரத்துல் வாகிஆவை ஓதி வருகின்றாரோ அவருக்கு வறுமையே வராது. இப்னு மஸ்ஊத் அவர்கள் தன் பெண் மக்களுக்கு இவ்வாறு செய்யுமாறு கட்டளையிட் டிருந்தார்கள். யார் யாஸீன் ஸூராவை ஓதுகின்றாரோ அவரது முன்னைய பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்பட்டு விடுகின்றன. (ப: 292 ,293 ) இவையும் ஆதாரத்துக்கு எடுக்க முடியாத பலவீனமானவையாகும்.

10- உங்களைப் பைத்தியக்காரர்கள் என்று சொல்லுமளவுக்கு அல்லது முனாபிக் என்று மக்கள் சொல்லுமளவுக்கு நீங்கள் (சத்தமிட்டு ) திக்ர் செய்யுங்கள் என்ற ஹதீஸ் அமல்களின் சிறப்பு நூலில் உள்ளது. 'சத்தமிட்டு'எனும் சொல் ஹதீஸில் இல்லாதிருந்தும் மௌலானா தமது தரீக்காவின் கூட்டு திக்ரை நியாயப்படுத்த அதை அடைப்புக்குறிக்குள் இட்டுள்ளார்கள். இந்த ஹதீஸும் கடும் பலவீனமான ஹதீஸாகும் பார்க்க: (சில்சிலா 518)

11- எனது புறக்கணிக்கப்பட்ட ஸுன்னத்துக்களில் ஒன்றை உயிர்ப்பிப்பவருக்கு நூறு ஷஹீத்களுடைய நன்மை கிடைக்குமென நபியவர்கள் கூறினார்கள். (126) இதுவும் தப்லீக்கில் அடிக்கடி கூறப்படும் ஹதீஸ் ஆனால் இது பலவீனமானது. இதன் அறிவிப்பாளர் வரிசையில் இனந்தெரியாத சிலர் உள்ளனர். (மஜ்மஉஸ்ஸவாயித் 1-172)

12- யார் லாயிலாஹ இல்லல்லாஹ் என ஒரு தடவை சொன்னால் அவரது 50 வருட பாவங்கள் மன்னிக்கப்படுமென நபியவர்கள் கூறியபோது அவரிடம் 50 வருட பாவங்கள் இல்லாதிருப்பின்?? என தோழர்கள் கேட்க அவரது பெற்றோர் உறவினர்களுடைய 50 வருட பாவங்கள் மன்னிக்கப்படும் என்றார்கள். (தப்லீக் தஃலீம் 596 )

இந்த ஹதீஸ்படி ஒரு குடும்பத்தில் ஒருவன் மாத்திரம் இதை ஒரு தடவை சொல்லி விட்டு ஏனைய அனைவரும் அவர்களது ஆயுள் வரைக்கும் நினைத்த அனைத்துப் பாவங்களையும் செய்யலாம்? இறுதியில் அனைவருக்கும் சொர்க்கம்தான்? அப்படியானால் தொழுகை எதற்கு நோன்பு எதற்கு? ஹராம் ஹலால் எதற்கு? இன்று கிருஸ்தவர்களின் கொள்கையும்

இதுதான். சிந்தித்துப் பாருங்கள். ஒரு பலவீனமான ஹதீஸால் ஏற்படும் விளைவு என்னவென்று? இதன்படி ஒருவர் ஒரு தடவை கலிமா சொல்லி விட்டு 50 வருடம் பாவம் செய்தால் மறுமையில் அல்லாஹ் அவரை நரகுக்கு அனுப்பும் போது ஜக்கரிய்யா மௌலானாவால் அவரைக் காப்பாற்ற முடியுமா? இது போன்ற நூற்றுக்கணக்கான பலவீனமான ஹதீஸ்கள் இதில் இடம் பெறுகின்றன. இவற்றுக்குப் பதில் புகாரி முஸ்லிமில் உள்ள ஆதாரப் பூர்வமான ஹதீஸ்களை இடம்பெறச் செய்திருக்கலாம் தானே.

இப்படிக்கேட்டால் அவர்கள் சொல்லும் பதில் பலவீனமான ஹதீஸ்களையும் மக்களுக்கு ஆர்வமூட்டும் நோக்கில் சொன்னால் என்ன? நல்லதுதானே எத்தனையோ அரபு நூல்களில் பலவீனமான ஹதீஸ்கள் இடம்பெறவில்லையா? என பதிலளிப்பர். அரபு நூல்களில் பலவீனமான ஹதீஸ்கள் இடம் பெற்றிருப்பதை இவர்கள் ஆதாரமாகக் கூற முடியாது. ஏனெனில் அவை சில நூற்களில் இடம்பெற்றிருப்பினும் அவை மூல நூல்கள். பெரும் ஏடுகள். அறிஞர்களுக்கென எழுதப்பட்டவை. இவற்றைப் படிப்பவர்களும் பெரிய பெரிய ஹதீஸ் பற்றி அறிந்த அறிஞர்களே. அவர்கள் அதில் இருப்பதையெல்லாம் அப்படியே ஏற்கப்போவதில்லை. தேடி ஆராய்ந்ததன் பின் பலவீனமானவற்றைப் புறந்தள்ளிவிடுவர். ஆனால் பாமரர்களுக்காக வேறு எத்தனையோ நூல்கள் உள்ளன. பாமர அப்பாவி மக்களுக்குச் சொல்லும் விடயங்கள் உண்மைதானா? ஆதாரப் பூர்வமானவைதானா எனப் பார்த்துச் சொல்வது உலமாக்களின் கடமையல்லவா? அவர்கள் - உலமாக்கள் இஸ்லாத்தையே சொல்கின்றனர் என்று எண்ணி ஆலிம்களை நாடி வரும் போது பலவீனமான, பொய்யான செய்திகளை இஸ்லாம் எனும் பெயரில் சொல்வது அவர்களுக்குச் செய்யும் நம்பிக்கைத் துரோகமல்லவா? மோசடியல்லவா?.

இது மட்டுமின்றி தப்லீக் தஃலீம் தொகுப்பில் பலவீனமான பல ஹதீஸ்களைக் கூறிய மௌலானா அவர்கள் அந்த ஹதீஸின் நூலாசிரியரே அதன் கீழ் இந்த ஹதீஸ் பலவீனமானது, அறிவிப்பாளர் வரிசை சீரற்றது என்று கூறியிருந்தும் -- அதனை அரபியில் மாத்திரம் இடம்பெறச் செய்து விட்டு மொழி பெயர்ப்பின்போது அது பெயர்க்கபடாமல் இருட்டிப்புச் செய்யப்பட்டுள்ளது. இதுவும் பாமர மக்களுக்குச் செய்த மற்றுமொரு நம்பிக்கைத் துரோகமாகும்.

ஆர்வமூட்டுவதற்காக பலவீனமானவற்றை மக்களுக்குக் சொல்லலாமென்ற கருத்தை ஒருசிலரைத் தவிர ஏனைய அறிஞர்கள் ஏற்கவில்லை. சில அறிஞர்கள் அவ்வாறு சொல்லியிருப்பினும் பல நிபந்தனைகளுடன்தான் சொல்லியிருக்கின்றனர். அதில் முதல் நிபந்தனை அகிதா - இறை நம்பிக்கை பற்றிய, மறைவான விடயங்கள் பற்றிய தகவல்கள் கூறும் பலவீனமான ஹதீஸ்களை ஆர்வமூட்டும் நோக்கில் கூட கூற முடியாது என்ற ஒருமித்த முடிவில் உள்ளனர். எனவே இங்கு தொழுகையின் சிறப்பு பகுதியில் கூறப்பட்டிருக்கும் பலவீனமான ஹதீஸ்கள் மறைவான விடயங்கள் பற்றிப் பேசுபவையாகவே உள்ளன. சுவர்க்கத்தில் நடப்பவை, நரகத்தில் நடப்பவை, கப்ரில் நடப்பவை பற்றியெல்லாம் சொல்லும் ஹதீஸ் பலவீனமாயிருந்தால் அதை புறந்தள்ள வேண்டியது தான். ஒருபோதும் ஆதாரத்துக்கு எடுக்க முடியாது. இது அனைத்து இஸ்லாமிய அறிஞர்களினதும் ஒருமித்த கருத்தாகும். தப்லீக் பெரியார்கள் இவ்விடயத்தில் மாறு செய்கின்றார்கள்.

சரி இதைத்தான் விட்டு விடுவோம். இத்தோடு ஜக்கரிய்யா மௌலானா நிறுத்திக் கொண்டார்களா? இவற்றுக்கு அடுத்த படியாக விளக்கவுரை எனும் பெயரில் ஆரம்பமாகும் கப்ஸாப் பகுதியில் ஆயிரக்கணக்கான முகவரியில்லாத சம்பவங்கள். ஒரு பெரியார் சொன்னது, ஆரிபீன்கள் சொன்னது, சூபியாக்கள் சொன்னது, நல்லடியார்கள் வாழ்வில் நடை பெற்றது, உண்மைச் சம்பவம் எனும் பெயர்களிலெல்லாம் நவரசக் கதைகள், பெரியார்களின் சாத்தியமற்ற சாதனைகள், தூள் கிளப்புகின்றன. அல்குர்ஆனையும் ஹதீஸையும் படிக்க வேண்டும் அதன் வழிநடக்க வேண்டும் எனும் ஆர்வத்தில் தமது உடல் பொருள் தொழில் போன்றவற்றைத் தியாகம் செய்து வரும் அப்பாவி மக்களின் நேரங்களை

இப்படி முகவரியற்ற கப்ஸாக்களை வாசித்துப் பாழ்படுத்துவது தகுமா? அல்லாஹ்வுக்குப் பொருந்துமா?.

இது ஒரு புறமிருக்க இந்தக் கதைகளும் கப்ஸாக்களும் நேரத்தைக் கடத்துவதற்காக அல்லது மக்களின் தூக்கத்தைக் கலைத்து விழிப்பையும் புத்துணர்ச்சியையும் தருவதற்காக என்று கூடச் சொல்லி சில வேளை நியாயப்படுத்தி விடலாம். ஆனால் இக்கதைகள் கொண்டுள்ள அபத்தங்கள், மார்க்க முரண்பாடுகள், நபிகளாருக்கும் உத்தம சஹாபாக்களுக்கும் இழுக்கை அவமானத்தை ஈட்டித்தரும் அவர்களை மறைமுகமாகக் கொச்சைப் படுத்தும் நிகழ்வுகள், இஸ்லாமிய அகீதா - இறை நம்பிக்கைக்கு மாற்றமான விடயங்கள் எல்லாம் இக்கதைகளில் மறைமுகமாகப் போதிக்கப்படுவதால் தான் இவற்றை காரசாரமாக விமர்சிக்க வேண்டியுள்ளது சுட்டிக் காட்ட வேண்டியுள்ளது.

இதில் வரும் கப்ஸாக்களை இருபெரும் பிரிவுகளாக வகைப் படுத்தலாம்

1- பகுத்தறிவுக்கு அப்பாற்பட்ட நடைமுறைச் சாத்தியமற்றவை.

2- இஸ்லாத்திற்கு - அதன் ஓரிறைக் கொள்கைக்கு வேட்டு வைக்கக் கூடியவை.

புரிந்து கொள்வதற்காக சில உதாரணங்கள்.

பகுத்தறிவு ஏற்காத சாத்தியமற்றவை சில.
தொழுகையில் உள்ளச்சம் இருக்க வேண்டியது உண்மைதான்; முஃமின்கள் தொழுகையில் உள்ளச்சத்துடன் இருப்பார்கள் என்று அல்லாஹ் பிரஸ்த்தாபிக்கின்றான். நபி (ஸல்) அவர்களும் தொழுகையை உள்ளச்சத்துடன் தொழ வேண்டும் என்று போதித்திருக்கின்றார்கள். அவர்களை விட அல்லாஹ்வை அஞ்சக்கூடியவர்கள் எவருமில்லை. அவர்களை விட பயபக்தியுடன் தொழுதவர்களும் எவருமில்லை. இருப்பினும் நபியவர்கள் பயபக்தியுடன் தொழுவித்தபோதே பின்னால் உள்ள மஃமூம்களின் செயற்பாடுகளையும் அவதானித்திருக்கின்றார்கள். நபியவர்கள் தொழும் போது பாதணியில் நஜீஸ் இருந்ததால் பாதணியைக் கழட்ட பின்னால் நின்றவர்களும் கழட்ட அதைக் கண்டு நபியவர்கள் தொழுகையின் பின் விசாரித்திருக்கின்றார்கள். (புகாரி 376)

அதே போல் நபியவர்கள் தொழுவிக்கும் போது பின்னால் உள்ளவர்கள் ஓதிய ஓதல்களைச் செவியுற்று தொழுது முடிந்ததும் அது பற்றி விசாரித்து விட்டு ஸூரத்துல் பாத்திஹாவைத் தவிர வேறு எதையும் தனக்குப்பின்னால் நின்று கொண்டு ஓத வேண்டாம் என்று போதித்துள்ளார்கள். (அபூதாவூத் 701)

இதற்கு மாற்றமாக தஃலீம் தொகுப்பில் தொழுகையில் பெரியார்களின் பயபக்தி எனும் தலைப்பில் பல அர்த்தமற்ற சாத்தியமற்ற இன்னும் சொன்னால் முகவரியேயற்ற சம்பவங்கள் ஏராளம் ஏராளம்.

ஒரு சிலவற்றை மாத்திரம் தொட்டுக் காட்டுகின்றேன்.

1- ஹஜ்ரத் அலி (ரழி)யின் சம்பவம் பிரபலமானதாகும். அவர்கள் உடம்பில் அம்பு தைத்து விட்டது. அதை அவர்கள் தொழும் போது எடுத்து விடலாம் என்றெண்ணி அவ்வாறே செய்தனர் தொழுது முடிந்ததும் அம்பை எடுக்கவா வந்தீர்கள்? என அலி (ரழி) கேட்க நாங்கள் எடுத்து விட்டோமே என்றனர். (தொழுகையின் சிறப்பு 143)

இந்தப் பிரபல சம்பவம் எங்கிருந்து கிடைத்ததோ??? அல்லாஹ்வுக்கே வெளிச்சம்.

2- ஒரு பெரியாரின் உடலுறுப்பு பழுதடைந்து விட்டது. அதை வெட்டியெடுக்க

வேண்டியேற்பட்டது. அவர் தொழ தக்பீர் கட்டியதும் அதை வெட்டியெடுத்து விட்டனர். அவருக்கு எதுவுமே தெரியவில்லை. ( தொழுகையின் சிறப்பு 144)

இந்தச் சம்பவங்களெல்லாம் முகவரியற்றவை, பிரமிப்பூட்டுவதற்காகச் சொல்லப்படுபவை என்பதில் சந்தேகமில்லை. இப்படியெல்லாம் அம்பை உடலிலிருந்து உருவியெடுப்பதையே அறிய முடியாதளவுக்கு தொழுகையில் லயித்தல் என்பது மனித சுபாவத்திற்கே அப்பற்பட்டது. நபியவர்களுக்கே இப்படியெல்லாம் ஏற்படவில்லையே! இவற்றைப் பகுத்தறிவு கூட ஏற்க மறுக்கின்றதே. எப்படி? நபியவர்களுக்கே தொழுகையில் இப்படியானதொரு பக்தி ஏற்படவில்லை. நான்தான் உங்கள் அனைவரையும் விட பக்தி மிக்கவன் எனவும் நபிகளார் கூறியிருக்கின்றார்கள். அப்படியென்றால்?.

நபியவர்களுக்கே ஏற்படாத பக்தி அலியவர்களுக்கு ஏற்பட்டதா?

இப்படியொரு நிகழ்வு அலி (ரழி)க்கு இடம்பெற்றதாக எவ்வித ஆதாரப்பூர்வமான தகவலும் இல்லை. இப்படியான சம்பவங்களை இவர்கள் புனைந்து சொல்வதற்கு மற்றுமொரு உள்நோக்கமும் உண்டு. அதாவது வலிமார்கள், ஷைக்மார்களின் தொழுகை, வணக்கங்கள் நம்போன்ற பாமரர்களின் தொழுகை போன்றதல்ல. அவை உயிரோட்டமுள்ளவை எனும் போலி பிரமையை பாமரருக்கு ஏற்படுத்தி அதன் மூலம் குருபக்தியை அதிகரிப்பதே இதன் உள்நோக்கம்.

<u>இரவெல்லாம் தொழுது பகலெல்லாம் நோன்பிருப்பது நபிவழியா?? நாச வழியா?</u>

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களது வீட்டுக்கு சில நபித்தோழர்கள் வந்து நபிகளாரது வணக்க வழிபாடுகள் பற்றி அவர்களின் மனைவியிடம் கேட்டனர். அதற்கு அவர் கூறிய பதில் திருப்தியளிக்காததால் 'நாங்களும் நபியவர்களும் ஒன்றா? நாமோ பாவிகள் அவர்களோ முன்பின் பாவங்கள் மன்னிக்கப்பட்டவர்கள். எனவே நாம் நபிகளாரை விட அதிகம் வணக்கம் புரிய வேண்டும் என முடிவெடுத்தனர்' அவர்களில் ஒருவர் நான் இன்று முதல் இரவில் தூங்கவே மாட்டேன் .இரவு முழுக்க தொழுது கொண்டிருப்பேன் என்றும் மற்றவர் நான் இனிமேல் காலமெல்லாம் நோன்பு நோற்றுக் கொண்டிருப்பேன் என்றும் மூன்றாமவர் இனி நான் மனைவியிடம் நெருங்கவே மாட்டேன் என்றும் சத்தியம் செய்து கொண்டனர். இந்தச் செய்தி நபியவர்களின் காதுக்குச் சென்றதும் நபியவர்கள் இம்மூவரையும் அழைத்து நீங்கள் தானா இவ்வாறெல்லாம் சத்தியம் செய்து கொண்டவர்கள்??. அறிந்து கொள்ளுங்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக நானே உங்கள் அனைவரை விடவும் அல்லாஹ்வுக்கு மிகப் பயப்படுபவனும் தக்வா உடையவனுமாவேன். இருப்பினும் நான் இரவில் தொழவும் செய்கின்றேன். தூங்கவும் செய்கின்றேன். சில நாள் பகலில் நோன்பும் நோற்கின்றேன், சில நாள் நோன்பை விட்டு சாப்பிடவும் செய்கின்றேன். பல மனைவியரை மணந்து இன்பம் அனுபவிக்கவும் செய்கின்றேன். எனவே இதுதான் எனது வழிமுறை. எனது வழிமுறையைப் புறக்கணிப்பவன் என்னைச் சார்ந்தவனல்ல என நபியவர்கள் கூறினார்கள் . (ஆதாரம் புகாரி 4675 முஸ்லிம் 2487)

நபித்தோழர் ஸல்மான் பாரிஸியும் அபூதர்தாவும் நெருங்கிய நண்பர்கள். ஒருநாள் சல்மான் தனது நண்பர் அபூதர்தாவின் வீட்டுக்குச் சென்றார். அங்கு அவரது மனைவி அலங்கோலமான அழுக்கடைந்த ஆடைகளுடன் இருப்பதைக் கண்டு அபூதர்தா எங்கே? நீங்கள் ஏன் இப்படி அவலட்சனமான ஆடையுடன் இருக்கின்றீர்கள்? என வினவினார். அதற்கு அந்த அம்மையார் 'எனது கணவருக்கு துன்யாவில் எவ்வித தேவையுமே இல்லை. எப்போதும் வணக்க வழிபாடுகளழலேயே அவர் ஈடுபட்டிருப்பார் என பதிலளித்தார்' இதன் பின் ஸல்மான் தன் நன்பரைச் சந்தித்து நன்பரே' வாருங்கள் சாப்பிடுவோம் என அழைக்க அவர் நான் நோன்பு என்றார். நோன்பை விடச் சொல்லிவிட்டு இருவரும் சாப்பிட்டனர். இரவானதும் அபூதர்தா தொழ ஆரம்பித்து விட்டார். உடனே ஸல்மான் வேண்டாம் இப்போது தூங்கு என்று தூங்க வைத்தார். பின்னிரவில் இருவரும் எழுந்து தொழுதனர்.

காலையில் அவரை நோக்கி அபூதர்தாவே நீங்கள் உங்கள் உடலுக்குச் செய்யும் கடமைகள் சில உள்ளன, உம் மனைவிக்குச் செய்யும் சில கடமைகள் உள்ளன, அல்லாஹ்வுக்குச் செய்யும் சில கடமைகளும் உள்ளன. எனவே ஒவ்வொரு கடமையையும் ஒழுங்காக நிறைவேற்ற வேண்டும் எனப் போதித்தார். பின்னர் இது பற்றி அபூதர்தா நபியவர்களிடம் முறையிட்டபோது 'ஸல்மான் சொல்வது உண்மைதான்' என நபியவர்கள் கூறினார்கள்.
(ஆதாரம் : புகாரி 1823)

இதுதான் நபியவர்கள் முஸ்லிம்களுக்குக் கற்றுத்தந்த வணக்க வழிமுறை. இதைப்புறக்கணித்து நடப்பவர் என்னைச் சார்ந்தவரல்லர் என நபி (ஸல்) அவர்கள் அறிவித்து விட்டார்கள். இதைக் கவனத்தில் வைத்துக் கொண்டு பின்வரும் சம்பவங்களைப் படியுங்கள்.

பகலெல்லாம் நோன்பு நோற்றதாலும் இரவெல்லாம் நின்று வணங்கியதாலும் இளைத்துக் களைத்து இளவயதிலேயே மரணமடைந்து விட்ட ஏழை வாலிபர்களின் சம்பவம். (தொழுகையின் சிறப்பு 10 ம் ஹதீஸ் விளக்கம்.)

இச்சம்பவத்தில் அவரிடம் ஏன் இப்படி உடலை வருத்தி இபாதத் செய்கின்றீர்கள் என ஒருவர் கேட்டதற்கு 'நாங்கள் சில வாலிபர்கள் அதிக இபாதத் செய்பவர் யார் எனப் போட்டி வைத்தோம். மற்ற அனைவரும் இபாதத் செய்தே மரணித்து விட்டனர் நான் மாத்திரமே மிஞ்சியிருக்கின்றேன். ஒவ்வொரு நாளும் இரு தடவைகள் என் அமல்கள் அவர்களுக்கு எடுத்துக் காட்டப்படும் நிலையில் அதில் அவர்கள் குறை கண்டால் என்னைப்பற்றி என்ன நினைப்பார்கள் என்றார் வாலிபர்.

இவர் செய்த இபாதத் முறை நபிவழிக்கு எதிரானது. அப்படியே சரியென வைத்துக் கொண்டாலும் தன் நண்பர்களுக்கு தன் இபாதத் காட்டப்படும்போது அதில் அவர்கள் குறைகாணக் கூடாது எனும் எண்ணத்தில் அமல் செய்திருப்பதால் இதுவே இவரது அமலை இக்லாஸற்ற முகஸ்த்துதிக்குரியதாக்கி விட்டது

3- கப்ரில் தொழுத பெரியாரின் சம்பவம். (தொழுகையின் சிறப்பு 14 ம் சம்பவம்.)

தாபித் அல் பன்னானி எனும் பெயருடைய இப்பெரியாரின் புதல்வி தம் தந்தை 50 ஆண்டுகளாக இரவு முழுக்க விழித்து வணங்கி ஸுப்ஹூ நேரத்தில் தனக்கு கப்ரில் தொழும் பாக்கியத்தைத் தருமாறு துஆ கேட்டதாகச் சொல்கின்றார்.

ஹதீஸ்க்கலை மேதையான இவர் நபிவழிக்கு மாற்றமாக எப்படி 50 ஆண்டு இரவு முழுதும் வணங்கியிருக்க முடியும்? கப்ரில் கேள்வி கணக்கு முடிவுற்றதும் மறுமைநாள் வரை தூங்கு எனச் சொல்லி விட்டு மலக்குகள் சென்று விடுவார்கள் என நபிகளார் கூறியிருக்க இவர் எப்படி கப்ரில் எழுந்து தொழுதிருக்க முடியும்?. இதைத்தான் விட்டு விடுவோம் இதை நேரில் கண்டதாகச் சொல்கின்றாரே. அவரைச் சற்று குறுக்கு விசாரணை செய்வோம்.

'மையித்தை அடக்கிக் கொண்டிருக்கும் போது செங்கல் விழுந்து துவாரமேற்பட்டதால் அதனூடாக பெரியார் தொழுததைப் பார்த்திருக்கின்றார் இவர். மய்யித் அடக்கப்பட்டு அதன் உறவினர் சற்று தூரம் சென்றதன் பின்னரே மலக்குகள் வந்து உயிர் கொடுத்து அவரை எழுப்பி விசாரிக்கின்றனர். அது வரைக்கும் அவரால் எதுவும் செய்ய முடியாது. தொழுவதாயினும் நோன்பு பிடிப்பதாயினும் அது உயிர் கொடுத்ததன் பின்னரே சாத்தியப்படும். அப்படியிருக்க அதற்கு முன் பெரியார் தொழுவதை இவர் பார்த்திருக்க முடியுமா?

'கப்ருக்குள் ஒருவர் அடக்கப்பட்டதும் அவருக்கும் உலகுக்குமிடையில் திரையிடப்பட்டு விடுகின்றது. இது பற்றி அல்லாஹ்

'அவர்களுக்குப் பின்னால் அவர்கள் எழுப்பப்படும் நாள் வரைக்கும் ஒரு திரை போடப்பட்டிருக்கின்றது.' என்கின்றான். (ஸூரா முஃமினூன்)

இவ்வசனம் கப்றில் நடக்கும் விடயங்கள் மறைவானவை. அவற்றை சாதாரண எம்போன்ற மனிதர்களால் பார்க்க முடியாது என்பதைத் திட்டவட்டமாக எடுத்துரைக்கின்றது.

நீங்கள் இறந்தவர்களை அடக்காது விட்டு விடுவீர்களோ எனும் அச்சம் எனக்கில்லா விட்டால் நான் செவியுறும் கப்ருடைய வேதனையை நீங்களும் செவியுறுமாறு செய்திருப்பேன் என நபியவர்கள் கூறினார்கள். (ஆதாரம் முஸ்லிம்)

நபியவர்களைத் தவிர வேறு எவரும் கப்ரில் நடப்பவற்றைச் செவியுறமாட்டார்கள் என சொல்லியிருக்க மேற்படி நபர் எங்ஙனம் பெரியார் தொழுததைப் பார்த்திருக்க முடியும்.

கப்ரில் நடக்கும் விசாரணை மலக்குகள் அவரை எழுப்பி இருக்க வைப்பது, வேதனை செய்வது, நல்லவர்களின் கப்று தொலைதூரத்திற்கு விசாலமாக்கப்படுவதெல்லாம் ஹதீஸில் வந்துள்ளது. ஆனால் இவை நாம் விசாரிப்பது போன்றோ, நாம் எழுந்திருப்பது போன்றோ அல்ல. இதன் முறை எப்படியென்பதை அல்லாஹ்வே அறிவான். இவர் பெரியார் கப்ரில் தொழுவதைப் பார்த்திருந்தால் வழக்கமாக மனிதர்கள் தொழும் முறையில் தொழுவதையே பார்த்திருக்க வேண்டும். அது எப்படி மூன்றடி உயர கப்ரினுள் நிகழ்வது சாத்தியமாகும்?.

அதே போல் அரபு நாட்டு கப்றின் அமைப்பும் வித்தியாசமானது. இதற்கு லஹ்த் எனப்படும். வழக்கமான கப்று போல்த் தோண்டியதன் பின் அதன் வலது பக்கமாக பக்க வாட்டில் பொந்து போன்று உள்அறை ஒன்று தோண்டி அதனுள்ளேயே ஜனாஸா வைக்கப்படும். பின் அவ்வறை கற்களால் மூடப்படும். கப்றுக்கு மண்போட முன்பு கூட வெளியே இருப்பவர்களுக்கு ஜனாஸா தெரியும் வாய்ப்பே கிடையாது.

இவை அனைத்தையும் வைத்து ஆராய்ந்து பார்க்கும்போது மேற்படி சம்பவத்துக்கு ஆதாரமிக்க சான்று இல்லாததாலும், இச்சம்பவம் ஹதீஸுக்கு முரணாவதாலும் பகுத்தறிவும் ஏற்க மறுப்பதாலும் இது பெரியார்கள் மீது பக்தியை உருவாக்குவதற்காகப் புனையப்பட்ட சம்பவம் என்பது தெளிவாகின்றது.

4- அறுபது ஆண்டுகள் தொடர்ந்து அழுது கொண்டே இருந்த பெரியார். தொழுகை சிறப்பு 2 ம் சம்பவம்.

5- அறுபது ஆண்டுகளாக இஷாவுக்குச் செய்த ஒழுவுடன் ஸுபஹ் தொழுத பெரியார். தொ சிறப்பு 17 ம் சம்பவம்.

6- தூங்கவே மாட்டேன் என சத்தியம் செய்து 40 ஆண்டுகளாகத் தூங்காத பெரியார். தொ ..சிறப்பு 1 ம் சம்பவம் .

7- எழுபது ஆண்டுகளாக இடைவிடாது வணங்கிய பெரியார். தொ.. சிறப்பு 15 ம் சம்பவம்.

8- பதினைந்து ஆண்டுகள் தொடர்ந்து படுக்காத பெரியார். தொ சிறப்பு 11 ம் சம்பவம்.

9- அரசனானது முதல் மனைவியுடன் உறவு கொள்ளாத உமர் இப்னு அப்துல் அஸீஸின் சம்பவம். (தொ சிறப்பு 12 ம் சம்பவம்.) நபிவழி வாழ்ந்த ஒரு நீதியான அரசர் இப்படி மனைவியின் ஹக்குகளைப் பாழ்படுத்தியிருப்பாரா?

10- நாற்பது ஆண்டுகள் இரவெல்லாம் அழுது கொண்டும் பகலெல்லாம் நோன்பு வைத்துக்

கொண்டுமிருந்த பெரியார். (தொ..சிறப்பு 13 ம் சம்பவம்.)

11- பதினைந்து நாட்களுக்கு ஒரு தடவை சாப்பிட்ட பெரியார். (தொ. சிறப்பு 7 ம் ஹதீஸின் விளக்கம்)

இப்படி பெரியார்களின் சாதனைப் பட்டியல்கள் நீண்டு கொண்டே செல்கின்றன. இவையெல்லாம் ஆசாபாசங்கள், உலக தேவைகளுடன் படைக்கப்பட்டிருக்கும் மனிதர்களிடமிருந்து நடப்பது சாத்தியமா? என்பது இரண்டாவது விடயம். சரி நடந்தது என்றே ஒரு பேச்சுக்கு வைத்துக் கொள்வோம். ஆனால் இதற்கு மார்க்கம் அங்கீகாரம் வழங்கியுள்ளதா? என்பதே கேள்வி. மார்க்கம் தடுத்திருக்கும் விடயத்தைச் செய்து விட்டு இபாதத் செய்து விட்டேன் என்று எப்படிச் சொல்ல முடியும்.? தீன் என்பது அல்லாஹ்வுடைய கட்டளையும் நபி (ஸல்) அவர்க ளுடைய வாழ்க்கை வழிமுறைகளும் என்று பெரியார்கள் சொல்லித்தந்த மந்திரத்தை பள்ளியெங்கும் பிரச்சாரம் செய்து கொண்டிருக்கும் எனதன்பின் கார்க்கூன் சகோதரர்களே!! மேற்படி பெரியார்களின் வாழ்க்கைச் சாகச நிகழ்வுகள் அல்லாஹ்வின் கட்டளையா? அல்லது நபியவர்களுடைய வாழ்க்கை வழி முறையா? என்று ஒரு தடவையேனும் நீங்கள் சிந்தித்ததுண்டா? சிந்தியுங்கள்! இஸ்லாம் சிந்திக்கத் தூண்டும் மார்க்கம். பகுத்தறிவுக்கு வேலை கொடுக்கும் மார்க்கம். இஸ்லாத்தை ஏற்க வரும் அன்னிய மதத்தினரைக் கூட இஸ்லாத்தைப் பற்றிச் சிந் தித்து அதன் சீரிய நேரிய தன்மையை அறிந்து விளங்கி ஏற்றுக் கொள்ளுமாறே அது தூண்டுகின்றது. எத்தனையோ மாற்றுமத நண்பர்கள் இஸ்லாத்தை அறிய விரும்பி குர்ஆன் ஹதீஸைப் படித்து இஸ்லாத்தின் மாண்புகளை அறிந்து அதனை ஏற்ற வரலாறுகள் நிறைய உண்டல்லவா? அப்படியாயின் பரம்பரை முஸ்லிம்களான நாம் ஏன் இப்படி குர்ஆன் ஹதீஸைப் படிப்பது விளங்குவதை விட்டும் எமக்கு நாமே தடைவேலி போட்டுக் கொள்ள வேண்டும். குர்ஆன் ஹதீஸ் நமக்கு வழிகாட்டும் என்ற நம்பிக்கை இருந்தால் இன்றே அதன் பக்கம் வாருங்கள். அதன் மூலம் இஸ்லாத்தைப் பற்றிப் படியுங்கள். கேவலம் பத்து ரூபாவுக்கு மண்பானை ஒன்றை நீங்கள் வாங்கும் போதும் அதில் வெடிப்பேதும் உள்ளதா எனப் பதினைந்து தடவைகள் தடவிப் பார்க்கின்றீர்கள். எதற்காக? நாம் பத்து ரூபாய் விடயத்தில் கூட ஏமாந்து விடக் கூடாதென்பதில் ஜாக்கிரதையாக இருக்கின்றீர்கள். இந்த மண்பானை விடயத்துக்குக் கொடுக்கும் முக்கியத்துவம் கூட மார்க்க விடயத்துக்குக் கொடுக்க மாட்டேன் என்கின்றீர்களே! ஏன்இப்படி? எனவே யார் எதைச் சொன்னாலும் சட்டென நம்பி விடாமல் குர்ஆன் ஹதீஸில் உள்ளதா? என்று ஆதாரத்துடன் மார்க்கத்தைப் படியுங்கள். நிச்சயமாக அல்லாஹ் எம் அனைவருக்கும் நேர்வழி காட்டுவான். அல்லாஹ் நேர்வழி காட்ட நாடியவர்களை எவராலும் வழிகெடுக்க முடியாது இது இறைவன் வாக்கு. கடவுளை நம்பினார் கைவிடப் படார்!!!.

## புத்திக்குப் பொருந்தாத புதிர்ச் சரிதைகள்.

ஹஜ்ரத் ஷக்கீக் பல்கி எனும் சூபி மகான் கூறுவதாவது ..
நாங்கள் ஐந்து விடயங்களைத் தேடினோம் அவற்றை ஐந்து இடங்களில் பெற்றுக்கொண்டோம்.

- இரணத்தில் பரக்கத்து ளுஹாத் தொழுகையிலும்..
- கப்ருக்கு ஒளி தஹஜ்ஜத் தொழுகையிலும்..
- முன்கர் நகீரின் கேள்விக்கு பதில் கிராஅத்திலும்..
- சிராத்தல் முஸ்தகீம் பாலத்தை எளிதாகக் கடப்பது நோன்பிலும் ஸதக்காவிலும்..
- அர்ஷுடைய நிழல் தனிமையிலிருப்பதிலும் கிடைக்கப் பெற்றோம்.. (தொழு ..சிறப்பு 32 ம் பக்கம்.)

இரணத்தில் பரக்கத் ஏற்பட்டிருக்கலாம். அது லுஹாத் தொழுகையால்தான் என்று எப்படி இவர் அறிந்தார்? குர்ஆன் ஹதீஸ் ஆதாரம் வைத்திருக்கின்றாரா?. அல்லது இவருக்குத்

தனிப்பட்ட முறையில் வஹி வந்ததா? கப்ருக்கு ஒளி தஹஜ்ஜுத் தொழுகையிலென்றால் இவர் கப்ருக்குச் சென்று பார்த்து விட்டு வந்தாரா? ஸிராத்தல் முஸ்தகீம் பாலத்தையும் பார்த்திருக்கின்றார் போலும். அர்ஷின் கீழும் சென்று உட்கார்ந்து விட்டு வந்திருக்கின்றாரோ??.... மக்களின் மார்க்க அறியாமையை மூலதனமாகப் பயன்படுத்திக் கொண்டு என்னவெல்லாம் சொல்லுகின்றார்கள்? உண்மையிலேயே இபாதத்தின் மீது மக்களுக்கு ஆசை ஆர்வத்தை ஏற்படுத்த வேண்டுமாயின் அதற்காக குர்ஆன் ஹதீஸிலே நூற்றுக்கணக்கான சம்பவங்கள் உள்ளன. நபியவர்கள் போற்றிச் சென்ற மூன்று சிறந்த நூற்றாண்டு காலப்பகுதியில் நபிவழியை அச்சொட்டாகப் பின்பற்றி வாழ்ந்த நல்லோரின் வாழ்க்கைக் குறிப்பு ஆதாரப்பூர்வமான சான்றுகளுடன் இருக்கின்றன. இவற்றையெல்லாம் விட்டு விட்டு முகவரியற்றவர்களின் மூடத்தனமான - நபிவழிக்கு முரணான, பகுத்தறிவு பழித்துரைக்கும் ஆதாரமற்ற சம்பவங்களை பக்திக் பரவசத்துடன் பள்ளியில் உட்கார்ந்து படிப்பதால் இஸ்லாத்தை அறிய முடியுமா? பெரியார்கள் பெரியார்கள் என்று அவர்கள் மீது ஒரு குறுட்டுப் பக்தியை ஏற்படுத்தி பின்னர் தங்களையும் மக்கள் பெரியார்களாக மதிக்க வேண்டும் என்ற குறுகிய - சுயநல நோக்கத்துடன்தான் இவையெல்லாம் திட்டமிட்டு எழுதப்பட்டனவா? என்று எண்ணத் தோன்றுகின்றது.

நபியவர்களை விடச் சிறந்த பெரியார் யார்? ஸஹாபாத்தோழர்களை விடச் சிறந்த பெரியார்கள் யார்? இவர்களுடைய வாழ்க்கை எமக்கு முன்மாதிரியாக இருப்பதற்குப் போதாவிட்டால் நம்மைவிட மோசமான வழிகேடர் யாரும் இருக்க முடியாது. ஸஹாபாக்களின் சம்பவங்களும் தஃலீம் தொகுப்பில் கூறப்பட்டுள்ளதுதானே என சிலர் வினவலாம். ஸஹாபாக்களின் சம்பவங்களும் இதில் கூறப்பட்டுள்ள பெரியார்களின் சம்பவங்களும் ஒன்றுக்கொன்று முரணானவை. ஸஹாபாக்களின் சம்பவங்கள் நபிவழியை மையமாக வைத்து இடம்பெற்றிருப்பவை. இந்தப் பெரியார்களின் வாழ்வில் இடம்பெற்றதாகச் சொல்லப்படும் சம்பவங்கள் முழுக்க முழுக்க நபிவழிக்கு முரணானவை. இதை ஏற்றால் அதை மறுக்க வேண்டும். அதை ஏற்றால் இதை மறுக்க வேண்டும். இரவெல்லாம் நின்று வணங்குவது நபிவழியா? பகலெல்லாம் நோன்பு நோற்பது நபிவழியா? மனைவியுடன் உறவு கொள்ளாமல் இருப்பது நபி வழியா? கப்ரில் அடக்கப்பட்டவர்களிடம் துஆக் கேட்பது நபி வழியா? துறவறம் பூண்டு காடே கதியெனச் செல்வது நபிவழியா? சொல்லுங்கள். சற்று சிந்தித்துப்பாருங்கள். எந்த வழி நமக்கு வேண்டும்? நபிவழியா அல்லது இந்த முகவரியற்ற பெரியார்களின் வழியா? நீங்களே சிந்தியுங்கள்! நீங்களே முடிவு செய்யுங்கள். நாளை அல்லாஹ்வின் முன்னிலையில் நிறுத்தப்படுவீர்கள் என்பதை நினைத்துப் பாருங்கள். கப்ரிலே ஒவ்வொருவருக்கும் கேள்வி கணக்கு உண்டு. நபியவர்களை ஒவ்வொருவருக்கும் காட்டப்பட்டு இவரைப்பற்றி என்ன கூறுகின்றாய் என்று கேட்கப்படும். அப்போது நபிவழிப்படி நடந்த நல்லவர்கள் 'இவர்தான் எங்கள் நபி முஹம்மது. இவர் எங்களுக்கு நேர் வழியைக் காட்டினார். அதை நாங்கள் பின்பற்றி நடந்தோம்' என்றும் நபிவழியைப் புறக்கணித்து வாழ்ந்தவர்கள்' இவரா? இவரை எனக்குத் தெரியாதே இவரைப்பற்றி யாராரோ என்னென்னவோ சொல்லிக் கொண்டிருந்தார்கள். நானும் அதையே சொல்லிக் கொண்டு திரிந்தேன்' என பதிலளிப்பார். (புகாரி 1252 -முஸ்லிம் 1557)

இவ்விரு சாராரில் எந்தப் பிரிவில் நாம் சேர வேண்டுமென்று நீங்களே முடிவெடுங்கள். அதற்காக என்ன செய்ய வேண்டுமென்றும் முடிவெடுங்கள். நாமும் நபிவழிப்படி நடந்திருந்தால் தானே தக்க பதிலை அளிக்க முடியும். இதை மனதில் கொண்டு நாம் செல்லும் பாதையை சீர்படுத்திக் கொள்வது ஒவ்வொருவரினதும் கடமையாகும் என்பதைக் கவனத்தில் கொள்ளுங்கள்.

## மூன்றாவது அடிப்படை.

<u>இல்மு திக்ரு.</u>

ஆரம்பத்தில் அல்லாஹுத்தஆலா துன்யா ஆகிராவுடைய வெற்றியை தீனில் வைத்திருக்கின்றான். தீன் என்பது அல்லாஹ்வுடைய கட்டளை, நபி (ஸல்) அவர்களுடைய

வாழ்க்கை வழிமுறை. இந்த வாழ்க்கை எம்மிடத்திலும் பூரா மனித சமுதாயத்திடத்திலும் வருவதற்கான ஒரு உழைப்பே தப்லீக் செய்யும் வேலை எனும் கோஷமே தப்லீக்கில் மூலை முடுக்கெங்கும் பட்டி தொட்டியெங்கும் பிரச்சாரம் செய்யப்படும். ஆனால் அங்கே அல்லாஹ்வுடைய கட்டளையும் நபி (ஸல்) அவர்களுடைய வாழ்க்கை வழிமுறையும் தான் போதிக்கப்படுகின்றதா? என்பதே கேள்விக்குறியாகும்.

இல்மின் சிறப்பு பற்றி தப்லீக்கில் இல்முடைய மஜ்லிஸில் ஒரு ஸாஅத்து நேரம் அமர்ந்திருப்பது இந்த உலகம் உலகிலுள்ள வஸ்த்துக்கள் அனைத்தை விடவும் சிறந்தது என்றும் திக்ரின் சிறப்புப் பற்றி 'திக்ருடையவன் உயிருடையவன் திக்ரற்றவன் உயிரற்ற பிணம்' என்றும் ஒவ்வொருத்தராக ஜமாஅத்தில் எழுந்து இந்த வசனத்தைச் சொல்வதை வழக்கமாக்கிக் கொண்டிருக்கின்றார்கள்.

இல்ம் என்றால் மார்க்க அறிவு என்று அர்த்தம். மார்க்க அறிவெனும்போது அல்லாஹ்வும் அவனது தூதரும் போதித்தவைகளுக்கே மார்க்க அறிவு எனப்படும். இது தவிர இவற்றை சரி வரக் கற்றுக் கொள்வதற்கு உதவியாக இருக்கும் கலைகளுக்கும் இல்ம் என்று சொல்லப்படும்.

ஆனால் மார்க்க அறிவு பற்றி எந்தளவு குறுகிய கண்ணோட்டத்துடன் இவர்கள் இருக்கின்றார்கள் என்பதை நாம் சற்று விரிவாக அறிய வேண்டியுள்ளது. சுருங்கக் கூறுவதாயின் இவர்களிடத்தில் இல்ம் -- மார்க்க அறிவு அவசியம் என்று சொல்லப்படும், பேசப்படும் விடயங்களில் 25 சதவீதமானவை பலவீனமான, இட்டுக்கட்டப்பட்ட செய்திகளாகவும், 25 வீதமானவை நபியவர்கள் எச்சரித்துச் சென்ற பித்அத்தான மௌட்டீக விடயங்களாகவும் இன்னும் 25 வீதமானவை சிர்க்கை - இணை வைப்பை வளர்க்கும், ஆதரிக்கும் விடயங்களாகவும் இருப்பதை அறிய முடிகின்றது. ஆக கால்வாசி தூய மார்க்க அறிவும் கால்வாசி பித்அத்துக்களும் இன்னும் கால்வாசி ஷிர்க்குக்குத் துணைபோகும் விடயங்களும் மற்றும் கால்ப்பகுதி பலவீனமான இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸ்களின் வழிவந்த செய்திகளையும் கலந்த கலவையால் உருவானதே தப்லீக் அமைப்பு எனலாம் இனி இவை பற்றி சற்று விரிவாகப் பார்ப்போம்.

<u>பலவீனமான, புனையப்பட்ட ஹதீஸில் உருவான இல்மு திக்ர் போதனை ...</u>

ஸஹீஹ் என்றால் ஆதாரப்பூர்வமான ஹதீஸாகும். நபியவர்களிடமிருந்து தாம் பெற்றதாக நேர்மையான, நினைவாற்றல் மிக்க அறிவிப்பாளர்கள் எவ்வித குளறுபடிகளோ,மாற்றமோ இன்றி அறிவிக்கும் ஹதீஸ்களே ஆதாரப்பூர்வமாக ஹதீஸ் எனக் கொள்ளப்படும்.

இதற்கு மாற்றமான ஹதீஸ்கள் பலவீனமான ஹதீஸ்களாகும். பலவீனமான ஹதீஸ்களை ஆதாரத்துக்கு எடுக்க முடியாது என்ப தே ஹதீஸ்க்கலை அறிஞர்களின் ஏகோபித்த முடிவாகும். ஆனால் தப்லீக் பெரியார்களைப் பொறுத்த வரைக்கும் இது விடயத்தில் எவ்விதக் கவனமும் இல்லாது அலட்சியமாக நடந்து கொள்வதே அவர்களின் வழக்கமாகும் .

இவர்கள் போற்றிப் புகழும் ஸூஃபித்துவப் பித்தர்களில் ஒருவனான இப்னு அரபி என்பவன் ஹதீஸ் பற்றி என்ன கூறுகின்றான் பாருங்கள்...

'எத்தனையோ ஹதீஸ்களை துன்யாவுடைய உலமாக்கள் ஸஹீஹ் என்று நினைத்து அமல் செய்து கொண்டிருக்கின்றார்கள் ஆனால் நாங்கள் கஸ்புடைய ஞான நிலையில் நபிகளை நேரடியாகச் சந்தித்து இந்த ஹதீஸை நீங்கள் சொன்னீர்களா உங்களுடையதுதானா? என வினவும்போது இல்லையே! என்று மறுத்து விடுவார்கள். எனவே நேரடியாக நபியிடமிருந்து கிடைத்த வாக்குமூலத்தின் அடிப்படையில் நாங்கள் அந்த ஹதீஸின்படி அமல் செய்வதை விட்டு விடுகின்றோம். அவ்வாறே பலவீனமான ஹதீஸை துன்யாவுடைய உலமாக்கள் புறக்கணிக்கின்றார்கள். ஆனால் நாங்கள் நபியிடத்தில் நேரடியாக சந்தித்து இதுபற்றிக்

கேட்டவேளை இல்லையே நான்தானே அதைச் சொன்னேன் என்பார்கள். எனவே தான் துன்யாவுடைய குறுகிய அறிவுள்ள இந்த ஹதீஸ்கலை உலமாக்களின் 'இந்த ஹதீஸ் பலவீனமானது. அது இட்டுக்கட்டப்பட்டது' எனும் பேச்சையெல்லாம் நாம் பொருட்படுத்துவதில்லை என்று உளறுகின்றான்.

இது போன்று தான் தப்லீக் உலமாக்களின் ஹதீஸ் பற்றிய அணுகுமுறையும் உள்ளது. பாமர தப்லீக் சகோதரர்களைப் பொறுத்தவரை அவர்களுக்கு நபிவழியைத்தான் பின்பற்ற வேண்டும் எனும் வைராக்கியம் இருந்தாலும் கூட அவர்களுக்குப் போதிக்கப்படும் தவறான விளக்கங்களால் அவர்களும் இவ்விடயத்தில் ஒருவகை அறிவீனத்துடனேயே செயற்படும் அவல நிலையைக் காண முடிகின்றது.

<u>உதாரணத்துக்கு சில நிகழ்வுகள்....</u>

1- நான் தப்லீக் ஜமாஅத்தில் தீவிர ஈடுபாடு கொண்டிருந்த காலத்தில் ஒருமுறை வக்தை முடித்து விட்டு வீடு திரும்ப இருந்தவேளை வக்து முடித்துச் செல்பவர்களுக்கு வாப்பஸ் பயான் எனும் ஒரு பயான் நடைபெறுவது வழக்கம். அதனை நிகழ்த்த ஒரு கார்க்கூன் வந்திருந்தார். எனக்கு நன்கு தெரிந்தவர் இன்றும் உயிரோடு இருக்கின்றார். பெயரைக் கூறாது விடயத்தைத் கூறுகின்றேன். இவர் தனது பயானில் உயர்பீட தப்லீக் பெரியார்கள் சொன்னதாக எங்களுக்குச் சொன்ன செய்தி...

'நாம் நபியவர்கள் மீது எப்படி மஹப்பத் வைக்க வேண்டுமென்றால் நபியவர்கள் சொன்னதாக, செய்ததாக எந்தச் செய்தியை அறிந்தாலும் - அது முடியுமா முடியாதா? சாத்தியமா? என்றெல்லாம் எதுவும் யோசிக்காது அதைத் செய்யத் துணிந்து விட வேண்டும். மாறாக அது புகாரியில் உள்ளதா, முஸ்லிமில் உள்ளதா?, மிஷ்க்காத்தில் உள்ளதா? ஸஹீஹா, ளயீபா என்றெல்லாம் ஆராயக்கூடாது. இவ்வாறு துருவி ஆராய்வது நபியை முஹப்பத் வைக்கும் பக்திமான்களின் செயலல்ல' என்று விளக்கம் கூறினார். (இதனை நேரில் கேட்ட சாட்சிகள் இன்னும் பலர் உள்ளனர்.)

2- இதே போன்று கொழும்பு பெரிய மர்கஸுக்கு டில்லி மர்க்கஸில் இருந்து 2002 ம் ஆண்டு சில முக்கிய பெரியார்கள் வந்திருந்தனர். இவர்கள் ஸஹீஹ்-ளயீபான ஹதீஸுக்கு ஒரு அதிசய விளக்கத்தைக் கொடுத்தார்கள்...

பயானில் அப்பொரியார் சொன்னார் 'ஸஹீஹான ஹதீஸ் என்பது பால்த்தேனீர் போன்றது, ளயீபான ஹதீஸ் சாதாரண தேனீர் போன்றது. பால்த்தேனீர் கிடைக்காவிட்டால் நாம் சாதாரண தேனீரைப் பருகுவதில்லையா? அது போன்றுதான் ஸஹீஹான ஹதீஸ் கிடைக்காவிட்டால் பலவீனமான ஹதீஸின் படி அமல்ச் செய்வதில் எவ்விதத் தவறும் இல்லை' என்று திருவாய் மலர்ந்தார். இன்னுமோரிடத்தில் 'ளயீபான ஹதீஸ் என்றால் என்ன தெரியுமா? பெரிதாக ஒன்றுமில்லை. அதை அறிவித்த அறிவிப்பாளர் எப்போதாவது காலில் செருப்புப் போடாமல் நடந்திருப்பார், எப்போதாவது நின்று கொண்டு தண்ணீர் குடித்திருப்பார். அதனால் அவர் அறிவித்த ஹதீஸைப் புறந்தள்ளி விட்டார்கள். எனவே இவர் செய்த இந்தச் சிறிய தவறுக்காக நாம் அந்த ஹதீஸையே மறுத்து விட முடியுமா? ' என்று வினாத் தொடுத்தார். (இதனை நேரில் கேட்ட சாட்சிகள் பலர் இன்றும் உள்ளனர்.)

<u>பலவீனமான ஹதீஸால் இல்மு திக்ர் போதனை...</u>

இது போன்றே ஜக்கரிய்யா மௌலானா தனது அமல்களின் சிறப்பு எனும் நூலிலே ஏகப்பட்ட கதைகளையும் முகவரியற்ற கப்ஸாக்களையும் அள்ளி விதைத்து விட்டுப் பின்வருமாறு இயம் புகின்றார்கள்.

'(பளாயில்) சிறப்புகளைக் குறிப்பிடும் அறிவிப்புக்களைக் கூறுவதில் முஹத்திதீன்கள்

மத்தியில் சற்றுத் தாராளமான நிலை இருக்கின்றது. எனவே சாதாரணமான பலவீனமான அறிவிப்புக்களும் இப்புத்தகத்தில் கூறப்பட்டுள்ளன. சூபிய்யாக்களுடைய சம்பவங்கள் சரித்திர வகையைச் சார்ந்ததாகும். அவை ஹதீஸின் அந்தஸ்த்தை விடக் குறைவானவை என்பதும் தெளிவான விடயமாகும். எனவே இந்நூலிலுள்ள பலவீனமான ஹதீஸ்கள் சம்பவங்கள் அனைத்தும் ஏற்றுக் கொள்ளத்தக்கவையே'. (அமல்களின் சிறப்பு ப: 147)

சிறப்புகள் பற்றி பேசும் ஹதீஸ்களில் மிக அதிகமான உலமாக்கள் பலவீனமானவற்றை அறிவிக்கவே கூடாது என்று ஒரேயடியாகத் தடை விதித்துவிட்டனர். ஒரு சில முஹத்திதீன்கள் கடுமையான நிபந்தனைகளின் பின் பலவீனமான ஹதீஸ்களைக் குறிப்பிடுவது கூடும் என்கின்றனர். அவர்கள் விதித்த நிபந்தனைகளைப் பாருங்கள்.

1- ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களினால் உறுதிப்படுத்தப்பட்ட ஒரு விடயத்துக்கு வலுவூட்டும் வகையிலேயே ளயீபான ஹதீஸ் இருத்தல் வேண்டும்.

2- அகீதா -இறை நம்பிக்கை, மறைவானவை பற்றிய விடயமாகவோ, சட்டதிட்டங்கள் பற்றியதாகவோ இல்லாதிருத்தல் வேண்டும்.

3- ளயீபான ஹதீஸ் மூலம் செய்யும் அமலுக்குக் கூலி கிடைக்குமென்று உறுதி கொள்ளாதிருத்தல் வேண்டும்.

சிறப்பு பற்றிய ளயீபான ஹதீஸ்களில் இவ்வளவு கடுமையான நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருக்கின்ற நிலையில் ஜக்கரிய்யா மௌலானா இப்படிப் பொத்தம் பொதுவாக தாராளமாக ளயீபானவற்றை வைத்து அமல் செய்யலாம் என்று சொல்லியிருப்பது எப்படி நியாயமாகும்.

சூபியாக்களின் சம்பவங்கள் ஹதீஸைவிடத் தரம் குறைந்தவை என்று சொல்லிவிட்டு 'எனவே இதிலுள்ள ஹதீஸ்களும் சம்பவங்களும் ஏற்றுக் கொள்ளத்தக்கவையே' என்று சொல்கின்றார். ளயீபான ஹதீஸ்களை அறிவிக்க அறிஞர்களின் சலுகை இருக்கின்றது என நியாயம் கூறியவர், அதை விட தரம் குறைந்த சூபியாக்களின் சம்பவங்களை நியாயப்படுத்த எவ்வித காரணமும் கூறாது நழுவி 'சூபியாக்களின் சம்பவங்களும் ஏற்றுக் கொள்ளத்தக்கவையே' என்று மாத்திரம் கூறி முடிக்கின்றார்.

இதிலிருந்து தெரிவது யாதெனில் தப்லீக் பெரியார்களானவர்கள் ஹதீஸ் கலை அறிஞர்கள் நபிமொழிகளை தரம் காணக் கடைப்பிடித்த வழி முறைகள் அனைத்தையுமே உதறித்தள்ளி விட்டு நமது கருத்தை, நோக்கத்தை மக்கள் மத்தியில் பரப்புவதற்கு பலவீனமான, இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸ்கள் மாத்திரமல்ல இஸ்லாத்தின் அடிப்படையையே தகர்க்கக் கூடிய ஷிர்க்கான சம்பவங்களையும் தாராளமாகக் கூறத் தயங்க மாட்டார்கள் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

ஆனால் ஆச்சரியம்!!! இவையெல்லாம் இல்மு எனும் பெயரில் தப்லீக் சகோதரர்களால் பள்ளிவாயல்கள் தோறும் அரங்கேற்றப்படுகின்றன.

இது அமல்களில் சிறப்பில் இருக்கும் அந்தரங்கங்கள் அடுத்த தஃலீம் நூல்களான ஸதக்காவின் சிறப்பு, ஹஜ்ஜின் சிறப்பு போன்றவற்றைப் பற்றி சொல்ல முடியாதளவுக்கு குப்பைகள் நிறைந்துள்ளன. அதிலுள்ள அனைத்து விடயங்களையும் ஒருவன் சரியென்று நம்பினால் அவனுடைய ஈமானே பறிபோய் விடும் என்று சொல்லும் அளவுக்கு இறைநம்பிக்கைக்கு வேட்டு வைக்கும் விடயங்கள் நிறைந்து காணப்படுகின்றன. ஆழமாகப் படித்தால் இவை அழகாகப் புலப்படும். இவற்றை ஒவ்வொன்றாக எடுத்து விளக்கிக் காட்டுவது முடியாத காரியமாதலால் முதலில் ஒவ்வொரு முஸ்லிமும் ஈமானுக்கு ஊறு விளைவிக்கும் ஷிர்க், பித்அத் பற்றி ஒரளவு அறிந்து வைத்திருந்தால் - ஈமான் எனும்

டார்ச்லைட்டை உங்கள் கைகளில் எடுத்துக் கொண்டு அதன் ஒளியில் இந்த இரு புத்தகங்களிலுமுள்ள விடயங்களை அலசினால் பக்கத்துக்குப் பக்கம், பந்திக்குப் பந்தி, வரிக்குவரி மார்க்க விரோதக் கருத்துக்களைத் தாங்கிய நச்சுக் கருத்துக்கள் வழி நெடுகிலும் இருப்பதை நீங்களாகவே ஏற்றுக் கொள்வீர்கள்.

<u>இல்மு திக்ர் எனும் பெயரில் அரங்கேரும் பித்அத்துகள்...</u>

'பித்அத்து' என்றால் நபியவர்களின் வழிகாட்டலுக்கு மாற்றமாக மார்க்கத்தின் பெயரால் உருவாக்கப்படும் நூதன அனுஷ்ட்டானங்களைக் குறிக்கும். நபியவர்கள் எதை மார்க்க விடயமெனப் போதித்தார்களோ அவை மாத்திரமே தீன் ஆகும். நபியவர்கள் பித்அத் பற்றியும் அதன் தீய விளைவுகள் பற்றியும் மிக முக்கியத்துவம் கொடுத்து மக்களுக்குப் போதித்ததை நாம் அவதானிக்க முடிகின்றது. எந்த அளவுக்கென்றால் நபியவர்கள் ஏதாவது உரை நிகழ்த்த ஆரம்பிக்கும் போது பித்அத் பற்றிய எச்சரிக்கையை விடுத்தவண்ணம் பின்வருமாறு தமது உரையைத் தொடங்குவார்கள்.

'புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே.. அவனைப் புகழ்ந்து அவனிடமே உதவி தேடுகின்றேன். பேச்சில் சிறந்தது அல்லாஹ்வின் கலாமாகிய அல்குர்ஆனாகும். வழிகாட்டல்களில் சிறந்தது நபி முஹம்மத் அவர்களின் வழிகாட்டலாகும். அனைத்திலும் மிகக் கெட்ட விடயம் மார்க்கத்தின் பெயரால் உருவாக்கப்பட்ட பித்அத்துகள் - இஸ்லாத்தில் இல்லாத மௌட்டீகங்களாகும். இவை அனைத்துமே பித்அத்தாகும். பித்அத்துகள் அனைத்துமே வழிகேடாகும். அனைத்து வழிகேடுகளும் நரகத்தின் பக்கமே கொண்டுபோய்ச் சேர்க்கும்' என்று கூறியே ஆரம்பிப்பார்கள். (அபூதாவூத் 1060 நஸாயி 3991) .

மேலும் நபியவர்கள் கூறினார்கள்...
'எனது மார்க்கமான இஸ்லாத்தில் எவர் அதிலில்லாத ஒன்றைப் புதிதாக உருவாக்குகின்றாறோ அது நிராகரிக்கப்பட்டதாகும்' என்றும் 'எவர் நாங்கள் சொல்லாத ஒரு காரியத்தை மார்க்கத்தின் பெயரால் செய்கின்றாரோ அது நிராகரிக்கப்பட்டதாகும்' எனவும் எச்சரித்துள்ளார்கள். (ஆதாரம் புகாரி முஸ்லிம்.)

எனவே பித்அத் எனப்படுவது சொல், செயல் எண்ணம் போன்ற மூன்றின் மூலமும் ஏற்பட முடியும். தப்லீக் அமைப்பினரிடம் அப்படி என்ன பித்அத்துக்கள் இருக்கின்றன.???

தப்லீக் உஸூலின் பிரகாரம் இவர்கள் 3 நாள், 40 நாள், 4 மாதம் ஒருவருடம் என வெளிக்கிளம்பிச் செல்கின்றார்கள். இந்த நாட்களை எந்த ஆதாரத்தின் அடிப்படையில் நிர்ணயம் செய்தீர்கள் என்று கேட்டால் துமாமா எனும் காபிரான உளவாளியை நபியவர்கள் 3 நாட்கள் கட்டிப்போட்டார்கள். மூஸா நபியை அல்லாஹ் தன்னுடன் உரையாட 40 நாட்கள் அழைத்தான். 4 மாதத்தில் கருவில் சிசுவுக்கு உயிர் கொடுக்கப்படுகின்றது என்று ஏதேதோ சம்பந்தமில்லாத காரணங்களையும் ஆதாரங்களையும் கூறி மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போட முயற்சித்துக் கொண்டிருப்பார்கள். அப்படியென்றால் நபியவர்களின் தாய் அவர்களின் ஆறாவது வயதில் இறந்தார்கள். அதற்காக ஆறு வருடங்களும், நபியவர்கள் 40 வயதில் நபியானார்கள் என்பதற்காக 40 வருடங்களும் வெளிக்கிழம்பிச் செல்வார்களா? எங்கள் தனிப்பட்ட நலனுக்காக நிர்ணயித்தோம் என்றால் விடயம் முடிகின்றது. ஆனால் அப்படிச் செய்ய மாட்டார்கள். அதாவது சுற்றி வளைத்து தமது எண்ணம் தேவைக்கேற்ப நாட்களின் அளவை நிர்ணயித்து விட்டு அதற்கு மார்க்க சாயம் பூச முற்படுவதுதான் ஆச்சரியமான விடயம். இனி விடயத்துக்கு வருவோம்....

1- தப்லீக்கில் செல்ல தமது வசதிக்கேற்ப நாள் நிர்ணயிப்பதைத் தவறென்று சொல்ல முடியாது. அது அவரவர் வசதிக்கேற்ப நிர்ணயிக்கப்படும் விடயம். ஆனால் இந்த தப்லீக் பெரியார்கள் மாதத்தில் ஒருவர் 3 நாள் வெளிக்கிழம்புவதே ஒரு மிகப்பெரிய வணக்கம் என்பது போன்ற பிரமையை உருவாக்கி 3 நாள் செல்லாவிட்டால் அவர் மாபெரியதொரு

தெய்வக் குற்றத்தைச் செய்து விட்டார் என்பது போன்ற ஒரு போலி அச்சத்தை உருவாக்கி விடுகின்றனர். 3 நாள் செல்லாவிட்டால் அல்லாஹ்வின் சாபம் வந்துவிடும், அவனது வேதனை நம்மைச் சும்மா விடாது. எதற்காகப் போகாது விட்டோமோ அந்தக் காரியமும் நிறைவேறாது என்பது போன்ற போலி பக்தியை, பயத்தை இவர்கள் பாமரர்களுக்குத் தோற்றுவிக்கின்றார்கள். 3 நாட்கள் சென்ற ஒருவர் அத்தியாவசிய வேலை நிமிர்த்தம் வீடு செல்ல ஏற்பட்டால் சில முக்கியஸ்த்தர்கள் 'அப்படிச் சென்றால் வக்து முறிந்து விடும் என்று கூறிப் பயமுறுத்துவதும் உண்டு. இதன் மூலம் இதுவும் தொழுகை நோன்பு போன்றதொரு வணக்கம் என்பது போன்று சித்தரிக்க முயல்கின்றனர். இது ஒரு பித்அத் ஆகும். வெறுமனே ஊரை விட்டு வெளிக்கிளம்புவது வணக்கமாகுமா? வெளிக்கிளம்பாமலிப்பது குற்றமாகுமா? இல்லையே!! அப்படியிருக்க ஏன் இவ்வாறு மார்க்கத்தின் பெயரால் இயக்கத்துக்கு ஆள் சேர்க்கின்றார்கள்??

இன்று தப்லீக்கின் முக்கியஸ்த்தராக இருக்கும் காத்தான்குடியைச் சேர்ந்த எனது உஸ்தாது ஒருவர் அடிக்கடி இப்படிச் சொல்வார்...

'ஊரில் ஏதாவது பிரச்சினைகள் தோன்றும் அபாயம் ஏற்பட்டால் உடனே ஊரிலுள்ள ஜமாத் வெளியே நிற்கின்றதா? அல்லது வெளி ஜமாஅத் ஊரில் வேலை செய்கின்றதா? என்று பார்ப்பேன். அப்படியிருந்தால் அல்ஹம்துலில்லாஹ் நிச்சயம் எவ்விதப் பிரச்சினையும் ஏற்படாது என்று எண்ணிக் கொள்வேன். ஏனென்றால் ஊரில் ஜமாத் நிற்கும் போது எவ்வித வேதனையையும் அல்லாஹ் அனுப்பமாட்டான் என்று கூறுவார்கள். இதை எந்த ஆதாரத்தின் அடிப்படையில் சொன்னார்கள். இது பித்அத்தான பேச்சு இல்லையா? அப்படியானால் கொழும்பு தப்லீக் மர்க்கஸிலிருந்து தினமும் ஜமாத்கள் வெளிக்கிழம்பிக் கொண்டு தானே இருக்கின்றன. ஆனால் இலங்கையில் முஸ்லிம்களுக்குப் பிரச்சினைகள் குறைந்தபாடில்லையே. ஜமாஅத்கள் வெளிக் கிழம்பியிருந்த காலப்பகுதியிலேயே காத்தான்குடியில் பல பிரச்சினைகள் இடம்பெற்றுள்ளதே... இன்னும் பல இடங்களில் இவ்வாறு இடம்பெற்றுள்ளதே...

2- ஜிஹாத் என்பது இஸ்லாத்தை நிலைநிறுத்துவதற்காக இஸ்லாத்தின் விரோதிகளுடன் ஆயதமேந்திச் செய்யப்படும் புனிதப் போராகும். இதன் சிறப்பு தனியானது. உயர்வானது. இதிலே கலந்து கொள்பவர்களுக்கு அளப்பரிய நன்மைகள் கிடைப்பதாகவும், அவர் முஃமினாக மரணிப்பார் என்ற நற்சோபனமும், இதிலே கலந்து கொண்டு தனது இன்னுயிரை நீற்பவர் 'ஷஹீத்' தியாகி பட்டம் சூட்டப்பட்டு கௌரவிக்கப்படுவதாகவும், இவரது பாவங்கள் இவரின் முதல்த்துளி இரத்தம் தரையில் சிந்தப்பட முன்பே மன்னிக்கப்பட்டு விடுவதாகவும் அல்குர்ஆனும் அல்ஹதீஸூம் சொல்லிக் கொண்டிருக்கின்றன.

இது தவிர இஸ்லாத்தின் உயர்வுக்காக இஸ்லாத்தின் பக்கம் முஸ்லிமல்லாத மக்களை அழைப்பதற்கான முயற்சியை தஃவா முயற்சி எனப்படும். இதற்கும் பல சிறப்புக்கள் இஸ்லாத்தில் சொல்லப்பட்டிருந்தாலும் இது வேறு ஜிஹாத் வேறு. முஸ்லிம் மக்களுக்கே அவர்களுக்குத் தேவையான மார்க்க சம்பந்தப்பட்ட விடயங்களைக் கற்றுக் கொடுப்பது அதற்காக வெளிக்கிழம்புவது வேறு இதற்கு தஃலீம், தர்பியா - அறப்போதனை எனப்படும். இவையனைத்துமே நல்ல விடயங்களாயிருப்பினும் இவை வெவ்வேறானவை. இவற்றுக்குக் கொடுக்கப்படும் நன்மைகளும் வெவ்வேறானவை. ஆக நபியவர்களின் காலத்தில் வாளேந்தி ஜிஹாத் செய்வதற்காகவும் நபியவர்கள் பல ஜமாஅத்துக்களை அனுப்பி வைத்தார்கள். முஸ்லிமல்லாதவர்களை இஸ்லாத்தின் பக்கம் அழைப்பதற்காகவும் பல ஜமாஅத்களை அனுப்பியுள்ளார்கள். முஸ்லிம்களுக்கு மார்க்க விடயங்களைக் கற்றுக் கொடுப்பதற்கும் ஜமாஅத்துக்களை அனுப்பியிருக்கின்றார்கள். ஒவ்வொரு பிரிவினருக்கும் வெவ்வேறு வகை நன்மை கிடைப்பதாகவும் வாக்களித்துள்ளார்கள்.

ஆனால் இன்றைய தப்லீக் பெரியார்கள் இவ்விடயத்தில் மாபெரும் மோசடியையும் பித்அத் ஒன்றையும் செய்து கொண்டிருக்கின்றார்கள். ஜிஹாத் சம்பந்தமாக, அதில் செல்வதன் சிறப்பு

அதில் ஈடுபடுபவருக்குக் கிடைக்கும் நன்மைகள் சம்பந்தமாக வந்துள்ள நூற்றுக்கணக்கான குர்ஆன் வசனங்களையும் நபிமொழிகளையும் மாற்றித் திரிபுபடுத்தி அவற்றையெல்லாம் இவர்கள் புரியும் தப்லீக் முயற்சி சம்பந்தமான, அதற்கு ஆதாரமாக வந்துள்ள வசனங்களாக அனைத்து இடங்களிலும் பிரச்சாரம் புரிந்து வருகின்றனர். இது இவர்கள் அல்குர்ஆன் வசனங்களுக்கு பொருள் சொல்லும் விடயத்தில் புரியும் மகா பெரிய பித்அத்துகளில் ஒன்றாகும். அதே போன்று இவர்களது ஜமாஅத்தில் வெளிக்கிளம்பாதவர்களை ஜிஹாதுக்குச் செல்லாதிருந்தவர்களைக் கண்டித்து இறங்கிய வசனங்களை ஆதாரமாகக் காட்டி சாடுகின்றனர். தூற்றுகின்றனர். அச்சுறுத்துகின்றனர். இது எவ்வளவு பெரிய குற்றம் என்று தெரியுமா?? இப்படியான இறை வசனங்களில் மோசடி செய்த யஹூதிகளைக் கண்டித்து அல்லாஹ்...

'அவர்கள் (இறை வசனங்களை) அதன் இடத்தை விட்டும் திரிபு படுத்துகின்றனர். இவர்களது இதயங்களைத் தூய்மையாக்க அல்லாஹ் விரும்பவில்லை. இவர்களுக்கு உலகத்திலேயே பெருங்கேவலமும், மறுமையில் அல்லாஹ்வின் கடுமையான வேதனையும் உண்டு' என்று கூறுகின்றான். (அல் மாயிதா 41 ம் வசனம்)

நபியவர்களும் 'யார் அல்குர்ஆனுக்கு தமது மனோ இச்சைப்படி - தனது அபிப்பிராயத்தின் படி வியாகியானம் வழங்குகின்றாரோ அவர் தனது தங்குமிடத்தை நரகமாக ஆக்கிக் கொள்ளட்டும் என்றும் ஒருவர் தனது சொந்த அபிப்பிராயத்தின் படி குர்ஆனுக்கு விளக்கமளிக்க முற்பட்டால் அவர் சரியாகச் சொன்னாலும் தவறிழைத்தவராகவே கருதப்படுவார் எனவும் கூறியுள்ளார்கள். (ஆதாரம் திர்மிதி 3676)

ஆனால் இவர்களோ இவ்வாறு ஜிஹாத் சம்பத்தப்பட்ட வசனங்களையும் நபிமொழிகளையும் தமது இயக்கத்துக்கு ஆள்ச் சேர்க்கப் பயன்படுத்தியதன் விளைவு இன்று ஜிஹாத் என்றாலே குலை நடுங்குமளவுக்குக் கோழைத்தனமும், ஜிஹாதைப் பற்றிய தவறான கண்ணோட்டம் முஸ்லிம் சமூகத்தின் மத்தியிலேயே உருவாகியுள்ளது. ஏதோ நபியவர்களே தப்லீக் ஜமாஅத்தின் அமீராக இருந்து ஜமாஅத்துக்களை அனுப்பி வைத்தது போன்று 'நபியவர்கள் ஜமாத் ஒன்றை அனுப்பினாங்கோ' என்று தமது பயான்களில் அல்லாஹ்வுக்குக் கொஞ்சமும் பயப்படாமல் சொல்லிக் கொண்டிருக்கின்றார்கள். அல்லாஹ்தான் நேர்வழிகாட்ட வேண்டும்.

3- தீன் என்பதன் பொருள் ஆளமானது, விரிவானது. ஒரு மனிதன் இஸ்லாத்தின் வழிகாட்டல்ப்படி செய்யும் மார்க்க உலக சம்பந்தப்பட்ட காரியங்கள் அனைத்துமே தீன் என்ற சொல்லுக்குள் அடங்கும். நபியவர்கள் ஒருவன் தனது மனைவிக்கு ஒரு கவளம் உணவு ஊட்டி விடுவதைக்கூட ஏன்.. தன் அவன் மனைவியுடன் இல்லறத்தில் ஈடுபடுவதைக் கூட தீனுடைய விடயம், நன்மையை ஈட்டித்தரும் விடயம் என்று கூறியுள்ளார்கள். (புகாரீ)

ஆனால் இன்றைய தப்லீக் பெரியார்கள் தீன் என்ற சொல்லைச் சுருக்கி குறுகிய வட்டத்துக்குள்ளாக்கி தப்லீக் ஜமாஅத்தில் செல்வதும் அதன் பெரியார்கள் அங்கீகரித்தவற்றில் ஈடுபடுவதும், தஃலீம் புத்தகங்களை பக்தியுடன் வாசிப்பது மாத்திரமே தீன் என்று பாமர கார்க்கூன்கள் புரியுமளவுக்கு ஆக்கிவிட்டார்களா இல்லையா? இதற்குப் பெயர் பித்அத்தா இல்லையா? நீங்களே சொல்லுங்கள்.

இன்று தப்லீக் கார்க்கூன்கள் தமக்குள் ஒருவரைப் பற்றிப் பேசிக் கொள்ளும்போது அவர் எவ்வளவுதான் நல்லவராக ஆலிமாகக் கூட இருப்பினும் தப்லீக்குடன் தொடர்பில்லாதவராயின்' அவர் தீனை விட்டும் தூரமானவர்' என்று சொல்கின்றார்களா இல்லையா? நீங்களே தீர்ப்பளியுங்கள்.

3- இந்த தப்லீக் பெரியார்கள் இவர்களது ஜமாஅத் மாத்திரம் தான் தீன் வழி நடக்கும் ஜமாஅத். இதில் பங்கெடுக்காதவர்கள் தீனை விட்டும் தூரமானவர்கள். இதில்

வாசிக்கப்படும் - இவர்களது உலமாக்களால்ப் போதிக்கப்படும் விடயங்கள் மாத்திமே தீனுடைய விடயங்கள். ஏனைய அனைத்துமே தீனுக்கு அப்பாற்பட்டவை என்று இவர்களுக்குக் கற்றுக்கொடுத்துள்ளதால் தப்லீக் கார்க்கூன்கள் இப்படிப் பேசித்திரிவதை தெளிவாக அவதானிக்கக் கூடியதாக இருக்கின்றது. இதுவும் இஸ்லாத்துக்குத் தவறானதொரு வடிவம் கொடுக்கும் மகா பெரிய பித்அத்துக்களில் ஒன்றாகும். இந்த ஹக்கான தீனுடைய வேலையில் நாம் இஸ்த்திகாமத்தாக இருக்க வேண்டும். இதில் குறை காண்பவர் இதை விட்டும் வெளியேற்றப்படுவார்' போன்ற வார்த்தைப்பிரயோகங்கள் இவர்களிடம் சர்வசாதாரணமாக உபயோகிக்கப்படுகின்றன. இவை மிக அபாயகரமான வார்த்தைகள். தப்லீக்கில் இல்லாத அனைவரும் வழிகேட்டில் இருக்கின்றார்கள் என்று மறைமுகமாக உணர்த்தும் வார்த்தைகள்.

என்னை ஒரு தடவை தப்லீக்கில் பயான் செய்வதற்காக அழைத்திருந்தார்கள். எனக்கும் தப்லீக்கும் இருந்த தொடர்பு குறைய ஆரம்பித்திருந்த காலம் அது. நான் நல்லபடியாகவே பயான் செய்து விட்டு தஷ்க்கீல் பண்ணும் போது (வக்தில் வெளிக் கிளம்பி ஆள்த்திரட்டல்) பயானில் இருந்தவர்களைப் பார்த்து 'சகோதரர்களே! இன்று ஒவ்வொருவரும் தீனைப்பற்றி அறிந்திருக்க வேண்டியிருக்கின்றது. இன்று தீனைத் தெரிந்து கொள்ள பல வழிகள் உள்ளன. அதிலொன்றுதான் இந்த தப்லீக் ஜமாஅத் அமைப்பாகும் எனவே தயங்காது பெயர்களைத் தாருங்கள் என்றேன்' அவ்வளவுதான். பயானின் பின்னர் அவர்கள் என்னோடு நடந்து கொண்ட விதமே வேறு. அதுதான் நான் தப்லீக்கில் செய்த இறுதி பயானாகும். அதன் பின்பு எந்த பயானுக்கும் என்னை அழைப்பது கிடையாது. அவர்களது குற்றச்சாட்டு என்ன தெரியுமா? நான் 'இன்று இஸ்லாத்தை - தீனை அறிந்து கொள்வதற்குரிய ஒரே வழி தப்லீக்கில் வெளிக் கிளம்பிச் செல்வது மாத்திரம்தான்' என்று சொல்லியிருந்தால் என்னை பாராட்டியிருப்பார்கள். பிரியாணி சாப்பாடும் தந்து உபசரித்திருப்பார்கள். ஆனால்??.. இதன்பின் நான் தப்லீக்கில் இருந்து ஓரங்கட்டட்பட்டு விட்டேன். எப்போதாவது இவர்களின் ஜூமைராத் பயானில் இருந்து விட்டால் ஒற்றர்களைப் பார்ப்பது போல் மிகவும் எச்சரிக்கையுடன் எனது நடவடிக்கைகளை அவதானிப்பார்கள்.

இன்று இந்த அமைப்புக்கு ஆதரவு வழங்குவது போல் செயற்படும் அதிக மௌலவிமார் தாம் இந்த அமைப்பினருக்கு ஆதரவாக இருக்காவிட்டால் ஒதுக்கப்பட்டு ஓரங்கட்டப்பட்டு விடுவோம். ஆதரவளித்தால் கண்ணியத்துடன் நடத்துவார்கள் என்ற குறுகிய நோக்கத்துடனேயே செயற்படுகின்றார்கள். அவர்களிடம் நீங்கள் மனந்திறந்து பேசும்போது இது உண்மையென்பதை அறிந்து கொள்வீர்கள். இதை நான் பலமுறை பல உலமாக்களிடம் பரீட்சித்தறிந்திருக்கின்றேன்.

4- பைதல் (கால்நடையாக) ஜமாஅத்தில் செல்லுதல்.

கால்நடையாக ஜமாஅத்தில் செல்வதை மிகப்பெரியதொரு மார்க்கப்போர் செய்வது போன்று இவர்களுக்குச் சித்தரிக்கப்படுகின்றது. யாருடைய இருபாதங்களும் இறைபாதையில் புழுதி படிந்தனவாகின்றதோ அவற்றை அல்லாஹ் நரகத்துக்கு ஹராமாக்கி விடுகின்றான் எனும் ஹதீஸை இதற்கு ஆதாரமாகக் கொள்கின்றனர். இந்த ஹதீஸ் ஆதாரப் பூர்வமானதுதான். (புகாரி, திர்மிதி, தாரமி, அஹ்மத்,மஜ்மஉஸ்ஸவாயித்)

ஆனால் இவர்களது செயலுக்கு அது ஆதாரமாகாது. ஏனெனில் அல்லாஹ்வின் பாதை என்பது ஜிஹாதையே குறிக்கும். அறிவைத்தேடும் பயணத்துக்கும் சிலவேளை அல்லாஹ்வின் பாதை எனும்பெயர் உபயோகப்படுத்தப்பட்டாலும் இந்த ஹதீஸைப் பொறுத்தவரைக்கும் அது பொருந்தாது. காரணம் இந்த ஹதீஸின் தொடரிலேயே எவர் அல்லாஹ்வின் பாதையில் காயமுற்று அதன் மூலம் இறக்கின்றாரோ அவரது இரத்தம் மறுமையில் கஸ்த்தூரி வாடையை விடவும் மணம் வீசும் எனவும் உள்ளது. எனவே இந்த ஹதீஸில் அல்லாஹ்வின் பாதையென்பது ஜிஹாதையே குறிக்கும் என்பது தெளிவாகின்றது. ஒரு பேச்சுக்கு அப்படி வைத்துக் கொண்டாலும் கூட எதேர்ச்சையாக அவரது கால்

மண்ணில் மிதிபட்டு புழுதி படிவதே இங்கு நோக்கமேயன்றி வேண்டுமென்று புழுதியில் போட்டு காலைப் புரட்டியெடுப்பது நோக்கமன்று. ஆனால் தப்லீக்கின் கால்நடை ஜமாஅத்தின் நோக்கம் இதுவாகவே உள்ளது. எல்லா வாகன வசதியிருந்தும் பிரயாணத்துக்குரிய செலவினங்களிருந்தும் இவ்வாறு நடந்து செல்வது பிறருக்கு தாம் செய்யும் தியாகத்தை வெளிக்காட்டி ஒருவித செயற்கை பக்தியை உருவாக்குவதே இவர்களது உள்நோக்கம்.

ரோமாபுரிப் போரின் போது மாலிக் எனும் ஒரு நபித்தோழர் வாகனமிருந்தும் தரையில் நடந்து சென்றதாகவும் மற்ற முஸ்லிம்கள் அவரிடம் இதுபற்றிக் கேட்டபோது மேற்படி ஹதீஸைக் கூறியதாகவும் அதன் பின்பு அங்கிருந்தவர்களில் அதிகம் பேர் வாகனத்தை விட்டு இறங்கி காலில் புழுதி படிய வேண்டுமென்பதற்காக கால்நடையாக வந்ததாகவும் ஒரு சம்பவம் உள்ளது. இது நபியவர்களது காலத்திற்குப் பிறகு நடந்தது. இதற்கு நபியவர்களின் அங்கீகாரம் இல்லாததால் இது ஹதீஸ் இல்லை. ஒரு சில நபித்தோழர்களின் தனிப்பட்ட செயலே இது. எனவே இதை ஆதாரத்துக்கு எடுக்க முடியாது. மேலும் இது வேறு சில நபிமொழிகளுக்கும் முரண்படுகின்றது. எப்படி?

நபியவர்கள் ஒருமுறை பள்ளிக்கு வந்தபோது ஒரு மனிதர் மிகுந்த நேரமாக வெயிலில் நின்று கொண்டிருப்பதைக் கண்டு அது பற்றி ஒருவரிடம் வினவ அவர் 'பகல் முழுதும் வேகும் வெயிலில் நின்ற நிலையிலேயே உட்காராமல் நோன்பு நோற்பதற்கு நேர்ச்சை வைத்திருப்பதாகக் கூறினார். அதற்கு நபியவர்கள் அவரது நோன்பை நிறைவேற்றச் சொல்லுங்கள். வெயிலில் நிற்கவோ, உட்காராமல் நின்று கொண்டிருக்கவோ வேண்டாம். நீங்கள் படும் இந்த வீண்சிரமத்தை விட்டும் அல்லாஹ் தேவையற்றவன் என்றார்கள். (ஆதாரம் முஸ்லிம் 3100)

மற்றுமொரு நபித்தோழர் தான் கால்நடையாக நடந்துசென்று ஹஜ்ஜுச் செய்ய நேர்ச்சை வைத்திருப்பதாகக் கூறியபோது நிச்சயமாக இவ்வாறு ஒருவர் தன் உடம்பை வருத்திக் கொள்வதில் எவ்விதத் தேவையுமில்லை அவர் வாகனத்தில் ஏறிச் சென்றே ஹஜ் செய்யட்டும் என்று கட்டளையிட்டார்கள். (புகாரி 1732 முஸ்லிம் 3100)

எனவே நபியவர்கள் தடுத்த ஒரு விடயத்தை இன்று தப்லீக் அமைப்பினர் தீன் என்ற போர்வையில் செய்து மக்களின் அனுதாபத்தைத் தம் பக்கம் திருப்ப முயற்சித்துக் கொண்டிருக்கின்றார்கள். எனவே நபியவர்கள் இபாதத் இல்லை என்று சொன்ன ஒரு செயலை (பைதல் ஜமாஅத்தை) இபாதத்தின் பெயரால் செய்வதற்குப் பெயர் என்ன? பித்அத்தா? ஸுன்னத்தா? நீங்களே முடிவு செய்யுங்கள்.

5- இவர்களின் தஃவா கஸ்துகளின் போது கூட்டு துஆ ஓதி விட்டு வெளியேறிச் செல்லல். இதுவும் நபியவர்கள் காட்டித்தராத பித்அத்தாகும். நபியவர்கள் எத்தனையே ஸஹாபாக்களை மார்க்கத்தைக் கற்றுக் கொடுப்பதற்காகவும், போருக்காகவும் அனுப்பியிருக்கின்றார்களே! அவ்வேளை கூட்டுப்பிரார்த்தனை புரிந்து விட்டுத்தான் வழியனுப்பினார்களா? இதற்கான சரியான ஆதாரத்தை நபிவழியிலிருந்து காட்ட முடியுமா? எனவே இந்தக் கூட்டுப் பிரார்த்தனை நபிவழியா? அல்லது அவர்கள் எச்சரித்த பித்அத்தா?

6- காலை மாலை திக்ர் எனும் பெயரில் ஹதீஸில் வந்த திக்ரு முறைக்கு மாற்றமாகவும், இவர்களின் பெரியார்கள் சொல்லிக் கொடுத்த பித்அத்தான முறையிலும் திக்ர் செய்தல்.

காலையிலும் மாலையிலும் அதிகமதிகம் திக்ர் செய்யுங்கள் என அல்குர்ஆனில் அல்லாஹ்வே சொல்லுகின்றானே! எனக் கூறினால்... உண்மைதான். தொழுமாறும் அல்லாஹ் கூறுகின்றான். அதற்காக 6 வேளை தொழ முடியுமா? ளுஹ்ரை 5 ரக்அத்துகளாகத் தொழ முடியுமா? ஏன் முடியாது நபியவர்கள் அப்படிச் செய்யவில்லை என்கின்றோம். அப்படியானால் திக்ரை மட்டும் எப்படி காலை மாலையில் நபிவழிக்கு மாற்றமாக நூறு,

நூறு தடவைகள் செய்ய முடியும்?. லாயிலாஹ இல்லல்லாஹ் என்பதை மாத்திரமே 100 தடவைகள் காலை மாலையில் ஓதி வருவதற்கு ஆதாரமிருக்கின்றது. ஏனையவற்றுக்கு??

7- ஜுமுஆவைராத் எனும் பெயரில் வெள்ளிக்கிழமை இரவில் ஒன்று கூடி அன்றிரவு பள்ளியில் இஃதிகாப் இருந்து வணக்கங்கள் புரிதல் வெள்ளிக்கிழமை இரவை மாத்திரம் வணக்கங்கள் புரிவதன் மூலம் விசேஷப்படுத்தக் கூடாதென நபியவர்கள் தடை செய்துள்ளதால் இது பித்அத்தாகின்றது. எதேச்சையாகத்தான் மக்களின் வசதிக்கேற்ப இந்த நாள் தெரிவு செய்யப்பட்தென்று சொல்ல முடியாது. ஏனெனில் வெள்ளியிரவில் இபாதத் செய்தல் ஆரம்பத்திலிருந்தே சூபிகளின் மரபு வழிவந்த வழிமுறைகளில் உள்ளதாகும்.

எனவே நான் மேலே சுட்டிக்காட்டியபடி தப்லீக் ஜமாஅத்தில் இல்மு - மார்க்க அறிவு எனும் பெயரில் பலவீனமான, இட்டுக் கட்டப்பட்ட செய்திகள் போதிக்கும் பாடங்களும், இஸ்லாத்திலில்லாத பித்அத்தான மௌட்டீக விடயங்களும், ஏன் ஷிர்க்கான விடயங்களும் தாராளமாகப் போதிக்கப்படுகின்றன என்பதை முடிந்தளவு ஆதாரங்களுடன் நிரூபித்துக் காட்டியுள்ளேன். இது தவிர இல்மு திக்ரின் போர்வையில் பல்வேறு ஷிர்க்கான விடயங்களும் இந்த அமைப்பில் போதிக்கப்படுகின்றன. விரிவஞ்சி அவற்றைத் தவிர்த்துக் கொள்கின்றேன்.

<u>இவைகளும் இல்மு திக்ர் தானா???</u>

ஜிஸ்திய்யாத் தரீக்காவின் ஷைகுமார் வரலாறு என்று ஒரு புத்தகமுண்டு. ஜக்கரிய்யா மௌலானா அவர்களே தமது கைப்பட எழுதியது. இதில் ஷைக்மார்களின் கராமத் எனும் பெயரில் சில சம்பவங்களைக் கூறுகின்றார்கள். இவை நடந்ததற்கு எவ்வித ஆதாரமும் இல்லாதது தனி விடயம். இருப்பினும் இது எப்படி இஸ்லாத்துக்கு முரண்படுகின்றது என்பதைக் கூட கவனிக்காது ஷைகுல் ஹதீஸ் - ஹதீஸ்க்கலை மேதையான இவர்கள் எழுதியுள்ளதே ஆச்சரியமான விடயமாகும். அவற்றில் சிலவற்றை இங்கு சுட்டிக்காட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

1- ஹஸன் பஸரி என்பவர்கள் பிலபலமான தாபியீன்களில் ஒருவராவார்கள். இவர்களுக்கும் தரீக்காக்களுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. இருந்தும் ஜக்கரிய்யா மௌலானா அவர்கள் இவர்களை ஜிஸ்தியா தரீக்காவின் ஐந்தாவது ஷைக்காக குறிப்பிட்டிருக்கின்றார்கள். நபியவர்களையே ஜிஸ்திய்யாவின் முதலாவது ஷைக் என்றவருக்கு இது பெரிய விடயமா? அவர்களது பொன்மொழிகள் என கூறுவதாவது...

நீங்கள் ஹறாமான பொருட்களின் மீது கூட வெறுப்புக் காட்டுவதில்லை. ஆனால் ஹலாலான பொருட்களின் மீதே வெறுப்புக் காட்டும் பெரியார்களை நாம் சந்தித்திருக்கின்றோம். (ஜிஸ்தியா ஷைகுகள் வரலாறு 153)

ஹலாலானவற்றை உண்ணாமல் தவிர்ந்திருப்பது வேறு விடயம் ஹலாலானவற்றை வெறுப்பவர் எப்படிப் பெரியாராக இருக்க முடியும்.? இதை ஹஸன் பஸரி சொல்லியிருப்பாரா?

ஹஸன் பஸரியவர்கள் பல தடவைகள் நாயைக் கண்டால் யா அல்லாஹ் இந்த நாயின் பொருட்டால் என்னை ஏற்றுக் கொள்வாயாக என்று பிரார்த்திப்பார்கள். (ஜிஸ்தியா ஷைகுகள் வரலாறு 150)

நாய் என்ன அல்லாஹ்வுக்கு நெருக்கமா நல்லடியாரா? இது அல்லாஹ்வையே அவமானப்படுத்துவது போலில்லையா? இந்த வகை வஸீலாவே தடைசெய்யப்பட்டதாகும். அப்படியிருக்க கேவலம் நாயின் பொருட்டால் கேட்பது?? ஹஸன் பஸரி ஒரு ஹதீஸ்கலை மேதை இதை அவர்கள் சொல்லியிருப்பார்களா? நிரூபித்துக்காட்ட முடியுமா?

காஜா அப்துல் வாஹித் :

இவர்கள் பற்றிக்கூறும் போது இவர்கள் இரவெல்லாம் நின்று வணங்குபவராகவும், பகலில் நோன்பு நோற்பவராகவும் மூன்று நாட்களுக்கு ஒருமுறையே நோன்பு திறப்பவராகவும் இருந்தார். (அதே நூல் 154)

இவையெல்லாம் நபிகள் தடைசெய்த விடயங்களல்லவா? இவற்றை ஒரு ஆலிம் இறைநேசச் செல்வர் எப்படிச் செய்ய முடியும். சரி அவரை விடுவோம். இதை இபாதத் என சித்தரித்து எழுதும் ஆசிரியர் ஜக்கரிய்யா மௌலானா பெரிய ஷைகுல் ஹதீஸ் ஹதீஸ்க்கலை மேதையாச்சே.. அவரா இப்படி?

3- புளைல் இப்னு இயாழ் அவர்களைப் பற்றிக் கூறும் போது..

'இவர்கள் ஒளூச் செய்கையில் ஒருமுறை ஒவ்வொரு உறுப்புக்களையும் மூன்று தடவை கழுவுவதற்குப் பதிலாக இரண்டு தடவைகள் கழுவி விட்டார்கள். அன்றிரவு நபியவர்கள் இவரைச் சந்தித்து (நினைவிலேயே!!) புளைலே! என்னுடைய ஸுன்னத்தை விட்டதற்காக நீர் தூரமாகி விட்டீர் என்றார்கள். இந்தக் குறையை நிவர்த்தி செய்வதற்காக அவர்கள் ஒருவருடம் தினமும் ஐநூறு ரக்அத்துக்கள் நபில் தொழுவதைத் தன் மீது கடமையாக்கிக் கொண்டார்கள்.

மேலும் என்னை யார் சந்திக்காமலும் நான் நோய்வாய்ப்பட்டால் நலன் விசாரிக்க வராமலும் இருக்கின்றாரோ அவருக்கு நான் நன்றி கூறுவேன் என்றார்களாம். (அதே நூல் ப: 168-169)

உழூவின் போது உறுப்புக்களை இரண்டு தடவைகள் கழுவுவதும் நபிவழியே! நபியவர்கள் அவ்வாறு செய்துள்ளார்கள். ஆதாரம்: (புகாரி 154) இப்படியிருக்க நபியவர்கள் எங்ஙனம் எமது ஸுன்னத்தைப் புறக்கணித்து விட்டாய் எனக் கூற முடியும். நோயுற்றவரைச் சந்திக்கச் செல்வது நபிவழி. அதை இவர் எப்படி உதாசீனம் செய்ய முடியும்??. அதற்கு மேல் ஷைகுல் ஹதீஸுக்கு எப்படி இவையெல்லாம் கிடைத்திருக்க முடியும். எப்படி கிடைத்ததையெல்லாம் இஸ்லாத்துக்கு முரணாகின்றதா என ஆராந்து பார்க்காமல் எப்படி எழுத முடியும்?? .

4- இப்றாஹீம் இப்னு அத்ஹமைப் பற்றிக் கூறும்போது..

இவர்கள் தொடர்ந்து நோன்பு நோற்று நான்கு அல்லது ஐந்து நாட்களுக்கு ஒரு முறை நோன்பு திறப்பார்களாம். அதுவும் புற்பூண்டுகளைக் கொண்டுதான் நோன்பு திறப்பார்களாம். (அதே நூல் ப: 174)

இவ்வாறு செய்வது நபிவழியா? இதைத் தான் நபியவர்கள் போதித்தார்களா?. உண்மையில் அத்ஹம் இப்படிச் செய்திருந்தாலும் கூட அது அவரது அறியாமையே! ஆனால் ஷைகுல் ஹதீஸ் இதை எப்படி எழுத முடியும்?. இதை அவ்லியாக்களின் அற்புத வரலாறாகக் கூற முடியுமா?. இதைப் பின்பற்றிப் பிறரும் இப்படிச் செய்தால் அவர்கள் அல்லாஹ்வின் அருளைப் பெற முடியுமா?.

நபியவர்கள் நோன்பு திறக்கும்போது கனிந்த பேரீச்சை கொண்டும் அது இல்லையெனில் காய்ந்த பழத்தாலும் அதுவும் இல்லையெனில் தண்ணீரைக் கொண்டுமே நோன்பு திறப்பார்கள். (திர்மிதி : 657)

இதை விடுத்து புற்பூண்டுகளால் நோன்பு திறப்பது நபி வழியா? ஷைத்தானின் வழியா?
இவர்கள் தோட்ட வேலை செய்து கொண்டிருந்தபோது ஒருவன் வந்து இவரிடம் பழம் கேட்க இவர் மறுக்கவே அவன் தலையில் அடித்து விட்டான். உடனே இவர் அல்லாஹ்வுக்கு

மாறு செய்யும் இத்தலை அடி வாங்குவதற்குரியதே எனக்கூறினார்கள். (அதே நூல் பு 178)

ஹாஜா ஹூதைபதுல் மர்அஷி...

இவர்கள் ஞானத் தேர்ச்சி பெற்றவர்களாயிருந்தார்கள். ஆறு நாள்களுக்கு ஒரு தடவையே நோன்பு திறப்பார்கள். இது பற்றிக் கேட்டால் ஆன்மீக மக்களின் உணவு லாயிலாஹ இல்லல்லாஹ் ஆகும்' என்று கூறுவார்கள். அப்படியாயின் ஆறு நாட்களுக்கொரு முறை எதற்காக ஆன்மீக மக்களின் உணவைப் புறக்கணித்து விட்டு உலக மக்களின் உணவை உண்டு நோன்பை முறிக்க வேண்டும்?

நன்மைகள் அனைத்திலும் சிறந்தது மனிதன் தனது வீட்டிலேயே இருப்பதாகும். பர்ழுத் தொழுகைக்காக பள்ளிக்குப் போக வேண்யதில்லையென்றால் நான் வீட்டிலேயே இருப்பேன் என்றார்கள் எப்போதும் வீட்டிலேயே முடங்கியிருப்பது நபியவர்கள் காட்டித்தந்த வழியா? துறவிகளின் வழியா? வீட்டிலேயே இருந்தால் எப்படி மக்களை இஸ்லாத்தின் பக்கம் அழைப்பது.??

காஜா மம்ஷாத் அலவி அவர்கள் குழந்தைப் பருவத்திலும் பகலில் ஒருபோதும் பால்க் குடிப்பதில்லை. ஆகவே இவர்கள் குழந்தையிலேயே அவ்லியாவாக இருந்தார்கள் என்று கூறுவர். இந்த அறியாமையை என்னவென்று விபரிப்பது.

இவர்கள் இறக்கும் போது அருகிலிருந்த ஒருவர் இவருக்கு சுவனத்தைக் கொடுக்குமாறு இறைவனிடம் பிரார்த்தித்தார். இதனைக் கேட்ட இவர் முப்பது வருடமாக சுவர்க்கம் தன்னைப் பூரணமாக அலங்கரித்துக் கொண்டு என் முன் வந்து கொண்டிருந்தது. நான் ஒரு முறை கூட அதனை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. நான் சுவர்க்கத்தின் எஜமானனை ஆசிக்கின்றேன் என்றார்கள். (அதே நூல் ப: 192)

அடப்பாவமே! நபியவர்கள் சொர்க்கத்தைக் கேட்டுப் பிரார்த்திக்குமாறு கூற இவர்களோ ....

காஜா ஸையித் அபூ யூஸூப் ..

'இவர்களது சன்னிதானத்தில் ஒரு மனிதன் மூன்று நாட்கள் தங்கியிருந்தால் அவன் கராமத் உடையவனாகி விடுவானாம். இவர் ஒரு முறை தர்வேஸ் ஒருவரின் வீட்டில் விருந்தினராகத் தங்கினார். அன்றிரவு அவரின் மகள் பௌர்ணமி நிலவு வானத்திலிருந்து தன் மடியில் இறங்குவது போல் கனவு கண்டார். காலையில் அவர் ஹஜ்ரத்திடம் விளக்கம் கேட்கச் சென்றபோது அவர் கனவைச் சொல்வதற்கு முன்பே ஹஜ்ரத்தவர்கள் அப்பெண் கண்ட கனவையும் அதற்காக விளக்கத்தையும் கூறினார். அதன் பின் தர்வேஸ் தன்மகளை அவருக்கே மணமுடித்து வைத்தார். ஒரு முறை இவர்களுக்கு வணக்கத்தில் கொஞ்சம் சோம்பல் ஏற்படவே அதற்காக இருபது ஆண்டுகள் வரை தண்ணீரே குடிக்காமல் இருந்தார்கள். வீட்டில் ஒரு தனியறை அமைத்து அதில் தனித்திருந்து பன்னிரண்டு வருடம் வணக்கம் புரிந்தார்கள். (அதே நூல் பக்கம் : 201)

இது உண்மையாக இருக்குமா? நீங்கள் தான் சொல்ல வேண்டும்.

காஜா மவ்தூத் ஜிஷ்தி...

இவர்களுக்கு பூமியை நொடிப்பொழுதில் கடக்கும் சக்தி இருந்தது. கஃபாவை தவாப் செய்ய மனம் நாடினால் காற்றின் மூலமாக மக்கா சென்று விடுவார்கள். ஒரு நாள் ஒரு அரசகுமாரன் இவர்களிடத்தில் வந்து பரக்கத்துக்காக தனக்கு ஏதேனும் கொடுக்குமாறு வேண்டினான். ஷைக் முதலில் மறுத்து விட்டு பின் சிபாரிஷின் பேரில் ஒரு தொப்பியை அவனுக்குக் கொடுத்து இதைப் பாதுகாக்காவிட்டால் வருந்த வேண்டியேற்படும் எனக் கூறினார்கள்.

அவன் அது விடயத்தில் கவனயீனமாக இருப்பது தெரிய வந்ததும் தொப்பி தன் வேலையைச் செய்யவில்லையா? என்றார்கள். இதனால் அவன் ஒரு குற்றத்தின் பேரில் கைது செய்யப்பட்டு அவனது இரு கண்களும் தோண்டப்பட்டன. (அதே நூல் ப: 204)

<u>காஜா உஸ்மான் ஹாரூனி...</u>

இவர்கள் ஒரு நதியைக் கடக்க வேண்டியிருந்தது. உடனே தன்னிடமிருந்தவர்களிடம் கண்களை மூடிக் கொள்ளுங்கள் என்றார்கள். அதன் பின் கண்திறந்து பார்த்தபோது அனைவரும் நதியைக் கடந்திருந்தார்கள். எப்படிக் கடந்தார்கள் என்றே தெரியவில்லை. ஒரு முறை ஒருமனிதர் வந்து தனது மகனைக் காணவில்லையென்றும் கண்டுபிடித்துத் தருமாறும் சொன்னார். அதற்கு அவர்கள் உன் மகன் உன் வீட்டிலிருக்கின்றான் என்றார்கள். அவர் ஆச்சரியத்துடன் சென்று பார்த்தபோது அங்கே மகன் இருக்கக் கண்டார்கள். அவனிடம் இது பற்றிக் கேட்க நான் ஒரு காட்டில் அடைக்கப்பட்டிருந்தேன். அப்போது இந்த ஷைக் வந்து என்னை அவிழ்த்து என்கால் மீது தன் காலை வைத்தார். உடனே கண்ணைத் திறந்து பார்த்தபோது நான் என் வீட்டிலிருந்தேன் என்றான். (அதே நூல் ப: 211)

காஜா முயீனுதீன் திஸ்தி சொல்கின்றார்கள். 'நான் ஒரு முரீதை அடக்கம் செய்வதில் கலந்து கொண்டேன். அடக்கம் செய்த பின் எல்லோரும் போய் விட்டார்கள். கப்ரடியில் சிறிது நேரம் அமர்ந்திருந்தேன். ஒரு குற்றத்துக்காக அதாபு செய்யும் மலக்கு அவரிடம் வந்தார். அப்போது ஷைக் உத்மான் காரூனி வந்து இவர் என்னைச் சார்ந்தவர் என்றதும் கப்றாளியின் வேதனை நிறுத்தப்பட்டது. (அதேநூல் 212 ம் பக்கம்.)

இப்படி இந்தப் புத்தகத்தை நீங்கள் கையிலெடுத்தால் எத்தனையோ ஷிர்க்கான விவகாரங்கள் உங்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தும். ஷைக்மார்களின் காலில் விழுந்து பக்தர்கள் கும்பிடுபோட்டதாகவும், இந்த முஸ்லிம் பெயர் தாங்கிய துறவிகள் தம்மை எதிர்த்தவர்களுக்கு சாபமிட்டு நரகத்துக்கு அனுப்பியதாகவும், தமது பக்தர்களை சுவர்க்கத்தில் நுழைவிக்கும் பொறுப்பை ஏற்றதாகவும் ஆயிரக்கணக்கான கப்ஸாக்கள் நிறைந்து காணப்படுகின்றன. இவற்றில் உள்ளவற்றை ஒருவன் உண்மைப் படுத்தினால் அவனின் ஈமான் பறிபோய்விடும் என்பது மட்டும் உண்மை. ஆனால் இவற்றை தான் சார்ந்திருக்கும் திஷ்த்திய்யாத் தரீக்காவின் அவ்லியாக்களுக்கு நடந்த கராமத்துக்கள் என ஷைகுல் ஹதீஸ் ஹதீஸ்க்கலை மேதையான ஜக்கரிய்யா மௌலானா அவர்கள் சொல்கின்றார்கள். அவைகளையும் இல்மு திக்ர் என ஏற்று நீங்களும் திஸ்திய்யாத் தரீக்காவில் இணைந்து அவர்களின் ஆசார பக்தராக ஆக வேண்டுமென விரும்புகின்றார்கள். நீங்கள் தயாரா?

அப்படி நீங்கள் தயாராகி விட்டால் அந்தத் தரீக்காவின் ஷைக்மார்களே உங்கள் பாவங்கள் அனைத்தையும் மன்னித்து நீங்கள் என்னதான் பாவியாக, குற்றவாளியாக இருந்தாலும் அவற்றைப் பொறுத்து உங்களை சொர்க்கத்துக்கு அழைத்துச் சென்று விடுவார்கள்?. சொர்க்கத்தின் திறப்பு- சாவி அவர்களின் கரங்களில்தானே இருக்கின்றது?. அதன் பின்பு கூட நீங்கள் வேண்டிய பாவங்களைத் தாராளமாகச் செய்து கொள்ளலாம்?. நீங்கள் அவர்களின் முரீதாக சீடனாக இருக்கும் காலமெல்லாம் இந்தப் பாவமெல்லாம் உங்களின் சொர்க்கப் பிரவேசத்தை ஒருபோதும் தடுத்து விடாது?.

இப்போது உங்கள் முன்னிலையில் இரண்டு பாதைகள் உள்ளன. ஒன்று நபியவர்கள் காட்டித்தந்த பாதை. அடுத்தது ஜிஸ்த்திய்யாத் தரீக்காவின் ஷைக்மார்கள் காட்டித்தந்த பாதை. இரண்டில் எதைத் தெரிவு செய்வது எனும் உரிமை உங்கள் கையில் உள்ளது. முடிவெடுப்பதும் நீங்கள்தான் அதற்கான பலனைப் பெறுவதும் நீங்கள்தான். நபிவழி நடந்தால் நரகமில்லை. அதை நாடாதவர்களுக்குச் சொர்க்கமில்லை. சொர்க்கமில்லை.

நான்காம் நம்பர்.

இக்ராம் - முஸ்லிம்களைக் கண்ணியப்படுத்தல்.

இந்த உஸூல் இஸ்லாம் வலியுறுத்திய ஒரு விடயம் என்பதில் சந்தேகமுமில்லை. ஒவ்வொரு முஸ்லிமும் மற்ற முஸ்லிமுக்குச் சகோதரன் என்பது நபிமொழி. ஒரு முஃமினுக்கும் மற்ற முஃமினுக்குமுரிய உதாரணம் ஒரு கட்டடத்தைப் போன்றது. அதன் ஒவ்வொரு பகுதியும் மற்றப் பகுதியைப் பலமாகப் பிடித்திருக்கின்றது என்றும், முஸ்லிம்கள் தங்களுக்கிடையில் கொண்டிருக்கும் நட்பு பாசம் என்பவற்றுக்கு உதாரணம் ஒரு உடம்பின் பல பகுதிகளைப் போன்றது. அவற்றில் ஒருபகுதி நோயால் பீடிக்கப்படும்போது ஏனைய உறுப்புக்கள் அனைத்துமே துன்பம் அனுபவிக்கின்றன என்பது போன்ற நிறைய நபிமொழிகளும் இது விடயமாக நிறையவே வந்துள்ளன.

தப்லீக் சகோதரர்களுக்கு அல்லாஹ் றஹ்மத்துச் செய்வானாக. மற்றவர்களை விட இவர்கள் இந்த விடயத்தில் முக்கிய கவனம் செலுத்துவதை அவதானிக்கக் கூடியதாக இருக்கின்றது. இருப்பினும் இவர்களது இக்ராம் ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் இருப்பதுதான் வருத்தமான விடயமாக இருக்கின்றது.

ஒரு முஸ்லிம் பள்ளிக்கு வர வேண்டும் தொழுகையாளியாக மாற வேண்டும் என்பதில் இவர்கள் தமது சொந்த வேலையைக் கூட விட்டு விட்டுச் செயற்படுவது பாரட்டத்தக்கதே. ஆனால் இவர்களது இந்த எண்ணத்தில் இப்போது தவறானதொரு கருத்துக் கண்ணோட்டம் உருவாகி விட்டது. அதாவது இவர்களது உதவியை, உபசரிப்பை, இக்ராமை ஒருவர் பெற வேண்டுமானால் அவர் தப்லீக் ஜமாஅத்தில் தம்மை ஈடுபடுத்திக் கொள்பவராக இருக்க வேண்டும், அல்லது அதற்கு ஆதரவாக இருக்க வேண்டும். குறைந்த பட்சம் எதிலும் சம்பந்தப்படாதவராக ஒரு அப்பாவி மகனாக இருக்க வேண்டும். இதற்கு மாற்றமாக அவர் தப்லீக்கில் செல்லாதவராக அதனை விமர்சிப்பவராக, அல்லது வேறு ஒரு அமைப்பில் இருப்பவராயின் அவர்களுக்கு தப்லீக் அமைப்பினர் இக்ராம் செய்வது ஒரு புறமிருக்க அவர்களை எதிரிகளை, காபிர்களைப் பார்ப்பது போல் ஒருவித விரோதக் கண்ணோட்டத்தில் பார்ப்பதை சாதாரணமாக நாம் அவதானிக்கக் கூடியதாக இருக்கின்றது. அது மாத்திரமல்ல தப்லீக் அமைப்பினரிடம் உள்ள இஸ்லாமிய முரண்பாடுகளை ஏனைய உலமாக்கள் சுட்டிக்காட்டிய சமயம் அதனை ஏற்றும் கொள்ளாது, அல்லது அவர்களிடம் அறிவு ரீதியாக தம் அமைப்பின் மேல் சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுக்கு மறுப்புமளிக்காது அவர்களை அச்சுறுத்தல், ஆள்வைத்துத் தாக்குதல் போன்ற ரவுடிச் செயல்களில் ஈடுபடுவதையும் மேலிடம் இதைக் கண்டும் காணாமல் இருப்பதையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

இவற்றையெல்லாம் இஸ்லாத்தின் எதிரிகளை வீழ்த்துவதற்காக மேற்கொள்ளப்படும் அறப்போர் என்ற கருத்தோட்டம் மேலிடங்களிலிருந்தே இவர்களுக்குப் போதிக்கபடுவது தான் வருந்தத்தக்க உண்மை. இவர்கள் இலங்கையில் மாத்திரம் மேற்கொண்ட தாக்குதல்கள், கத்திக்குத்துக்கள், வாள்வெட்டுக்கள், படுகொலை மிரட்டல்களைத் திரட்டினால் தனியாக ஒரு புத்தகமாகவே வெளியிடலாம்.

இதனாலேயே இதன் வளர்ச்சி ஏனைய நாடுகளை விட இலங்கையில் அதிக வீறு நடை போடுகின்றது. காரணம் இவர்களை விமர்சிக்கவே அறிஞர்கள் பயப்படுகின்றனர். தமக்கும் மிரட்டல் வருமோ, தாக்குதல் நடக்குமோ ஓதுக்கி விடுவார்களோ என்ற அச்சத்தால் அதிகம் பேர் பேசாமடந்தைகளாக வாய்மூடி மௌனிகளாக இருக்கின்றனர். இன்று உலக அளவில் இலங்கையை தப்லீக்கின் துரித வளர்ச்சிக்கு முன்னுதாரணமாகச் சொல்லப்ப டுகின்றது. 'இந்த வேலையைச் செய்யும் முறையைச் சரிவரப் படிப்பதென்றால் சிலோனுக்குச் செல்லுங்கள்' என்று டில்லிப் பெரியார்களே சிலோனை முன்னுதாரணமாகக் காட்டுவதன் ரகசியம் இதுதான். இங்கு தப்லீக்குக்கு எதிராக மறுபேச்சுப் பேச முடியாது மீறிப் பேசினால் இருட்டடி, இனந்தெரியாத நபரின் தாக்குதல், அச்சுறுத்தல் போன்றவற்றுக்கு முகம் கொடுக்க வேண்டியிருக்கும். இந்த அராஜகப் போக்கே இலங்கையின் குறிப்பாக கொழும்பு

போன்ற பகுதிகளின் தீவிர தப்லீக் வளர்ச்சியின் ரகசியம்.

எனக்குத் தெரிந்த ஒருவர்தான் ரம்ஸான் மௌலவி. கொழும்பைச் சேர்ந்தவர். ஆரம்பத்தில் இதன் தீவிர கார்க்கூனாக இருந்தவர். 4 மாதங்கள் இந்தியா பாக்கிஸ்தான் சென்று வந்ததன் பின் தஃலீம் புத்தகத்தில் வரும் 'கப்ரில் தொழுத பெரியார்' சம்பவம் கூட சாத்தியம்தான் என் பயான் செய்தவர் பின்னர் மதீனாவில் இஸ்லாமிய உயர்கல்வி கற்றதன் பின் தப்லீக்கிலிருந்து விலகிக் கொன்டவர். இவரை அந்த பகுதி மஸ்ஜிதின் நிர்வாகிகள் ஜும்ஆ குத்பா நிகழ்த்துமாறு வேண்டினர். அவர் அதற்குத் தயாராக இருந்தவேளை அன்றிரவு சில தப்லீக் இயக்கத்தினர் இவர் வீடு வந்து ' நாளை நீங்கள் குத்பா நிகழ்த்தினால் நாங்கள்தான் உங்களுக்கு ஜனாஸா தொழுவிக்க வேண்டி வரும்' என இரு தடவைகள் மிரட்டினர். இதற்குப் பயந்து அவர் அன்று குத்பா நிகழ்த்த வில்லை.

இவர் இன்று ஹயாத்தாக இருக்கின்றார் முடிந்தால் அவரைக் கேளுங்கள் முகவரி தருகின்றேன். இப்படி உண்மையில் நடந்ததா? என அவரிடம் அன்று நான் உறுதிப்படுத்தியதற்கு ஆச்சரியத்துடன் 'இதிலென்ன சந்தேகம் என்றதுடன், இவ்வாறு இன்னும் பல நிகழ்வுகள் உள்ளன என்றார். இப்படி நிறைய சம்பவங்களைச் சொல்ல முடியும்.

எனவே இவர்களிடத்தில் இக்ராமுல் முஸ்லிமீன் - முஸ்லிம்களைக் கண்ணியப்படுத்தல் எனும் விடயம் உஸூலில் ஒன்றாக இருந்தாலும் 'முஸ்லிம்' என்பதன் பொருளையே இவர்கள் சுருக்கி குறுகிய வட்டத்திற்குள் வரையறுத்து விட்டார்கள். இந்த அமைப்பைக் குறைகூறும், எதிர்க்கும் நபர் எவ்வளவுதான் பெரிய தக்வாதாரியாயினும் படித்தவராயினும் அவர் இவர்கள் வரையறுத்த முஸ்லிம் என்ற வட்டத்தை விட்டு வெளியேறி விட்டவராகவே கருதப்படுகின்றார். போத்தலும் கையுமாகத் திரியும் ரவுடி - காவாலிகளைக் கூட இவர்கள் அனுதாபக் கண் கொண்டு பார்ப்பார்கள். அவனுக்கு இக்ராம் செய்து அவன் வீடு சென்று சந்திப்பார்கள். அனால் இவர்களை விமர்சிப்போரை இஸ்லாத்தின் விரோதியாகச் சித்தரித்து தமது கார்க்கூன்களுக்கும் அவ்வாறே அறிமுகம் செய்து விடுவார்கள். அதுமட்டுமன்றி அவர்மீது இல்லாத குற்றச்சாட்டுக்களையும் பொய்களையும் கட்டவிழ்த்து விடுவதற்கும் தயங்க மாட்டார்கள். உண்மையில் இவர்களது நடவடிக்கைகள் குர்ஆன் ஹதீஸின் அடிப்படையில் இருக்குமாயின் குற்றச்சாட்டுகளுக்கு அறிவியல் ரீதியாக, குர்ஆன் ஹதீஸிலிருந்து பதிலளிக்க ஏன் தயங்குகின்றார்கள்?? இல்மு திக்ரை முக்கிய உஸூலாக்கிப் போதிப்பவர்கள் இல்மின் மூலம் பதிலளித்தால் என்ன? அரிவாளை வீசி விட்டு அறிவால் பதிலளிக்க முடியாதா? தூய இஸ்லாமிய அறிவு இவர்களுக்குப் போதிக்கப்பட்டிருந்தால் இந்த நிலை நிச்சயம் ஏற்பட்டிருக்காது.

உதாரணத்துக்கு மதீனாவிலுள்ள அல்ஜாமிஆ இஸ்லாமியா கலாபீடம் இவர்களுக்கு பெரியதொரு தலையிடியைக் கொடுக்கும் விடயம். காரணம் தமது தப்லீக் அமைப்பில் தீவிரமாக ஈடுபாடு கொண்டிருந்த எத்தனையோ மத்ரஸா மாணவர்கள் -- தப்லீக்கின் எதிர்கால வாரிசுகள் என முக்கியஸ்த்தர் மனப்பால் குடித்துக் கனவு கண்டு கொண்டிருந்தவர்கள் மதீனாவுக்கு ஓதச் சென்ற பின்னர் தலைகீழாக மாறி விட்டார்கள். இதனால் ஆத்திரமடைந்த இவர்கள் அம்மாணவர்கள் தப்லீக் அமைப்போடு இணைந்து செயற்படாததன் நியாயங்களை - அவர்களின் குற்றச் சாட்டுக்களை ஏற்றும் கொள்ளாது, அதற்கு அறிவியல் ரீதியாக மறுப்பும் தெரிவிக்காது பல்வேறு அபாண்டங்களை ஜாமியா மீதும் அம்மாணவர்கள் மீதும் இன்றும் சுமத்திக் கொண்டிருக்கின்றார்கள்.

உலக வங்கியிலிருந்து அது ஒதுக்கும் வட்டிப்பணத்திலேயே ஜாமிஆ இயங்குகின்றதென்றும், இங்கு படித்துக் கொடுப்பவர்கள் யஹூதிகளும் நஸாராக்களுமாவார்கள் என்றும், யஹூதியத்தையும், நஸ்ரானிய்யத்தையுமே இங்கு போதிக்கின்றார்கள் என்றும், அதனாலேயே இவர்கள் தப்லீக்கை எதிர்க்கின்றார்கள் என்றும், இங்குள்ள ஆசிரியர்கள் தாடியில்லாமல், ட்ரவுஸர் அணிந்து சிகரேட்

புகைத்தவர்களாகவே படிப்பிப்பார்கள் என்றும் மாணவர்களுக்கு பணத்தாசை காட்டி கிருஸ்த்தவப் பிரச்சாரர்களாக மாற்றுகின்றார்கள் என்றும், எனவே ஹராத்தையே ஊட்டப்பட்டு ஹராத்திலேயே வளர்ந்த இவர்களிடமிருந்து ஹராமான விடயங்களே வெளிப்படுகின்றன என்றும், எத்தனையோ அபாண்டங்களைக் கட்டவிழ்வித்து விட்டிருக்கின்றார்கள்.

இது வெறும் ஆதாரமற்ற பேச்சில்லை. மாறாக பல கார்க்கூன்களுக்குரிய விஷேட பயான்களில் இது கூறப்படுகின்றது. அது மட்டுமின்றி இவ்வாறு கூறித்திரிந்த ஒரு தப்லீக் முக்கியஸ்த்தர் ஒருவரை அணுகி இது பற்றி விசாரித்தவிடத்து அவர் சிரித்துக் கொண்டே மௌனம் சாதித்தார். அவரிடமிருந்து நேரடியாக இதைக் கேட்ட சாட்சிகளும் இன்றும் உள்ளனர்.

## ஐந்தாம் நம்பர் .

<u>இக்லாஸ்: மனத் தூய்மை.</u>

இக்லாஸ் எனும் சொல் மனத்தூய்மை, கலப்பற்ற எண்ணம் போன்ற பொருள்களைக் கொண்டிருக்கின்றது. மார்க்க சம்பந்தப்பட்ட விடயத்தைச் செய்யும்போது அதில் முகஸ்த்துதியோ, உலக நோக்கங்களோ இல்லாது முழுக்க முழுக்க அல்லாஹ்வின் திருப்தியை மாத்திரம் இலக்காகக் கொண்டு செய்யப்படும் போதே அது இக்லாஸான அமல் எனும் பெயரைப் பெறுகின்றது. அல்லாஹ் சொல்கின்றான்...

'நாம் அவர்கள் செய்த அமல்களின் பக்கம் வந்து நோட்டமிட்டு விட்டு (அவை இக்லாஸுடன் செய்யப்படாததன் காரணமாக) அவற்றை வீசியெறியப்பட்ட புழுதியைப் போன்று ஆக்கி விட்டோம்' என்கின்றான். (ஸூரத்துல் புர்க்கான் வசனம் 23)

எனவே ஒரு முஸ்லிம் குறிப்பிட்ட ஒரு இபாதத்தை இறைவனுக்காக இக்லாஸுடன் செய்கின்றானா? அல்லது அவனது எண்ணத்தில் முகஸ்த்துதி கலந்து விட்டதா, அல்லது உலக இலக்கை மையமாக வைத்துச் செய்கின்றானா? என்பது உள்ளம் சம்பந்தப்பட்ட விடயம். அல்லாஹ்வைத் தவிர உள்ளத்தில் உள்ளதை அறிவோர் யாருமில்லை. இருப்பினும் ஒருவரின் புறச்செயற்பாடுகள் நடவடிக்கைகளின் மூலமாக அவரது நோக்கம் என்னவென்பதை ஓரளவுக்கு அனுமானிக்க முடியும்.

தப்லீக் அமைப்பினரைப் பொறுத்தவரைக்கும் அவர்களை இந்த இக்லாஸ் விடயத்தில் நடுத்தர தப்லீக் பொறுப்புதாரிகள், அதியுயர் தப்லீக் முக்கியஸ்த்தர்கள் என இரு பிரிவாகப் பிரிக்கலாம்.

இவர்களில் நடுத்தர மட்டத்தில் உள்ள கார்க்கூன்கள் மஹல்லா ஏரியாப் பொறுப்புதாரிகள் போன்றோர் பாமர மக்களைப் பள்ளியுடன் தொடர்புபடுத்த வேண்டும் என்ற எண்ணத்தில் தூய்மையாக இக்லாஸுடன் நடந்து கொள்வதைப் பார்க்கக் கூடியதாக இருக்கின்றது.

மக்கள் நல்வழி நடக்க வேண்டுமென்பதற்காக அவர்களது வீடுவரை தேடிச்சென்று அவர்களிடம் உரையாடல், குஸூஸி உமூமி கஸ்த்துக்களில் ஈடுபடுவதற்காக தமது அந்தஸ்த்து தொழில் வர்த்தகம் அனைத்தையும் தியாகங் செய்து நேரம் ஒதுக்கல், அலைந்து திரிந்து மூலை முடுக்குகளெல்லாம் செல்வதால் ஏற்படும் சிரமங்களை அல்லாஹ்வுக்காகப் பொறுத்துக் கொள்ளல், எவ்வித சுயநல உலக நோக்கமுமின்றி தன்னைவிடப் படிப்பில் அந்தஸ்த்தில் செல்வ நிலையில் தாழ்ந்தவர்களிடத்தில் கூட அவர்களின் காலடிக்குச் சென்று பள்ளிக்கு அழைத்தல், ஒரு காரியத்தைத் திட்டமிட்டு மஸூரா அடிப்படையில் செய்தல் போன்ற விடயங்களைச் சொல்லலாம். இவர்களிடம் இவ்விடயங்களில் உலக நோக்கங்கள் எதுவும் இல்லை - இவற்றை இவர்கள் பூரண இக்லாஸுடனேயே செய்கின்றனர் என்பதைக்

காட்டுகின்றன. இதற்காக இவர்களை அனைவரும் பாராட்டித்தான் ஆக வேண்டும்.

ஆனால் இவர்கள் தமது ஆத்மீக வழிகாட்டிகளாக அல்குர்ஆன்-ஹதீஸை நம்பியிருக்காமல் இதை விடுத்து இவர்களது மேலிடத்து உத்தரவுகளையும் வழிகாட்டல்களையுமே நூற்றுக்கு நூறு நம்பியிருப்பதால் இவர்களிடம் ஷிர்க்கான பித் அத்தான விடயங்கள் பல இவர்களையறியாமலே ஏற்பட்டு விடுகின்றன. குறிப்பிட்டுச் சொல்வதென்றால் தப்லீக் பெரியார்களின் வேத நூலான அமல்களின் சிறப்பு, ஹஜ்ஜின் சிறப்பு, ஸதக்காவின் சிறப்பு போன்றவற்றிலுள்ள அனைத்து விடயங்களையும் இவர்கள் உண்மைப்படுத்துவதால், சரியானவையென உறுதிப்படுத்துவதால் அதிலுள்ள நான் முன்னர் சுட்டிக்காட்டிய காட்டாத அனைத்தையும் நம்பித்தொலைத்து விடுவதால், அதன் மூலம் பலவித பித்அத்தான ஷிர்க்கான நம்பிக்கைகள் இவர்களிடம் தோன்றி விடுகின்றன. எனவே இவர்களைப் பொறுத்தவரைக்கும் அல்குர்ஆனுக்கோ ஹதீஸுக்கோ முரணான எந்தவொரு விடயத்தையும் இவர்கள் செய்வதில்லை. அதைத் தமது மேலிடத்துப் பெரியார்கள் வலியுத்தினாலும் சரிதான். மேலும் அவர்கள் சொல்பவை இஸ்லாத்துக்கு மாற்றமானதா இல்லையா? எனப் பார்த்தே எடுத்து நடப்போம் என இவர்கள் முடி வெடுத்தால்தான் இவர்கள் புரியும் இக்லாஸான தப்லீக் நடவடிக்கைகளுக்கு அல்லாஹ்விடத்தில் நற்கூலி கொடுக்கப்படுமென அடித்துச் சொல்ல முடியும். ஏனெனில் நாம் புரியும் ஒரு இபாதத்து ஸாலிஹான அமலாக அல்லாஹ்வினால் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமாயின் அது முழுக்க இக்லாஸுடனும் செய்யப்பட வேண்டும். அதேபோல் நபியின் வழிகாட்டல்படியும் செய்யப்பட வேண்டும் என்பதை அல்குர்ஆனும் நபிமொழிகளும் உறுதிப்படுத்துகின்றன.

இவர்களில் அடுத்த வர்க்கத்தினர் தப்லீக் உயர்மேலிடங்கள். டில்லி ட்ரைவின் போன்ற மர்க்கஸ்களின் முக்கியஸ்தர்கள். இவர்களில் சுயரூபம் தப்லீக் கார்க்கூன்களான பக்தர்களுக்கே சரிவரத் தெரியாது. இஸ்லாத்தைப் பின்பற்ற வேண்டுமெனப் போதிப்பார்கள். ஆனால் தாம்சொல்பவைதான் இஸ்லாம் என வாதிப்பார்கள். நபிவழிதான் நம்வழியென பயான்களில் முழங்குவார்கள். ஆனால் முதலாம் நம்பர் ஹனபி மத்ஹபு வெறியர்களாக இருப்பார்கள். ஹனபி மத்ஹபைப் பின்பற்றுவது வாஜிப் என்பார்கள். அல்லாஹ்தான் எல்லாவற்றையும் படைத்தவன் ரிஸ்க் அளிப்பவன் அனைத்து சக்தியுமுள்ளவன் - வஸ்த்துக்களுக்கு எவ்வித சக்தியுமில்லை என பயான்களில் சொல்வார்கள், ஆனால் மறுபக்கம் தமது விஷேட பயான்களில் தம் ஷைக்மார், குருமார்களுக்கு அற்புதங்கள் எனும் பேரில் நடந்த இஸ்லாத்தையே அழிக்கும் ஷிர்க்கான விடயங்களைக் கராமத் எனும் பெயரில் கட்டவிழ்த்து விட்டு கப்ர் வழிபாட்டுக்கு நியாயம் கற்பிப்பார்கள். அதன் பக்கம் மக்களை அழைக்கவும் செய் வார்கள். பாமர அரபியல்லாத மக்களுக்கு வாசிக்க அமல்களின் சிறப்பு. அரபிகளைக் கண்டால் ரியாலுஸ் ஸாலிஹீன் ஹதீஸ்க் கிதாபைக் காட்டி நடிப்பு. ஏன் இதுவரை இந்த அமல்களில் சிறப்பு, ஹஜ்ஜின் சிறப்பு போன்றவை இத்தனை மொழிகளில் பெயர்க்கப்பட்டது போன்று அரபியில் பெயர்க்கப்படவில்லை தெரியுமா?. அங்குதான் ரகசியமுள்ளது. முழு அரபு உலகத்தின் எதிர்ப்பையும் அதனால் சம்பாதித்து தமது திட்டங்கள் செயலற்றுவிடும் என்ற பயம்தான் காரணம். ஸஹாபாக்களின் வாழ்க்கை எம்மிடம் வரவேண்டுமெனக் கூறி விட்டு தமது தஃலீம் புத்தகத்தில் ஏதேதோ ஷிர்க் நிறைந்த குப்பைகளை யார்யாருக்கோ நடந்ததாக எழுதி வைத்திருக்கின்றார்கள் . எனவே இவர்களுக்கு இரு பக்கமுண்டு. இரட்டை வேடமுண்டு. இவர்கள் தம்மை இஸ்லாத்தின் பாதுகாவலர்கள் என்று சொல்லிக் கொண்டாலும் இவர்களது உண்மையான நோக்கம் இவர்கள் சொல்வதைக் கேட்டு அதே போன்று செயற்படக்கூடிய ஒருபக்தர் கூட்டத்திற்கு இவர்கள் தலைமை வகிப்பதே. யதார்த்தத்தில் இவர்கலெல்லாம் சூபிகள், தரீக்காவாதிகள். வாழையடி வாழையாக சூபித்துவக் குருக்களிடம் பைஅத் பெற்று ஆயிரக்கணக்கான மக்களிடமிருந்து பைஅத்தும் வாங்கியுள்ளனர். சூபித்துவம், தரீக்கா என்றெல்லாம் மக்கள் மத்தியில் தம்மை அறிமுகப்படுத்தினால் போதிய ஆதரவு கிடைக்காது எனும் காரணத்தால் இப்போதுள்ள புதிய பெயரில் தமது தரீக்கா நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகின்றனர். எனவே இவர்கள் இக்லாஸுடன் செயற்படுகின்றார்கள் என்று பாமரர்கள் நம்புவது வேடிக்கையான

விடயம். இத்தகவல்கள் சிலருக்கு வியப்பைத் தரலாம். அப்படிப்பட்டவர்கள் மேற்கொண்டு இது சம்பந்தமாக ஆராய்ந்து உறுதிப்படுத்தியதன் பின்- தப்லீக் முக்கியஸ்த்தர்களிடமே இது பற்றி வினாவெழுப்பி தப்லீக்கின் நடவடிக்கைகள் அனைத்தையும் குர்ஆன் ஹதீஸ் ஆதாரங்களைக்கூறி நிரூபிக்குமாறு வலியுறுத்தி சரியான முடிவெடுக்கக் கடமைப்பட்டுள்ளார்கள். மற்றும் சிலருக்கு இது ஆத்திரத்தையளிக்கலாம். அப்படிப்பட்டவர்கள் உணர்ச்சி வசப்பட்டு விடாமல் ஆத்திரத்தைத் தூக்கியெறிந்து விட்டு அமைதியடைந்து மேற்படி சுட்டிக்காட்டப்பட்ட விடயங்கள் தப்லீக் அமைப்பில் இருக்கின் றதா? என அவதானிக்கக் கடமைப்பட்டுள்ளார்கள். நபிவழி தான் நம்வழி எனும் கொள்கையை ஏற்றவர்களாயிருந்தால் நீங்கள் நிச்சயம் இப்படிச் செய்வீர்கள். இதற்கு மாற்றமாக குருவழியே குடியானவன் வழி ஆசான் வழியே அடியேன் வழி எனும் கொள்கையில் வாழ்பவர்களுக்கு இதுவெல்லாம் பயனளிக்காது. அல்லாஹ் நாடினால் - அவனாக இவர்களுக்கு நேர்வழிகாட்டினால்தான் உண்டு. அதற்காகவும் நாம் பிரார்த்திப்போம்.

## ஆறாம் நம்பர்

<u>தஃவத் தப்லீக்.</u>

தஃவத் தப்லீக் என்பது உயர்தரமான அமல். இது நபிமார்கள் செய்து வந்த வேலை என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை. நபிமார்கள் அல்லாஹ்வின் கட்டளைகளை மக்களுக்கு எடுத்துச் சொல்லி அவற்றில் எவ்வித கூட்டலோ குறைத்தலோ மாற்றமோ இன்றி மக்களை அதன்பக்கம் அழைத்தார்கள். அதன் பிரகாரமே இறுதி நபியான எங்கள் முஹம்மது (ஸல்) அவர்களும் இஸ்லாமியப்பணி செய்துவிட்டு மரணிக்கும்போது தனது உம்மத்தான எம்மிடம் அப்பொறுப்பை ஒப்படைத்து விட்டுச் சென்றுள்ளார்கள். இது ஒரு அமானத். இதை நாம் அவர்கள் சொன்னவாறு செய்யவேண்டுமா இல்லையா? தப்லீக் அமைப்பினர் அப்படித்தான் செய்கின்றார்களா? மேலே நான் எடுத்துக் காட்டிய மார்க்கத்துக்கு முறணான விடயங்கள் இவர்களிடம் இருக்கின்றனவா? என்று பாருங்கள். அதன் பின் நீங்களாகவே முடிவெடுங்கள்.

இங்கு தப்லீக் அமைப்பு பற்றி இஸ்லாமிய அறிஞர்கள் கூறிய சில தகவல்களைத் தருகின்றேன். இவை வெறும் அவர்களின் சொந்தக் கருத்துக்களல்ல. பல்வேறு தலைசிறந்த அறிஞர்கள் தப்லீக் அமைப்பு பற்றி வெளியிட்ட கருத்துக்களைச் சேகரித்து சவூதி பத்வாக்குழு மையத்தினரே வெளியிட்ட புத்தகமொன்றிலிருந்து பெறப்பட்ட தகவல்கள்...

இவர்களெல்லாம் ஏன் தப்லீக் அமைப்பைக் கண்டிக்கின்றார்கள் என்பதைத் தக்க காரணங்களோடு சுட்டிக் காட்டுகின்றார்கள். இவைகளும் உங்களுக்கு மேலதிகத் தெளிவைத் தரக்கூடும் எனும் நம்பிக்கையில் அந்த பத்வாக்களில் சிலவற்றைக் கூறுகின்றேன். விரிவாகப் பார்க்க விரும்புபவர்கள் சவூதி அரேபிய பத்வா நிலையத்தால் வெளியிடப்பட்ட <u>'கஸ்புஸ்ஸிதார் அம்மா தஹ்மிலுஹூ பஃலுல் ஜமாஆத் மில் அக்தார்'</u> எனும் நூலைப் பார்க்கவும்.

<u>தப்லீக் அமைப்பு பற்றி சில உலமாக்கள்..</u>

1- அப்துல்லா இப்னு பாஸ் (முன்னாள் சவூதி அரேபியாவின் முப்தி).

தப்லீக் அமைப்பினரைப் பொறுத்தவரைக்கும் அவர்களிடத்தில் அகீதா -இறை நம்பிக்கைக் கோட்பாடு பற்றிய நம்பிக்கையில் எவ்வித தெளிவும் இல்லை. எனவே ஸுன்னத் வல் ஜமாஅத்தினரின் (நபிகளாரும் ஸஹாபாக்களும் கொண்டிருந்த அகீதாவில் போதிய தெளிவில்லாத எவருமே இதில் வெளிக் கிளம்பிச் செல்வது கூடாது. சரியான இறை நம்பிக்கைக் கோட்பாட்டை கற்றவர்கள் வேண்டுமானால் அதுபற்றி விளக்குவதற்காக, கற்றுக் கொடுப்பதற்காக அவர்களுடன் செல்லலாம். தப்லீக் அமைப்பினர் தமது பணியில்

மிக உற்சாகமானவர்கள். எனினும் தவ்ஹீத் ஸுன்னா, பித்ஹுூ - மார்க்கச் சட்டம் போன்றவற்றில் போதிய தெளிவுள்ள உலமாக்கள் மூலம் இவர்களுக்கு நிறைய விடயங்கள் போதிக்கப்பட வேண்டியிருக்கின்றது. இவர்களிடம் நிறைய மௌட்டீக, பித் அத்தான, ஷிர்க்கிய்யதான விடயங்கள் காணப்படுகின்றன. எனவே இதுபற்றி விளக்கும் அல்லது தடுக்கும் சக்தியுள்ளவர்களே இதில் செல்லலாம். அவர்களுடன் வெளிக்கிழம்பி அவர்கள் செய்வதையெல்லாம் பார்த்துக் கொண்டுதான் இருக்க முடியும் எனும் நிலையிலுள்ளவர்கள் இதில் செல்லக் கூடாது.
(மஜ்முஉல் பதாவா -இப்னு பாஸ்)

2- அல்லாமா நாஸிருத்தீன் அல்பானி அவர்கள் தப்லீக் அமைப்பு பற்றி.. ( பிரபல ஹதீஸ்க்கலை மேதை )

'தப்லீக் ஜமாஅத்தைப் பொறுத்தவரைக்கும் அது அல்குர்ஆன் -நபிவழியிலோ, முன்சென்ற நல்லோர் (ஸஹாபாக்கள், தாபியீன்கள்) வழியிலோ நடக்கும் ஓர் அமைப்பல்ல. எனவே அவர்களுடன் வெளிக்கிளம்பிச் செல்வது கூடாது. காரணம் நமது வழி நபிவழியாகும். இவர்களின் வழி அதற்கு மாற்றமானதாகும். இவர்களுடன் வெளிக்கிழம்பிச் செல்பவர்களைப் பொறுத்தவரை அவர்கள் அதை விட்டுவிட்டு தமது பகுதியிலுள்ள குர்ஆன் ஹதீஸின் பக்கம் அழைக்கும் உலமாக்களிடத்தில் இஸ்லாத்தைப் படிப்பது அவசியமாகும். அதே போல் தூய இஸ்லாத்தைப் படித்த உலமாக்கள் இவர்களை அணுகி குர்ஆன் ஹதீஸ் வழிப்படி இவர்களுக்கு இஸ்லாத்தைக் கற்றுக் கொடுப்பதும் அவசியமாகும். தப்லீக் அமைப்பினர் குர்ஆன் ஹதீஸ் அடிப்படையிலேயே தமது அழைப்புபணி அமைய வேண்டும் என்பதில் அசட்டையாக இருப்பவர்கள். இவ்விடயத்தில் இக்வானுல் முஸ்லிமீன் எனும் அமைப்பினரும் இவர்களும் ஒன்றே. தமது தஃவாப்பணி குர்ஆன் ஹதீஸ் வழியிலுள்ளது என வாதிடுவார்கள். ஆனால் அது வெறும் வாய்ப்பேச்சேயாகும். இவர்களிடம் எந்த அகீதாவோ, கொள்கையோ கிடையாது. அனைவருக்கும் அங்கு இடம் கிடைக்கும். யார் விரும்பினாலும் அதில் இணைந்து கொள்ளலாம். ஒருவர் அஸ்அரி, மற்றொருவர் மாத்துரிதிய், இன்னுமொருவர் ஸூபிய் இப்படி அனைவருக்கும் அது புகலிடம் ஏனெனில் அவர்கள் 'வெளிக்கிளம்பிச் சென்று பின் படி' என்கின்றார்கள். நாம் சொல்கின்றோம் படித்துவிட்டு வெளிக்கிளம்பு என்று. ஏனெனில் இஸ்லாத்தைச் சரிவர கற்காதவர்கள் வெளிக்கிழம்பி எதன் பக்கம் மக்களை அழைக்க முடியும்?. எதைக்கற்றுக் கொடுக்க இயலும். இஸ்லாத்தின் பெயரால் தமக்குத் தெரிந்த கட்டுக்கதைகளையும் கப்ஸாக்களையுமே சொல்லிக் கொடுக்க முடியும். அதுதான் இன்றும் நடந்து கொண்டிருக்கின்றது. சமூகத்திலுள்ள சீர்கேடுகள், மார்க்க விரோதக் கொள்கைகளை நீக்குவதிலும் இவர்கள் எவ்வித பங்களிப்பும் செய்ய மாட்டார்கள். ஏனெனில் இது அவர்களின் எண்ணப்படி பிரிவினையைத் தோற்றுவித்து விடும். ஒரு சிலர் இவர்களால் ஏற்பட்டுள்ள நன்மைகளைச் சுட்டிக்காட்டி இவர்களுடன் வெளிக் கிளம்புவதை நியாயப்படுத்துகின்றனர். எந்தவொரு அமைப்பாக இருப்பினும் அதற்கு ஆதரவாளர்களும் அதனால் நன்மைகள் ஏற்படுவதும் இயல்பே. அவர்கள் எதன் பக்கம் அழைக்கின்றர்கள் என்பதே எமது கேள்வி. இவர்கள் மக்களுக்கு அல் குர்ஆனைப் படித்துக் கொடுக்கின்றார்களா? நபிமொழிகளை அதன் சட்டதிட்டங்களைப் படித்துக் கொடுக்கின்றார்களா? ஸலபுகளின் அகீதாவின் பக்கம் அழைக்கின்றார்களா? மத்ஹபு மீதான வெறியைக் களைந்து சுன்னாவின் வழிநடக்கப் பாடுபடுகின்றார்களா? எதுவுமே இல்லை. எனவே இவர்களிடம் இஸ்லாமிய அறிவு என்று சொல்வதற்கு எதுவுமில்லை. எந்தெந்த இடங்களில் இருக்கின்றார்களோ, செல்கின்றார்களோ அதற்கேற்ப நடந்து கொள்வதும் தேவையேற்படின் நிறம்மாறிக் கொள்வதுமே இவர்களது வழிமுறையாகவுள்ளது.
(பதாவா இமாராத்திய்யா - அல்பானி ப: 37)

3- ஷைக்அப்துர் ரஸ்ஸாக் அல் உபைபி. (சவூதி உலமாக்கள் ஒன்றியத்தின் உறுப்பினர்) தப்லீக் பற்றி...

தப்லீக் அமைப்பினர் உண்மையைச் சொல்லப்போனால் பித்அத் வாதிகள். காதிரியா ஜிஸ்தியா போன்ற தரீக்காக்களைச் சார்ந்தவர்கள். அவர்களுடன் வெளிக்கிழம்பிச் செல்வது அல்லாஹ்வின் பாதையில் வெளிக்கிளம்புவதாக ஆகாது - இல்யாஸ் (மௌலானா) காட்டிய பாதையில் சென்றதாகவே அமையும். அவர்களது தஃவத் குர்ஆன் ஹதீஸின் பக்கம் உள்ளதல்ல. அவர்களின் தவைலரான இல்யாஸ் (மௌலானா) பக்கமே உள் ளது. அல்குர்ஆனில் சொல்லப்பட்ட 'அல்லாஹ்வின் பால் அழைத்தல், வெளிக்கிழம்புதலென்பது' ஜிஹாத் செய்வதையே குறிக்கும். தப்லீக்கில் வெளிக்கிழம்புவதற்கும் இதற்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. எனக்கு மிக நீண்ட காலம் தொட்டே அவர்களைப் பற்றித் தெரியும். அவர்கள் பித்அத் வாதிகள். அவர்கள் அமெரிக்கா, இஸ்ரேல், யகிப்து, ஸவூதி போன்ற எங்கிருந்த போதிலும் தமது ஷைக்மார்களுடனேயே தம் முழுத் தொடர்புகளையும் வைத்திருப்பார்கள். (பதாவா அப்துர் ரஸ்ஸாக் பாகம் 1 ப: 174)

4-<u>அஸ்ஸெய்க் ஸாலிஹ் அல் பௌஸான். (சவூதி உலமாக்கள் ஒன்றிய உறுப்பினர்.)</u>

அல்லாஹ்வின் பாதையில் வெளியாகுதல் என்பது தப்லீக் அமைப்பினர் சொல்வதைப் போன்றதல்ல. அல்லாஹ்வின் பாதையில் வெளிக்கிழம்பல் என்பது யுத்தத்திற்காக வெளிக்கிளம்புவதையே குறிக்கும். இவர்கள் அப்பெயரை தமது செயலுக்குச் சூட்டிக் கொண்டது பித்அத் ஆகும். அதேபோல் அழைப்புப்பணிக்காக செல்பவர் இஸ்லாமிய அறிவு பெற்றவராக இருப்பது அவசியம் அல்லாஹ் கூறுகின்றான்....

நபியே 'இதுதான் எனது வழி நானும் என்னைப் பின்பற்றியவர்களும் அல்லாஹ்வின் பக்கம் தெளிவான அத்தாட்சி - அறிவின் மூலம் அழைக்கின்றோம்' என்று சொல்லுங்கள் என்கின்றான். (ஸூரா யூஸுப் வசனம் 108)

ஏனெனில் இஸ்லாத்தின் பக்கம் அழைப்பவர் ஷிர்க் எது பித்அத் எது? ஹராம் எது ஹலால் எது? என்பன போன்ற விடயங்களை ஆதாரத்துடன் தெரிந்து வைத்திருத்தல் அவசியம். இஸ்லாமிய அறிவு ஒவ்வொருவருக்கும் அவசியம். அது இல்ஹாமிய்யத் (மெஞ்ஞானம்) மூலமோ, வெறுமனே வெளிக்கிளம்பிச் செல்வதாலோ ஏற்படப்போவதில்லை. வழிகெட்ட சூபிகளே இவ்வாறு கூறுவர். இல்ம் இல்லாமல் அமல் செய்வதால் வழி கேட்டுக்குச் செல்லும் அபாயம் உள்ளது. கற்காமல் அறிவு கிடைக்கும் என நினைப்பது கிணறு தோண்டாமல் தண்ணீர்பெற நினைப்பது போல் மனப்பால் குடிப்பதற்குச் சமனாகும். (மூன்று முக்கிய உரைகள் - 155 பௌஸான்)

5- <u>ஷைக் அப்துல் காதிர் அர்நாவூத் (பல்வேறு ஆய்வு நூல்களின் ஆசிரியரும் ஹதீஸ்கலை மேதையும்.)</u>

தப்லீக் ஜமாஅத்தினர் காதிரிய்யா நக்ஷபந்திய்யாத் தரீக்காக்களின் பக்கம் மறைமுகமாக அழைப்பவர்கள். அகீதா - இஸ்லாமிய இறைநம்பிக்கைக் கோட்பாட்டுடன் அதற்கு முரணான நம்பிக்கைகளையும் கலந்து விட்டவர்கள். ஸுன்னத்தான விடயங்களுடன் பித்அத்தானவைகளையும் கலந்து விட்டவர்கள். இஸ்லாத்தில் ஜிஹாத் பற்றிய செய்திகளை மறைத்து விட்டு மனதுடன் (ஷைத்தானுடன்) போராடுவதே ஜிஹாத் எனும் ஸூஃபித்துவக் கருத்தைப் போதிப்பவர்கள். இஸ்லாத்தின் அடிப்படை மூலமந்திரமான அகீதாவைப் பற்றிப் பேசாது அதன் பக்கம் மக்களை அழைக்காது அதற்கடுத்துள்ள விடயங்களில் ஈடுபடுபவர்கள். எனவே நபியவர்கள் காட்டித்தந்த குர்ஆன் கூறிய வழியின் பக்கம் அவர்கள் மீள வேண்டியது அவசியம். அல்லாஹ் ரஸூலிடமிருந்து தஃவத் பணியை எங்கிருந்து ஆரம்பிக்க வேண்டுமெனக் கட்டளையிடப்பட்டதோ அந்த தவ்ஹீதிலிருந்து தஃவத்தை மீண்டும் இவர்கள் ஆரம்பிக்க வேண்டும். இவற்றையெல்லாம் இவர்கள் சீர்செய்யாத நிலையில் இவர்களுடன் வெளிக்கிழம்புவது பித்அத்தாகவே, இவர்களின் அமைப்பை ஆதரிப்பதாகவே அமையும். இவர்கள் தம்மைத் திருத்திக் கொண்டு நபிவழிப்படி தஃவத் செய்து தூய அகீதாவை ஏற்று நல்லோராக வாழ்ந்து மரணிக்க அல்லாஹ் அருள்

பாலிப்பானாக! (1 كشف الستار ص (அப்துல் காதிர் அர்நாவுத் - தமஸ்கஸ்

6- (மதீனா இஸ்லாமியப் பல்கலைக்கழக அதிபர்) ஷைக் ஸாலிஹ் அல் அபூத் தப்லீக்கைப் பற்றி...

இஸ்லாம் எனும் நீதித் தராசிலே தப்லீக் ஜமாஅத், இக்வானுல் முஸ்லிமீன் ஆகிய இரு அமைப்புக்களையும் நிறுத்துப் பார்ப்பது நல்லதென நினைக்கின்றேன். இவ்விரு இயக்கமும் தாம் மாத்திரமே தூய இஸ்லாத்தின் பக்கம் அழைப்பதாக நினைத்துக் கொண்டு ஷிர்க்கிலும் பித்அத்திலும் மூழ்கியிருக்கும் தமது நாட்டில் தஃவாச் செய்யாது ஆயிரக்கணக்காண உலமாக்கள் உள்ள சவூதியில் அவர்களுக்கு எவ்வித வேலையும் இல்லாதிருந்தும் இங்கு பிரவேசித்து தமது அணிக்கு ஆள்ச்சேர்ப்பு நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றனர். தமது நாட்டில் இவர்கள் செய்ய வேண்டிய இஸ்லாமியப்பணிகள் நிறையவே இருக்க இங்கே எதற்காக இவர்கள் வரவேண்டும்?. இவர்கள் தூய இஸ்லாத்தின் பக்கம் அழைக்கவில்லை. முதலில் இவர்களிடமுள்ள மத்ஹபு வெறி, இயக்க வெறி, ஆணவம் போன்றவற்றை இவர்கள் களைந்து விட்டு இக்லாஸுடன் தூய இஸ்லாத்தைப் படிக்க வேண்டியுள்ளது. (கஸ்புஸ்ஸிதார் பக்கம்: 84)

7- மதீனா ஜாமிஆ இஸ்லாமிய்யாவின் போதனாசிரியர் ஸாலிஹ் அஸ்ஸுஹைமி தப்லீக்கைப் பற்றி ...

'தப்லீக்கின் பெரியார்கள் ஸூஃபிஸ தரீக்காக்களான நக்க்ஷபந்திய்யா, ஸஹ்ரவர்திய்யா, காதிரிய்யா, ஜிஸ்திய்யா போன்ற தரீக்காக்களில் பைஅத் செய்தவர்களாக அதன் பக்கம் ரகசியமாக அழைப்பவர்களாக இருக்கின்றனர். முரீதுகளிடம் பைஅத் வாங்குவதற்கு இஸ்லாத்தில் என்ன ஆதாரம் இருக்கின்றது? என இவர்களின் தலைவரான இன்ஆமுல் ஹஸனிடம் கேட்டதற்கு நாங்கள் அவர்களிடம் பைஅத் பெறாவிட்டால் அவர்கள் வேறு தரீக்காவின் ஷைக் மார்களிடம் சென்று பைஅத் பெற்று விடுவார்கள் என்பதனாலேயே அவ்வாறு செய்கின்றோம் என பதிலளித்தமை குறிப்பிடத்தக்கது.) மேலும் ஜிஹாத் சம்பந்தப்பட்ட வசனங்கள் ஹதீஸ்களையெல்லாம் திரிபுபடுத்தி அவை தப்லீக் ஜமாஅத்தில் செல்வதைத்தான் குறிக்கின்றன என்பது போன்ற பிரமையை ஏற்படுத்தி மனதைப் பக்குவப் படுத்துவதுதான் ஜிஹாத் என்ற தவறாக விளக்கத்தை இவர்கள் மக்களுக்குப் போதிக்கின்றனர். இஸ்லாத்தின் அடிப்படை விடயங்கள் பற்றியே தெளிவில்லாத, அகீதா பற்றி எதுவும் தெரியாத, பித்அத்திலும் மௌட்டீகத்திலும் மூழ்கியுள்ள இவர்களுடன் வெளிக்கிளம்பிச் செல்வது தடை செய்யப்பட வேண்டியதொரு விடயமாகும். (கஸ்புஸ்ஸிதார் பக்கம் 85)

(குர்ஆன் ஹதீஸின் பக்கம் அழைக்கும் ஏனைய உலமாக்கள் இஸ்லாமிய அழைப்புக்காக செய்யும் சேவைகள் தியாகங்கள் அதற்காகச் செலவு செய்யும் பொருளாதாரங்கள் புத்தக வினியோகம், ஆடியோ-வீடியோ காஸட், இன்டர்நெட் மூலமான தஃவாப்பணி, முஸ்லிமல்லாதோரின் சந்தேகத்துக்குரிய பதில்கள், இவர்களினால் முஸ்லிமானோரின், திருந்தியோரின் விபரங்கள் எதையுமே மக்களுக்குக் கூறாது இருட்டடிப்புச் செய்து விட்டு முழு உலகிலும் இஸ்லாம் வளர்வதற்குத் தாமே முழுக்காரணம் எனப் பொய் கூறித் தம்பட்டம் அடிக்கின்றனர் இவர்கள். ஒவ்வொரு அraபு அரசுகளும் தனது செலவால் ஜரோப்பிய ஆப்பிரிக்க ஆசிய நாடுகளில் லட்சக்கணக்கான பள்ளிகளைக் கட்டியிருக்க, இஸ்லாமிய வளர்ச்சிக்காக கோடிக்கணக்கில் செலவு செய்திருக்க, இவர்களது செலவால், முயற்சியால் லட்சக்கணக்காணோர் இஸ்லாத்தைத் தழுவியிருக்க இவர்களோ தப்லீக்கின் முயற்சியால் பிரான்ஸில் ஆயிரம் பள்ளிகள், அமெரிக்காவில் பல்லாயிரம் பள்ளிகள் ஜெர்மனியில் பல்லாயிரம் பள்ளிகள் உருவாகியிருக்கின்றன, இந்த வேலையின் உழைப்பால் அங்கெல்லாம் லட்சக்கணக்கில் மக்கள் இஸ்லாத்தில் இணைந்திருக்கின்றனர் எனக் கதையளந்து எவனோ செய்த வேலையைக் காட்டித் தமக்குப் புகழ்தேட முயல்கின்றனர்)

8- <u>ஷைக் ஸாலிஹ் பௌஸான் அவர்கள் தப்லீக் பற்றி...</u>

'தப்லீக் அமைப்பானது அகீதா விடயத்திலும், தஃவா அணுகு முறையிலும் தவறான கருத்தில் இருக்கும் ஒரு இயக்கமாகும். எத்தனையோ இஸ்லாமிய அறிஞர்கள் இதன் தவறான - இஸ்லாத்திற்கு மாற்றமான கொள்கைகள் பற்றி எடுத்துரைத்து இதில் வெளிக்கிழம்பிச் செல்வதோ, அதற்கு உதவி செய்வதோ கூடாதென்று விளக்கியிருக்கின்றார்கள். எனவே ஒவ்வொரு முஸ்லிமும் இவ்விடயத்தில் எச்சரிக்கையாக இருப்பதுடன் பிறரையும் எச்சரிக்க வேண்டும். இந்த தப்லீக் முக்கியஸ்த்தர்களுக்கு நான் கூற விரும்புவது என்னவென்றால் இவர்கள் தமது தவறான கொள்கைகளை விட்டு விலகித் தவ்பாச் செய்து தூய இஸ்லாத்தை குர்ஆன் ஹதீஸின் அடிப்படையில் மக்களுக்கு எத்திவைக்க வேண்டும். ஸுன்னத் வல் ஜமாஅத்தினரின் (ஸஹாபாக்கள் தாபியீன்களின்) கொள்கைக்கேற்ப தமது தஃவத்தை மாற்றியமைத்து தவ்ஹீதிலிருந்து ஆரம்பித்து தமது நாட்டில் இருக்கும் ஷிர்க் பித்அத்தை அகற்ற முதலில் உழைப்புச் செய்ய வேண்டும். அதே போன்று தவ்ஹீத் - அகீதா விடயத்தில் அதிக கவனம் செலுத்தி இது பற்றிய தெளிவை மக்களுக்கு ஏற்படுத்த வேண்டும். ஏனெனில் அதுவே அடிப்படை, அதையே நமது நபியவர்களும் ஏனைய அனைத்து நபிமார்களும் ஆரம்பமாகப் போதனை செய்தார்கள். தவ்ஹீதை அடிப்படையாகக் கொள்ளாத எந்த தஃவா அமைப்பும் இறுதியில் தோல்வியைத் தழுவுவது நிச்சயம். (ஏனெனில் அது நபியவர்களின் தஃவத் முறைக்கு மாற்றமானது) இந்த அறிவுரைகளைத் தப்லீக் முக்கியஸ்த்தர்கள் ஏற்றுக் கொண்டால் சரி. இல்லாவிட்டால் ஏனைய அப்பாவி பாமர முஸ்லிம் சகோதரர்கள் இவர்களுடன் வெளிக் கிளம்பி தமது அகீதாவையும் பாழ்படுத்திவிடக் கூடாதென்று எச்சரிக்கின்றேன். (ஹிஜ்ரி1422 ல் வெளியிட்ட பத்வா கஸ்புஸ்ஸிதார் 72)

9- <u>ஷைக் ஸாலிஹ் இப்னு உதைமீன் (பிரபல மார்க்க மேதை) தப்லீக் பற்றி...</u>

'தப்லீக் அமைப்பினர் தமது ஆறு நம்பருக்குப் பதிலாக நபியவர்கள் கற்றுத்தந்த இஸ்லாத்தின் ஐந்து கடமைகள், ஈமானின் ஆறு விடயங்கள், இக்லாஸ் ஆகியவற்றை தமது அடிப்படை விதிமுறைகளாக ஆக்கியிருக்க வேண்டும். ஆனால் எனக்குத் தெரிந்தவரை தப்லீக் பெரியார்கள் எவருமே இந்த ஹதீஸின் விளக்கம் பற்றிப் போதிப்பது கிடையாது. ஒரு முறை ரியாத்திலுள்ள ஒரு மஸ்ஜிதில் தவ்ஹீத் - ஷிர்க் பற்றிப் பேசியபோது இவர்கள் அங்கிருந்து வெளியேறிச் சென்றமை எனக்குத் தெரியும். இதைவிட மோசமான விடயம் இவர்கள் தவ்ஹீத் பற்றிப் பேசுபவர்களையும், அது சம்பந்தப்பட்ட புத்தகங்களையும் தரக்குறைவாகப் பேசி அவற்றை வாசிக்கக் கூடாது எனத் தடுத்த சம்பவங்களும் எனக்குத் தெரியும்.

லாயிலாஹ இல்லல்லாஹ் எனும் கலிமாவுக்கு இவர்கள் வஸ்த்துக்களால் ஆகும் என்ற தீய எண்ணத்தை உள்ளத்திலிருந்து அகற்றி அல்லாஹ்வால்தான் அனைத்தும் ஆகும் அவனே அனைத்தையும் படைத்தவன், உணவளிப்பவன், காப்பவன் என்ற நம்பிக்கையைக் கொண்டு வருவதே நோக்கம் என்று விளக்கம் கொடுக்கின்றனர். இந்த விளக்கம் குறையுள்ளதாகும். அல்லாஹ்வால்தான் அனைத்தும் ஆகும் என நம்புவதால் மாத்திரம் ஒருவனிடத்தில் ஈமான் வந்து விட மாட்டாது. அல்லாஹ்வை மாத்திரமே வணங்க வேண்டும். இபாதத் விடயத்தில் யாருக்கும் எந்தப் பங்கும் கொடுத்தால் அது ஷிர்க்காகும். நபிவழிக்கு மாற்றமாக நடந்தால் அது பித்அத் வழிகேடாகும் என்ற விடயத்தையும் நம்பி நடக்கும்போதே அவன் முஃமினாக முடியும். (பதாவா உதைமீன் -கஸ்ப் பக்கம் 12)

10- <u>ஷைக் ஸஃத் அல் ஹுஸைன். (மார்க்க சட்ட ஆலோசகரும் முன்னாள் தப்லீக் ஆதரவாளரும்) தப்லீக்கைப் பற்றி...</u>

நான் சுமார் எட்டு வருடங்களாக தப்லீக் அமைப்பில் பங்குபற்றுபவனாக இருந்தேன். நான்

அவதானித்தவரை அவ்வமைப்பு தனது தஃவத் முறையிலோ, அதில் போதிக்கப்படும் விடயங்களிலோ மார்க்கத்திற்கு ஒத்ததாக இல்லை. டில்லியிலுள்ள நிழாமுத்தீன் பகுதியில் ஏராளமான தர்ஹாக்களில் பல்வேறு இணைவைப்புக்கள் இடம்பெற்றும் இந்த 40 வருட காலமாக அதை ஒழிக்க எவ்வித முயற்சியும் அவர்களால் எடுக்கப்படவில்லை. அதிலுள்ள பெரியார்கள் சூபிகளாதலால் அதை மறைமுகமாக ஆதரிக்கின்றார்கள். ஏனெனில் கப்ர் வணக்கத்ததை ஆதரித்து இப்பெரியார்கள் தமது உரைகளிலும் ஆங்காங்கே சொல்வதுண்டு. இவர்களது பயான் நிகழ்ச்சியெல்லாம் கதைகள், சம்பவங்களை மையமாக வைத்தே பெரும்பாலும் நிகழ்த்தப்படுகின்றன. இவர்கள் கப்ர் வணக்கத்தை ஆதரிக்கின்றார்கள் என்பதற்கு டில்லி தப்லீக் மர்க்கஸிலும், பாக்கிஸ்த்தான் ட்ரைவிந் மர்க்கஸிலும் சூடான் தப்லீக் மர்க்கஸிலுமுள்ள தர்ஹாக்கள் இத்தனை வருட காலமாக அகற்றப்படாமலிருப்பதே அங்கு நடக்கும் அனாச்சாரங்கள் பற்றி இவர்கள் கண்டு கொள்ளாமலிருப்பதே மிகப்பெரிய ஆதாரமாகும்.

இதற்கு நிறைய ஆதாரவாளர்கள் இருக்கின்றார்கள் என்பதால் இது ஷரீஅத் அங்கீகாரம் பெற்றதென்று ஒரு போதும் சொல்லிவிட முடியாது. ஏனெனில் அல்லாஹ் ஒரு வசனத்தில்...

'அவர்களில் அதிகம் பேர் அல்லாஹ்வுக்கு இணைவைத்த நிலையிலேயே அவனை விசுவாசித்திருக்கின்றனர். (ஸூரா யூஸுப் பக்கம் 106) என்கின்றான்.

நாளை மறுமையில் ஒவ்வொரு நபியும் தமது உம்மத்துடன் வரும்வேளை சில நபியுடன் இரு மனிதர்கள் சிலருடன் ஒரே ஒருவர் மாத்திமே வருவர். நூஹ் நபி 950 வருடங்கள் தஃவத் செய்தும் ஒரு சிலரையே தம்முடன் சேர்க்க முடிந்தது. எனவே அதிக ஆதரவாளர்கள் இருந்தால் அவ்வமைப்பு சரியானதென்றோ குறைந்த ஆதரவாளர் உள்ள அமைப்பு போலியானதென்றோ ஒரு போதும் முடிவெடுக்க முடியாது.

அதேபோன்று அதிக மக்கள் திருந்தி வாழ்வதற்கும் இபாதத் செய்பவர்களாக மாறியதற்கும் இந்த அமைப்பு காரணமாகும் என்பதாலும் இதை அப்படியே நியாயப்படுத்தி விட முடியாது. ஏனெனில் ஒரு காலத்தில் நமது முஸ்லிம் சமூகத்தின் பெரும் பகுதியினர் இஸ்லாத்துக்குப் புறம்பான பாவச்செயல்களில் தாராளமாக மூழ்கிய நிலையிலேயே இருந்தனர். வணக்க வழிபாடுகள் எதிலும் அக்கறை கிடையாது. இவ்வாறான ஒரு நிலையில் இந்த தப்லீக் அமைப்பு தாம் தொழுகைக்கு மக்களை அழைக்கும் அமைப்பு எனும் பெயரில் மக்கள் மத்தியில் அறி முகமாகியதால் தக்வா பயபக்தி, அல்லாஹ்வின் அச்சம் உள்ள இபாதத்களில் ஆர்வம் கொண்ட பாமர மக்கள் இதன் ஆழ அகலங்களைச் சரிவர ஆராயாமலேயே இதற்கு பேராதரவு வழங்க முற்பட்டனர். அதேபோல் இம்மக்களிடம் வெறும் மார்க்கப்பற்றும், இறையச்சமும் இருந்ததேயன்றி இவ்வமைப்பின் கொள்கை கோட்பாடுகள் சரியானதுதானா? என இஸ்லாமிய ஒளியில் உரசிப்பார்த்து ஆராயுமளவுக்கு அவர்களுக்குப் போதிய இஸ்லாமிய அறிவும் இருக்கவில்லை. அதேபோல் அன்றைய கால கட்டத்தில் இஸ்லாத்தின் பக்கம் அழைக்க இதைத் தவிர வேறு அமைப்புக்களும் பெரிதாக இருக்கவில்லை. அதனால் காலத்தால் முந்திய தப்லீக் அமைப்பு மாத்திரமே இஸ்லாமிய தஃவத் செய்யும் ஒரே அமைப்பு எனும் நிலையே அன்று நிலவியது. இன்றும் கூட இந்த நிலமைகள் முழுமையாக மாற்றமடையவில்லை. அனேக முஸ்லிம்களுக்கு போதிய மார்க்க அறிவு இல்லை. உலக விடயத்தில் இவர்கள் முன்னேறிய அளவில் பத்திலொரு பகுதியேனும் மார்க்க அறிவு விடயத்தில் இவர்கள் கவனம் செலுத்துவதில்லை. எனவே தங்கத்தை இனம் காணத் தெரியாதவன் 'மின்னுவதெல்லாம் பொன்' என்று சொல்வதைப் போல இவர்களும் தப்லீக் அமைப்பின் வெளிச் செயல்பாடுகளை மாத்திரம் அவதானித்து விட்டு போதிய மார்க்க விளக்கமின்மையால் இதுதான் சரியான இஸ்லாமிய அமைப்பு எனத் தமக்குத்தாமே தீர்ப்பளித்துக் கொள்கின்றனர். போதாக்குறைக்கு இவர்களின் தலைமைகள் இவர்களுக்குப் போதிப்பவைகளும் தூய குர்ஆன் ஹதீஸ் போதனைகளில்லை. இவர்கள் இஸ்லாமிய ஆர்வம் கொண்ட பாமர மக்கள். இவர்களை நாம் குற்றம் கூற முடியாது இவர்களையும் வழிகெடுத்த முழுக்குற்றத்தையும் நாளை மறு மையில் தப்லீக்கின் டில்லி, ட்ரைவிந்

பெரியார்களே சுமக்க வேண்டியேற்படும்.

அதே போல் சவூதியிலும் ஏனைய அரபு நாடுகளிலுமுள்ள பல மார்க்க அறிஞர்கள் இதன் உண்மை நிலையை விளங்கி இதற்கு ஆதரவு வழங்குவதாகக் கூறி இவர்கள் இவ்வமைப்புக்குப் பலம் சேர்க்கின்றனர். எனக்குத் தெரிந்தவரை சவூதியிலுள்ள எந்த மார்க்க அறிஞரும் இதில் வெளிக்கிளம்பிச் சென்று அதிலுள்ளவற்றைப் பார்த்துவிட்டு இன்றும் அதற்கு ஆதரவு வழங்கிக் கொண்டிருக்கவில்லை. ஒரு சிலர் இதில் வெளிக்கிழம்பிச் செல்லாமல், அதில் நடக்கும் நிகழ்வுகளை நோக்காமல் ஆராயாமல் அதற்கு ஆதரவாகப் பேசியிருக்கலாம். அது தவிர இதிலே வெளிக்கிளம்பிச் சென்ற உலமாக்கள் எவரும் இதிலுள்ள மார்க்க முரண்பாடுகளைக் கண்ணால்க் கண்டு விட்டு அதை விட்டும் தம் தொடர்பைத் துண்டிக்காமல் இருந்ததில்லை. இதற்குச் சான்றுகள் ஏராளம் ஏராளம். இதில் இன்றும் வெளிக் கிழம்புபவர்கள் போதிய மார்க்க அறிவற்ற பாமர அரபிகள் சிலரே. அவர்கள் இதன் ஆழம் அகலம் பற்றித் தெரியாதவர்கள் அவர்களது செயற்பாடு எப்படி ஆதாரமாக முடியும். ஒரு மனிதனுக்கு நோயில்லையென அவனது நன்பன் சொல்ல, இல்லை இவன் நோயாளியென அவனைச் சோதித்த வைத்தியர் சொல்கின்றார். இந்நிலையில் யார் பேச்சை உண்மைப்படுத்துவது.?

அப்துர்ரஸ்ஸாக், ஸாலிஹ் லுஹய்தான், பௌஸான், ஸாலிஹ் கதயான், போன்ற எத்தனையோ பேரறிஞர்கள் இதில் வெளிக்கிளம்பிச் சென்றுவிட்டு பின்னர் இதன் மறுபக்கத்தை, சுய ரூபத்தை அறிந்ததன் பின் அதை அரபு உலகுக்குத் தோலுரித்துக் காட்டினர். அவர்களின் ரகசிய ஸூஃபிச அழைப்பு பற்றியும் ரகசிய பைஅத் பற்றியும் அதிலுல்ல எண்ணிலடங்காத ஷிர்க்கான பித்அத்தான விடயங்கள் பற்றியும் மக்களுக்கு விளக்கியிருக்கின்றனர். ஏன்? நானும் முன்பு தப்லீக் அமைப்புக்கு அதரவு நல்கிக் கொண்டு அதில் செல்ல மக்களைத் தயார்படுத்திக் கொண்டிருந்தேன். தப்லீக்கில் உள்ள அந்த மார்க்க முரணான விடயங்கள் தெளிவாகியதன் பின்னர் இந்த ஜமாஅத்தை விட்டும் விலகிக் கொண்டேன். (-இவண் ஸஃது அல்ஹுஸைன் நூல்: கஷ்புஸ்ஸிதார்)

மேற்படி உலமாக்களின் கருத்துக்களையும், வாக்கு மூலங்களையும் அவர்கள் தப்லீக்குக்கு ஆதரவளிக்காததன் காரணங்களையும் பார்த்தோம். இவர்கள் சாதாரண உலமாக்களல்ல. மாபெரும் மேதைகள். சவுதியிலுள்ள இஸ்லாமியக் கல்வியைத் துறை வாரியாகக் கற்றறிந்த இலச்சக்கணக்கான உலமாக்களில் நுண்ணறிவும் அனுபவமும் நிறையப்பெற்ற ஒருசிலரை மாத்திரம் தெரிவு செய்து உருவாக்கப்பட்டதுதான் இந்த உலமாக்கள் ஒன்றியம். இதில் அங்கத்துவம் பெறும் அனைவருமே இந்த தப்லீக் அமைப்புப் பற்றி இப்படிச் சொல்லியிருக்கின்றார்கள். தமது கூற்றை குர்ஆன் ஹதீஸ், மற்றும் நடை முறை உண்மைகளைக் கொண்டு நிரூபித்தும் காட்டியிருக்கின்றார்கள். நடுநிலையாகச் சிந்திப்போருக்கு இப்போது தெளிவு கிடைத்திருக்கும் என நம்புகின்றேன். இருப்பினும் தப்லீக் முக்கியஸ்தர்களும் மேலிடங்களும் இப்படிக் கூறலாமல்லவா?.. அதாவது அரபு உலமாக்கள் அனைவருமே வஹ்ஹாபிகள். அவர்கள் மத்ஹபுகளைப் பின்பற்றக் கூடாது என்பவர்கள். நாமோ ஹனபிகள், ஷாபிகள் நாம் இந்த விடயத்தில் அவர்கள் பேச்சைக் கேட்கக் கூடாது என்று கூறிப் பாமர மக்களைத் திசை திருப்ப முயற்சிக்கலாமல்லவா? ஆதலால் இலங்கை இந்தியாவில் இருக்கும் ஆரம்பகால தப்லீக் தீவிர ஆதரவாளர்களாயிருந்து தற்போது அதிலுள்ள ரகசியங்களை அறிந்ததன் பின்னர் அதை விட்டு வெளியேறி குர்ஆன் ஹதீஸின் பக்கம் மக்களை அழைத்துக் கொண்டிருக்கும் உலமாக்கள் இந்த தப்லீக் பற்றிக் கூறியுள்ள சில கருத்துக்களையும் தருகின்றேன்.

1- <u>ஷைக் இஹ்திஸாம் ஹஸன் காந்திஹ்லவி தேவ்பந்தி அவர் கள் தப்லீக்கைப் பற்றி...</u>

இவர் இல்யாஸ் மௌலானாவின் சகோதரியின் கணவராவார். மிக நீண்ட காலத்தைத் தப்லீக்கில் கழித்த இவர் அக்காலத்தில் இல்யாஸ் மௌலானாவின் வலது கையாக இருந்தவர். இவர் சொல்கின்றார். டில்லி நிஜாமுத்தீன் மஸ்ஜிதில் செயற்படும் தப்லீக்

ஜமாஅத் எனது அறிவுக்கும் ஆய்வுக்கும் எட்டியவரை குர்ஆன் ஹதீஸின் படியோ ஷைஹ் வலிய்யுள்ளாஹ் திஹ்லவி, மற்றும் ஏனைய உலமாக்கள் சுட்டிக்காட்டியது போலோ நடக்கும் ஒரு அமைப்பல்ல. எனவே இதில் ஈடுபடும் உலமாக்கள் முதல்வேலையாக இதனை குர்ஆன் ஹதீஸின் அடிப்படையில் - ஸலபுஸ்ஸாலிஹீன்களின் வழிமுறையில் ஆக்கியாக வேண்டும். முஹம்மது இல்யாஸ் மௌலானா காலத்தில் வகுக்கப்பட்ட விதிமுறைகள் ஒழுங்குகளின் படியே இது இன்றும் செயற்படுகின்றது. ஸுன்னாவின் அடிப்படையிலல்ல. அத்துடன் அன்று இல்லாதிருந்த எத்தனையோ மறுக்கப்பட வேண்டிய பித்அத்தான விடயங்களும் இன்று இதனுடன் சேர்ந்து வில் எது நாண் எது எனத் தெரியாதளவுக்கு இரண்டறக் கலந்து விட்டது. இதைச் சுட்டிக்காட்டுவது என் கடமை. அதற்காகவே இதைச் சொல்கின்றேன். (அவரது 'ஸன்தகி கேஸிராத் முஸ்தகீம்' எனும்நூலிலிருந்து')

2- <u>ஷைக் அப்துர்ரஹீம் ஷாஹ் தேவ்பந்தி அவர்கள் தப்லீக்கைப் பற்றி...</u>

இவர்களும் நீண்ட காலம் இல்யாஸ் மௌலானா, அவரது புதல்வர் மற்றும் யூஸுப் மௌலானா ஆகியோருடன் தப்லீகில் ஈடுபட்டவர்கள். இவர்கள் சொல்கின்றார்கள்.

'தப்லீக்கைப் பற்றி அதிலுள்ள முரண்பாடுகள் பற்றிச் சொல்ல வேண்டியது என் கடமை என்பதால் சொல்கின்றேன். தாயிகளுக்கு இருக்க வேண்டிய மார்க்க அறிவு எதுவுமே இல்லாதவர்களெல்லாம் மக்கள் மத்தியில் பகிரங்க பயானில் இந்த தப்லீக்கின் சிறப்புப் பற்றி எல்லை கடந்து புகழ்ந்து பேசுவதும், ஏனைய மார்க்கச் சேவையில் ஈடுபடுவோரையெல்லாம் குறைபட்டு கேலி செய்யும் போக்கையும் இவர்களிடம் நான் அவதானித்தேன். இது பற்றி நான் எவ்வளவோ எடுத்துக் கூறியும் அவர்கள் கேட்டபாடில்லை. ஒருவர் வைத்தியராகவோ வைத்தியத் தாதியாகவோ கூடப் பணி புரிவதாயின் அவரிடம் அதற்குரிய தகுதி தகைமைச் சான்றிதழ் போன்றவை இருக்கின்றனவா? எனக் கூர்ந்து அவதானிக்கும் சமூகம் மார்க்க விடயத்தில் மாத்திரம் இப்படிப் பேசாமடந்தையாக இருக்கின்றது. யார் எதைச் சொன்னாலும் எதிர்க்கேள்வி கேட்காது ஏற்றுக் கொள்ளும் மக்களின் பலவீனமே இவர்களை இந்த அளவுக்கெல்லாம் பேச வைத்துள்ளது. ஓரிரு தடவைகள் தப்லீக்கில் நீண்ட வக்தில் சென்று விட்டால் தாம் தீனைப் பற்றி எல்லாம் தெரிந்து விட்டோம் எனும் எண்ணம் இவர்களுக்கு ஏற்பட்டு தப்லீக்கை முறையாக விமர்சிப்பவர்களையெல்லாம் தகாத வார்த்தைகளால் தூற்றி தீனை விட்டும் தூரமானவர்கள் - வெளியேறியவர்கள் என்றெல்லாம் பத்வாக் கொடுக்கும் நிலைக்கு வந்து விடுகின்றார்கள். இந்த அமைப்பு முழுக்க முழுக்க ஸுன்னாவின் அடிப்படையில்தான் இயங்குகின்றதென்றால் அதைத்தக்க ஆதாரங்களைக் கொண்டு நிரூபித்துக் காட்டுங்களேன்.! இந்த அமைப்பு மாத்திரம் தான் நபி வழி அமைப்பு என்றால் ஸஹாபாக்களின் காலம் தொட்டு இல்யாஸ் மௌலானாவின் காலம் வரை தீனுடைய வேலை உலகில் நடைபெறவில்லை என்றல்லவா கூறவேண்டியேற்படும்? ஏனெனில் ஸஹாபாக்களும் இந்த அமைப்பில் தஃவாச் செய்யவில்லையே!! .இவர்கள் வகுத்த விதிமுறைகளுக்கேற்ப நடக்கவில்லையே! (உஸுலு தஃவத்கே தப்லீக் ப :61)

3- <u>ஷைக் சைபுர்ரஹ்மான் ஹிந்தி அவர்கள் தப்லீக் பற்றி...</u>

இந்த உம்மத்தின் யஹுதிகள் ஷைகுகள் ஆவார்கள். ஸுன்னத் வல் ஜமாஅத்தினரின் விரோதிகளான, இவர்கள் குறுட்டுத் தனமாக தமது மத்ஹபுகளைப் பின்பற்றுபவர்கள். ஆனால் தப்லீக் அமைப்பினரும் குறுட்டுத்தனமாக ஏன் எதற்க்கென்றில்லாமல் தமது பெரியார்களையும், பெரியார்கள் குறுட்டுத்தனமாக ஹனபி மத்ஹபையும், பல்வேறு தரீக்காக்களையும் பின்பற்றுபவர்களாகவே இருக்கின்றார்கள்.

இவ்வாறே தப்லீக் கார்க்கூன்களிடத்திலும் இந்த நிலை ஏற்பட ஆரம்பித்து அவர்களும் தப்லீக் பெரியார்களை ஒரு வகை தெய்வீக பக்தியுடன் கண்ணியம் கொடுக்க ஆரம்பித்து அவர்கள் சொல்வதையெல்லாம் வேத வாக்கு என நம்ப ஆரம்பித்து அவர்கள் போதிக்கும்

பித்அத்துக்களையும் ஷிர்க்கான விடயங்களையும் மார்க்கம் எனும் பெயரில் மக்கள் மத்தியில் அவிழ்த்து விட்டு மக்கள் இதில் வெளிக்கிளம்புவது கட்டாயம் என்று அல்லாஹ் கடமையாக்காதவற்றை இவர்களாகவே மக்களுக்குக் கடமையாக்கி அதற்கு ஆதரவளிக்காதவர்களையெல்லாம் வசை பாட ஆரம்பித்து விடுகின்றனர். எனவே இவர்கள் தமது பித்அத் தை விட்டு விலக வேண்டும். இவர்கள் இவற்றைப் புரிந்து கொள்வார்களாக. (நள்ரா ஆபிரா எனும் நூல் ப: 57)

## தப்லீக் அமைப்பினரிடத்தில் இருக்கும் சிறப்பம்சங்கள் .

தப்லீக் அமைப்பிலே தம்மை ஈடுபடுத்திக் கொண்ட நம் சகோதரர்களிடத்தில் நபியவர்கள் கற்றுத்தந்த, ஸஹாபாக்களிடம் காணப்பட்ட பல அருங்குணங்களும் நிறையவே இருக்கின்றன. அவற்றில் சிலவற்றையும் இங்கு சொல்ல வேண்டுமென என் மனம் விரும்புகின்றது. எனவே சுருக்கமாசச் சொன்னால்...

1- <u>மஸூராவின் அடிப்படையில் செயற்படுதல்.</u>

மஸூராவின் (ஆலோசனை) அவசியத்தை வலியுறுத்தி அல்குர்ஆனும் அல்ஹதீஸும் பல்வேறு இடங்களில் போதிக்கின்றன. இவ்விடயத்துக்கு ஏனைய எவரையும் விட தப்லீக் அமைப்பினரிடமே அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகின்றது. மஸூராவில் முடிவெடுக்கப்பட்டால் தனக்கு விருப்பமில்லாவிடினும் அதற்குக் கட்டுப் படல், அதை அமுல்ப்படுத்த அயராது பாடுபடல் போன்றவற்றைக் கூறலாம்.

2- <u>அமீருக்குக் கட்டுப்பட்டு நடக்கும் மனப்பாங்கு.</u>

நபியவர்கள் போதித்த மற்றுமொரு வழிமுறைதான் இது. தனக்கு விருப்பமில்லாத ஒரு விடயத்தில் அமீர் ஈடுபடும் போது கூட அதற்காக அவரை எதிர்த்து ஒற்றுமையைக் குலைத்து விடாமல் -- ஹராமான ஒன்றைச் செய்யுமாறு நம்மை வற்புறுத்தாத வரைக்கும் அவருக்குக் கட்டுப்பட்டு வாழுமாறு நபியவர்கள் போதித்துள்ளார்கள். அமீருக்குக் கட்டுப்பட்டு நடப்பதில் இவர்களிடம் சில நேரங்களில் ஷரீஅத்தின் வரையறையை மீறும் நிலை நிலவினும் பொதுவாக இவர்களது மேலிட அமீர்களுக்கு இவர்கள் கட்டுப்பட்டமைதான் இவ்வமைப்பின் அபார தீவிர வளர்ச்சிக்கு மற்றுமொரு காரணமாகும். மேலிட அமீர்மார் இவர்களுக்குச் சரியான குர்ஆன் ஹதீஸ் வழி காட்டல்களை வழங்கவில்லையென்பது தனி விடயம். ஏனைய அமைப்பினர் இவ்விடயத்தில் நபியவர்களின் ஸுன்னாவைக் கடைப்பிடிக்காமையே பல்வேறு சில்லறைப் பிரச்சினைகள் ஏற்பட சில இடங்களில் வழி வகுக்கின்றன.

3- <u>சுறுசுறுப்பான செயற்பாடும் விடா முயற்சியும்.</u>

இந்தப் பண்புதான் இவர்களது அமைப்பு மூலை முடுக்கெல்லாம் பட்டி தொடியெல்லாம் பரவுவதற்குக் காரணமாகும். ஒருவரைச் சந்தித்து அவர் 3 நாள் வெளிக்கிழம்பப் பெயர் தந்து விட்டால் மறுபடி சளைக்காமல் பல தடவைகள் அவரைச் சந்தித்து இவர்களது தொல்லை தாளாமல் 3 நாள் சென்று வந்தவர்களும் இருக்கின்றார்கள். அந்தளவுக்கு இவர்களிடம் இருக்கும் அயராத உழைப்பு விடாமுயற்சி போன்றன பாராட்டத் தக்கவையாகும்.

4- <u>தம் சொந்த பொருளை நேரத்தை செலவு செய்தல்.</u>

ஒருவரைத் தஷ்க்கீல் பண்ணுவதற்காக தமது பணம் வாகனம் ஆகியவற்றைச் செலவு செய்து தமது வேலை வெட்டிகளைக் கூட ஒதுக்கி விட்டு இவர்கள் பாடுபடுவது பாராட்டத்தக்க தொன்றாகும். இது நபியவர்களின் வழிமுறையாகும்.

5- <u>தமது தப்லீக் பணியின் போது ஏற்படும் கஷ்டங்களைச் சகிக்கும் மன நிலை.</u>

தப்லீக்கில் செல்வோர் சில வேளை பெரிய செல்வந்தராக, பட்டதாரியாக, அதிகாரியாக இருக்கலாம் இருப்பினும் அவரும் வேறுபாடின்றி தமது அந்தஸ்த்து கௌரவத்தை ஒதுக்கி வைத்து விட்டு சாதாரண மனிதரிடம் செல்லல், அவர் ஏசினாலும் கூட சகித்துக் கொள்ளல் போன்றனவும் பாராட்டத்தக்க விடயங்களாகும்.

6- <u>வீடுவீடாகத் தேடிச்சென்று அலைந்து தப்லீக் மேற்கொள்ளல்.</u>

இதுவும் நபியவர்கள் கடைப்பிடித்த தஃவா முறையாகும். தஃவாப் பணியின் அழைப்பு முறை விசாலமானது. இதைப் புத்தகம் வானொலி, தொலைக்காட்சி என விரிந்து பரவலாகச் செய்ய அனுமதியிருப்பினும் வீடு வீடாகத் தேடிச்சென்று தனிப்பட்ட முறையில் சந்தித்துப் பேசுவதில் அதிக நன்மைகளும் அனுகூலங்களும் உள்ளன. இது இன்று ஏனைய அமைப்பினரால் கைவிடப்பட்டதன் விளைவு குர்ஆன் ஸுன்னாவின் பக்கம் அழைக்கும் தஃவாப்பணியின் அபார வளர்ச்சி தடைப்பட்டுள்ளதென்றே கூற வேண்டும்.

7- <u>பள்ளிவாயலை மையமாகக் கொண்ட தஃவா நிகழ்சிகள்.</u>

தப்லீக் சகோதரர்கள் தமது நிகழ்சிகளை நடத்த பள்ளிவாயல்களைக் கேந்திரஸ்தலமாகப் பயன்படுத்துவது அவர்களது தப்லீக்கின் வளர்ச்சிக்குரிய மற்றுமொரு காரணமாகும். பள்ளிவாயல்களில் மக்களை ஒன்று சேர்ப்பதால் பல்வேறு விதமாக சாதகமான அனுகூலங்கள் உள்ளன. நபியவர்களின் காலத்தில் கூட பள்ளி வாயல்கள் தொழும் இடமாக மாத்திரமல்லாது கல்விக் கூடங்களாகவும் ஆலோசனை பீடமாகவும், போர்ப்பயிற்சி முகாமாகவும் இன்னும் பல்வேறு தேவைகளுக்காகவும் பயன்படுத்தப்பட்டமை ஆதாரப்பூர்வமான உண்மையாகும். குர்ஆன் ஹதீஸ் போதனையின் பக்கம் அழைக்கும் சகோதரர்கள் இவ்விடயத்தில் கவனயீனமாக இருப்பதும் அவர்களின் தஃவா முன்னேற்றத்துக்குத் தடையாக இருக்கின்றது. பள்ளிவாயல் என்பது பொது இடம். முஸ்லிம்கள் அனைவருக்கும் அதில் பங்குண்டு. எனவே குர்ஆன் ஹதீஸ் அடிப்படையில் இஸ்லாத்தின் பக்கம் அழைக்கும் அனைவருக்கும் பள்ளியில் தஃவத் நிகழ்ச்சிகள் செய்ய உரிமையுள்ளது. அதற்கு எவரேனும் தடையாக இருப்பது அல்லாஹ்விடத்தில் மிகப் பெரிய தண்டணைக்குரிய குற்றமாகும். எனவே பள்ளிவாயல் நிர்வாகிகள் இதனைக் கவனத்தில் கொண்டு இவ்விடயத்தில் அல்லாஹ்வைப் பயந்து செயற்படக் கடமைப்பட்டுள்ளனர்.

## பணிவான வேண்டுகோள்!!

இதுவரைக்கும் தப்லீக் அமைப்பினரிடம் இருக்கும் குர்ஆன் - ஸுன்னாவுக்கு மாற்றமான சில நடவடிக்கைகள் பற்றியும் அவர்களிடம் காணப்படும் நற்செயல்கள் சிலவற்றைப் பற்றியும் அறிந்தோம். இவைகளைச் சுட்டிக்காட்டியமை அவ்வமைப்பினரின் மீது கொண்ட ஆத்திரத்தினாலோ, காழ்ப்புணர்ச்சியினாலோ சத்தியமாக ஏற்பட்டவையல்ல. ஏனெனில் நான் தனிப்பட்ட வகையில் தப்லீக் அமைப்பினரின் சில நடவடிக்கைகளை, செயற்பாடுகளை மனதார நேசிக்கின்றேன். பாராட்டுகின்றேன். எம் அனைவரின் ஒரே நோக்கம் நாம் அல்லாஹ்வின் அன்புக்குரியவர்களாக ஆக வேண்டும். அவனது அன்பையும் அருளையும் பெற்றவர்களாக முஃமின்களாக மரணிக்க வேண்டும். நபியவர்களது ஷபாஅத்தைப் பெற்று அவர்களது தோழர்கள் புடை சூழ கவ்தர் எனும் ஆற்றில் சொர்க்கத்தில் நீரருந்த வேண்டும். இவைதாமே எம் அனைவரினதும் ஆசை இலட்சியம்! அப்படியானால் இவையனைத்தையும் பெற ஆசையிருப்பின் அல்குர்ஆன் வழியிலும், நபியவர்களின் ஸுன்னாவின் போதனைப்படியும் நடக்க வேண்டியிருக்கின்றதே! கண்பார்வையற்ற குருடன் ஒருவன் குளிர்பானம் என நினைத்துக் கொண்டு பேதி மருந்தை

அருந்த எத்திக்கும் போது நாம் தடுத்து நிறுத்துகின்றோம் ஏன்! நமது மனிதாபிமானம் அவ்வாறு செய்யத் தூண்டுகின்றது. எமது மனச்சாட்சி எம்மை உறுத்துகின்றது. இது ஒரு தார்மீகக் கடமை என எம் உள்மனம் போதிக்கின்றது. அதேபோல்தான் இன்று எம் சில சகோதரர்கள் மார்க்க அறிவில் போதிய தெளிவற்ற காரணத்தால் நபிவழி என நினைத்துக் கொண்டு நாசவழியை நாடிச் செல்கின்றார்கள். எனவே இதைச் சுட்டிக் காட்டுவது எமது கடமையல்லாவா?. இதற்காக இதைச் சொன்னவரைக் கோபிப்பது முறையா? நியாயம்தானா?. நிச்சயமாக இல்லை. அல்லாஹ்வின் விருப்பமே பெரிது, நபியின் ஸுன்னாவே எம் உயிர் என நினைக்கும் எவரும் இதற்குப்பின் ஸுன்னாவின் வழியில் நடக்க முடிவு செய்ய வேண்டியுள்ளது. பித்அத்துக்களையும் ஷிர்க்கான விடயங்களையும் அவை எங்கிருந்து எவரிடமிருந்து வந்தாலும் புறக்கணிக்க வேண்டியுள்ளது. இதுவே என் கோரிக்கையும் அவாவுமாகும். முடிவெடுப்பது வாசகர்களான உங்கள் கைகளில்...

எனவே இந்தப் பிரசுரத்தில் கூறப்பட்ட விடயங்கள் பற்றி தப்லீக் சகோதரர்கள் சிந்திக்கக் கடமைப்பட்டுள்ளனர். தமது தவறுகளைத் திருத்திக் கொண்டு நபிவழிப்படி அவர்கள் தப்லீக் செய்ய முடிவெடுப்பார்களாயின் அதை விட இவ்வுலகிலும் மறுமையிலும் சிறந்ததொரு காரியம் வேறு எதுவும் இருக்க முடியாது. தப்லீக் மேலிடம் இதற்கெல்லாம் சம்மதிக்காத பட்சத்தில் அந்தந்த பகுதிகளில் உள்ள தப்லீக் உலமாக்கள், கார்க்கூன்கள் ஆகியோர் தமக்குள் மஸூராச் செய்து நபி வழிக்கு மாற்றமான விடயங்களைத் தவிர்த்து அவர்களின் வழிகாட்டல்ப்படி தப்லீக் செய்யக் கடமைப்பட்டுள்ளார்கள்.

இவை எவற்றையுமே காதில் வாங்கிக் கொள்ளாத அளவுக்கு தப்லீக் பெரியார்களின் ஏவலாளர்களாக ஆகி விட்டவர்கள் தயவு செய்து நபிவழிப்படி தவ்ஹீதையும் குர்ஆன் ஹதீஸையும் போதிக்கும் - அதன் பக்கம் அழைக்கும் அமைப்புக்களை தாறுமாறாகப் பேசி, இல்லாத அவதூறுகளைக் கூறி மக்கள் மத்தியில் குழப்பத்தை விளைவித்து அல்லாஹ் கோபத்துக்கு ஆளாகிவிடாமல் தன் பாட்டுக்கு தப்லீக் செய்து கொண்டிருப்பது அவர்களது கடமையாகும். அதுவே அவர்களுக்கு ஆரோக்கியமானதும் கூட.. இதனை மீறி அவர்கள் மேற்கொள்ளும் செயற்பாடுகள் அனைத்தையும் இஸ்லாத்துக்கு எதிராக மேற்கொள்ளப்படும் எதிர்ப்பாகவே கணிக்கப்பட வேண்டியுள்ளது.

## நம் கடமை என்ன ?

தப்லீக் ஜமாஅத்தில் மேற்படி ஷைகுமார்களின் பித்அத்தான செயற்பாடுகளில் உடன்பாடில்லாத தன்னார்வத் தொண்டர்களான - மக்களை நல்வழிப்படுத்துவதை மாத்திரம் குறிக்கோளாகக் கொண்ட தப்லீக் கார்க்கூன்களைப் பொறுத்தவரைக்கும் உங்களுக்கு அல்லாஹ்வின் பயம் இருப்பின் ரஸூலுல்லாஹ் மீது உண்மையான அன்பிருப்பின் குர்ஆன் ஹதீஸுக்கு மாற்றமான தப்லீக் பெரியார்களின் செயற்பாடுகளை நிராகரித்து விட்டு நபிவழிப்படி தப்லீக் செய்யுங்கள். அல்லது சேர்ந்து செய்வோம் வாருங்கள். உங்கள் கொள்கையினை மாற்றிக் கொள்ளுமளவுக்கு உங்களுக்கு மனம் இடம் கொடுக்காவிட்டால் - தப்லீக் பெரியார்களின் சொற்படியே அச்சரம் பிசகாமல் நடப்போம் என்பதில் பிடிவாதமாயிருந்தால் நீங்கள் ஸுன்னாவைப் பின்பற்றவில்லை. ஷைக்மார்களைப் பின்பற்றுகின்றீர்கள் என்பது உண்மையாகி விட்டது. எனவே 'தீன் என்பது அல்லாஹ்வுடைய கட்டளை, நபியவர்களுடைய வாழ்க்கை வழிமுறை. இந்த வாழ்க்கை எம்மிடமும் பூரா மனித சமூதாயத்திடமும் வருவதற்காக முயற்சி செய்வோம் வாருங்கள்' என்று பள்ளியில் இஃலான் செய்வதை விட்டு விடுங்கள். ஏனெனில் இது பொய்யல்லவா? நீங்கள்தான் நபிவழிப்படி நடக்கவில்லையே! குருவழிப்படியல்லவா நடக்கின்றீர்கள்? இதை நம்பி ஒருவன் இதுதான் நபிவழியென நினைத்து நடந்தால் அதன் குற்றம் யாருக்கு?

அவ்வாறே நபிவழிப்படி தப்லீக் செய்யும் சகோதரர்கள் தப்லீக் கார்க்கூன் சகோதரர்களுடன் நல்ல முறையில் நட்புடன் நடந்து கொள்ள வேண்டியிருக்கின்றது. அப்போதுதானே

நபிவழியை அவர்களுக்கு எடுத்துச் சொல்ல முடியும்?. அவர்கள் எம்மைப் புறக்கணிப்பதால் நாமும் ஏன் அவர்களைப் புறக்கணிக்க வேண்டும்.? அதே போல் இவர்களிடம் காணப்படும் நற்பண்புகள் ஸுன்னாவின் அடிப்படையிலான விடயங்கள் சிலதை ஸுன்னாவின் வழி நடப்பதாகக் கூறும் சில தாயிகள் எடுத்து நடக்கத் தவறி விடுகின்றனர். உதாரணத்துக்கு வீடு வீடாகச் சென்று தஃவாச் செய்தல், பள்ளியை மையமாகக் கொண்டு செயற்படல் போன்றவற்றைக் கூறலாம். நாம் பள்ளிவாயலில் தஃவத் செய்யத் தவறியதால் இன்று பள்ளிகள் அனைத்தையும் இவர்கள் ஆக்கிரமித்துக் கொண்டார்கள். எனவே நபிவழியை நம்வழியாக எடுத்து அதன் பால் நடந்து - மக்களை அழைத்து நேர்வழிகாட்டி இம்மையிலும் மறுமையிலும் அல்லாஹ்வின் அன்பையும் அருளையும் நபியவர்களின் ஷபாஅத்தையும் பெற்று வெற்றியடைய வல்ல அல்லாஹ் எம் அனைவருக்கும் அருள் பாலிப்பானாக. ஆமீன்.

ஸல்லல்லாஹு வஸல்லம அலா நபிய்யினா முஹம்மதின் வஆலிஹீ வஸஹ்பிஹீ அஜ்மஈன். வல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன்.


இஸ்லாமிய வழிகாட்டல் நிலையம்.
சவூதி அரேபியா அல்ஜுபைல்

الطرق الصوفية بالأمس واليوم
الإعداد : محمد جليل عبد الغفور


<u>மார்க்க அறிவின் அவசியம் பற்றி...</u>

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாவது...

-மார்க்க அறிவைப் படிக்கச் செல்பவருக்குச் சுவனம் செல்லும் பாதையை அல்லாஹ் இலகு படுத்துகின்றான். -திர்மிதி

-மார்க்கத்தைப் படிக்கச் செல்பவருக்கு மலக்குகளும் ஏனைய உயிரினங்களும் கடலிலுள்ள மீன்களும் பாவ மன்னிப்புக் கோருகின்றன. -திர்மிதி

-மார்க்கக் கல்வியைத் தேடிப் படிப்பது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கடமையாகும். -இப்னுமாஜா

-மார்க்கக் கல்வி தேடி ஒருவர் புறப்பட்டுச் சென்றால் அவர் மீண்டும் வரும்வரை இறை வழியில் போர் புரிந்தவர் போலாவார்.

-அறிவைக் கற்றவருக்கும் கற்காதவருக்குமிடையில் வேறுபாடு எனக்கும் உங்களில் மிகத் தாழ்ந்தவருக்கும் இடையிலுள்ள வேறுபாட்டைப் போன்றதாகும். -முஸ்லிம்

-நேர் வழியின் பக்கம் எவர் வேறொருவருக்கு அழைப்பு விடுக்கின்றாரோ அந்த (நேர்வழி பெற்றவர்) செய்யும் நன்மையின் அளவு இவருக்கும் கிடைக்கும். -புகாரி முஸ்லிம்

-அல்லாஹ் எந்த நபருக்கு நன்மை செய்ய விரும்புகின்றானோ அவருக்கு மார்க்க விடயங்களைக் கற்றுக் கொடுப்பான். (கற்றுக் கொள்ளும் மனோபாவத்தைக் கொடுப்பான்) -புகாரி

-மார்க்க அறிவுள்ளவர்கள் குறைந்து விடுவது இறுதி நாள் ஏற்படுவதற்கான அடையாளமாகும். -திர்மிதி

-எனது ஹதீஸ்களில் ஒன்றைக் கற்றறிந்து பின் அதனைப் படித்தபடியே பிறர் ஒருவருக்குக்கும் கற்றுக் கொடுக்கும் மனிதருக்கு அல்லாஹ்வின் சோபனம் உண்டாகட்டும். -புகாரி

-எவர் அறிவைக் கற்கப் புறப்பட்டு விட்டாரோ அது அவரது கடந்த காலப் பாவங்களுக்குக் குற்றப்பரிகாரமாகி விடுகின்றது. -திர்மிதி

-மனத்தூய்மையின்றி பெருமையடிப்பதற்காகவோ, பிறருடன் அகம்பாவமாக நடப்பதற்கோ, அறியாதோரைக் கேலி செய்யும் நோக்கிலோ கல்வியைக் கற்பவர் நரகத்துக்கே செல்வார். -திர்மிதி

அல்லாஹ் அறிவை உயர்த்தி விடுவதென்பதற்கு மனிதரின் இதயத்திலிருந்து அதை பறித்து விடுவதென்று அர்த்தமல்ல எனினும் கற்றவர்களை மரணிக்கச் செய்வதன் மூலமே அறிவைப் பறித்துக் கொள்வான். ஒரு காலத்தில் கற்றவர்கள் அனைவரும் மரணித்ததன் பின் மக்கள் மார்க்க அறிவில் போதிய ஞானமற்ற அறிவிலிகளைத் தலைவர்களாக்கிக் கொண்டு (குர்ஆன் ஹதீஸ் போதனையைப் புறக்கணித்து) அவர்களின் சொற்படி நடந்து அவர்கள் போதிய அறிவற்ற நிலையில் சொல்லும் தீர்ப்புகளை எடுத்து நடந்து அனைவருமே வழிகெட்டு விடுவார்கள். -முஸ்லிம்.

இஸ்லாமியக் கல்வியை குர்ஆன் ஹதீஸிலிருந்து கற்போம். அதன் வழி நடப்போம். அதன் பால் அழைப்போம். அறிவைத் தேடு...... உலகம் உன்னைத் தேடும்.


அன்புடன்...
முஹம்மது ஜலீல்.
இஸ்லாமிய ஊழியன்.



மென்னூல் ஆக்கம் :
**jafarsafamarva**
**www.islamkural.com**


